# நன்னூல் உரைவளம்

16

## இடைச்சொல்லியல்

இரா. கண்ணன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

International Institute of Tamil Studies

# நன்னூல் உரைவளம் (தொகுதி-16)

# இடைச்சொல்லியல்

பதிப்பாசிரியர்

முனைவர் இரா. கண்ணன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

இரண்டாம் முதன்மைச் சாலை,

தரமணி, சென்னை-600 113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Nannūl uraivalam (Vol. 16)**<br>**Iṭaiccoliyal** |
| Author | : | Dr. R. Kannan<br>Associate Professor<br>Dept. of Tamil Language<br>Presidency College, Chennai - 5 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 704 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 11 Point |
| No. of Pages | : | 208 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 90/- (Rupees Ninety only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>New No. 47, Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai - 600 026.<br>Phone : 23621409 |
| Subject | : | Tamil Grammar |

**முனைவர் கரு.அழ. குணசேகரன்**
**இயக்குநர்**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை — 113**

# அணிந்துரை

வாழ்வை இலகுவாக்க மனிதன் படைத்துக் கொண்ட கருவிகள் பற்பல. அவற்றுள் மொழியும் ஒன்று. ஆயினும் பிற கருவிகள் யாவற்றுள்ளும் தலையாயதும் தனிச் சிறப்புடையதும் மொழியே. மொழி இன்றேல் வேறு எக்கருவியும் தோன்றியிராது. மொழி, மனத்தின் உயிர்; பிறபிற கலைகளுக்கும் கருவிகளுக்கும் தாய். மாந்தரின வாழ்விற்கு இத்துணை இன்றியமையாக் கருவியாய்த் திகழும் மொழி, உலகம் யாண்டும் பரவிக் கிடக்கும் மக்களினக் குழுக்களிடையே பலவாகக் காணக் கிடக்கிறது. அம் மொழிக்கூட்டத்திடையே பன்மீன் நாப்பண் விளங்கு பால்மதி போல் இலங்குவது தமிழ்.வரலாற்றுக்காலந் தொடங்கி இன்றளவும் தன்னேரிலாத் தகைசால் சீர்மை யுடன் திகழும் இத் தமிழ்மொழியின் இலக்கிய இலக்கணப் பரப்பு அளந்திட்டுக் கூற ஒண்ணா விரிவினை உடையது. காலமும் கடும்புனலும் கொண்டது போக எஞ்சியன சிலவே யாயினும், மறைந்து போனவற்றிற்கு மாற்றாகக் காலந்தோறும் தோன்றிய பனுவல்களோ பற்பல. அழகு தமிழில் அமைந்த அந்நூல்களின் பொதிபொருளைப் பழகு தமிழில் விளக்க எழுந்த உரைகளும் மிகப் பல.

ஒல்காப் புகழுடைய தொல்காப்பியத்திற்குப் பின் ஏறத்தாழ பன்னிரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றி இன்றளவும் தனிச் சிறப்புடன் வாழ்வது நன்னூல். பெயருக்கு ஒப்பவே தமிழின் இலக்கணத்தை நலம்படவும் நயம்படவும் இயம்பும் இந்நூலிற்கு உரைவிளக்கம் கண்டோர் பலர். அவ்வுரைகளுள் பல, தம் பெயரை மட்டுமே நிறுத்தி தாம் மாய்ந்தன. வேறுபலவோ, அச்சேறியபோதும் இன்று காணுதற்கும் அரியனவாய் உள்ளன. இவ்வாறு காலச் செலவால் அருகி உள்ள உரைகளை அரிதின் முயன்று திரட்டி இருபத்திரண்டு தொகுதிகளாக உருவாக்கப் பெற்றுள்ள இவ்வுரைவளத்தினை எம் நிறுவனத்தின் வழி வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம்.

மயிலை நாதர், சங்கர நமச்சிவாயர்,சிவஞான முனிவர், கூழங்கைத் தம்பிரான், விசாகப் பெருமாளையர், ஆ.முத்துத் தம்பிப்பிள்ளை, இராமானுச கவிராயர், கா.கோபாலாசாரியார், தி.கோ.ரங்காசாரியார், ஆறுமுக நாவலர், வகுமாரசாமிப்புலவர், வைமு.சடகோபராமானுசாசாரியார், சே.கிருட்டிணமாசாரியார்,

பவானந்தம் பிள்ளை, கொ.இராமலிங்கத் தம்பிரான், கா.நமச்சிவாய முதலியார், மோசகு பொன்னையா ஆகியோரின் உரைகளும், என்றி பவர் செய்த பாயிரப் பகுதிக்கான ஆங்கில மொழிபெயர்ப்பும், இலாசரசு செய்த எழுத்ததிகாரம் மற்றும் சொல்லதிகாரத்திற்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இவ்வுரை வளத்தில் திரட்டப் பெற்றுள்ளன. நன்னூலைத் தழுவி இயற்றப் பெற்று ஒரு நூற்றாண்டு காலத்திற்கும் மேல் மீள்பதிப்புக் காணாத திருப்பாற்கடல்நாதன் கவிராயரின் தமிழிலக்கணம், சி.அருணாசலம் பிள்ளையின் TAMIL GRAMMAR, இ.சாமுவேல் பிள்ளையின் தொல்காப்பிய நன்னூல், G.U.போப்பின் காண்டிகையுரை, ஆ.முத்துத் தம்பிப்பிள்ளையின் நன்னூல் இலகுபோதம் ஆகியன இவ்வுரைவளத் திரட்டில் தனித்தனி நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன. இவ்வுரைவளம் தமிழன்னைக்கு அணி சேர்க்கும் என்பதில் ஐயமில்லை.

நன்னூல் உரைவளத்தின் பதிப்பாசிரியரான **முனைவர் இரா.கண்ணன்**, சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த் துறையில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இவர் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். இவ் உரைவளத்தின் பதிப்புப் பணியோடு எழுத்துக் கோர்த்தல், மெய்ப்புத் திருத்தல், வடிவமைத்தல் உள்ளிட்ட அனைத்துப் பணிகளையும் தனியொருவராக இருந்து சிறப்புடன் செய்துள்ள இப்பதிப்பாசிரியரை மனதார வாழ்த்துவதுடன் நன்றி நவிலுங் கடப்பாடுமுடையேன்.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு. இரா. சிவக்குமார் இ.ஆ.ப.** அவர்களுக்கு நன்றி.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீவெங்கடேஸ்வரா ஆப்செட் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**கரு.அழ. குணசேகரன்**

# முன்னுரை

தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐம்பெரும் பிரிவுகளை உடையது என்பர். இது பொது வழக்கே யாயினும் பிற்காலத்தில் பாட்டியல் அனைய புதுப்புது இலக்கணப் பிரிவுகள் தமிழில் தோன்றி நன்கு செழித்து வளர்ந்துள்ளன. அவ்வாறே எழுத்து, சொல் முதலான ஒவ்வொரு பிரிவினிலும் தோன்றிய இலக்கண நூல்களும் பல உள. தொல்காப்பியம், எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்களை உடையதாதலான் அது மூன்றிலக்கணம் கூறும் நூல் என்பது போதரும். ஆயினும் பொருளதிகாரத்துள் அமைந்து கிடக்கும் உவமவியலும், செய்யுளியலும் முறையே அணியிலக்கணத்தையும், யாப்பிலக்கணத்தையும் வேண்டுமளவிற்கு விளக்கிக் கூறுதலான், அந்நூல் ஐந்திலக்கண நூலுமாம். தொல்காப்பியத்திற்குப் பின் பல்வேறு இலக்கண நூல்கள் எழுந்தன. பழங்காலத்தில் பெருவழக்காய் வழங்கிய அவ்விலக்கண நூல்கள் இன்று வீழ்ந்து போயின. இன்று வழங்கப் பெறும் இலக்கண நூல்களுள் வீரசோழியம், தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த முதல் ஐந்திலக்கண நூலாகும். ஆயினும் அந்நூல் வடமொழி சார்பினைப் பெரும்பான்மை தழுவிச் செல்வதால் அது அவ்வளவாகப் போற்றப்படுவதில்லை. வீரசோழியத்திற்குப் பின் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டளவில் பவணந்தி முனிவரால் நன்னூல் இயற்றப்பட்டது. நன்னூல் ஐந்திலக்கணம் கூறிய நூல் என்றும், இன்று எழுத்து மற்றும் சொல்லிலக்கணம் உரைக்கும் பகுதி மட்டுமே கிடைக்கப் பெறுகிறது என்றும் எஞ்சிய பகுதிகள் காலச் செலவால் அழிந்திருக்கக் கூடும் என்றும் கருதுவாரும் உண்டு. இன்று வழக்கில் உள்ள நன்னூலின் மொத்த நூற்பாத் தொகை நானூற்று அறுபத்திரண்டு. பாயிரம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என மூன்று பகுதிகளாய் அமைந்துள்ள இந்நூலின்கண் பாயிரம் 55 நூற்பாக்களையும், எழுத்ததிகாரம் 202 நூற்பாக்களையும் சொல்லதிகாரம் 205 நூற்பாக்களையும் பெற்றுள்ளன. பாயிரம், பவணந்தியால் இயற்றப்பட்டதன்று என்பர்.

நன்னூலிற்கு இன்றுகாறும் எழுந்துள்ள உரைகள் பல. ஆயினும் மயிலைநாதரின் உரையே முதலில் எழுந்த உரையாகும். மயிலைநாதர் நன்னூல் ஆசிரியர் பவணந்தியின் சமகாலத்தவர். மயிலைநாதரின் உரை நன்னூலிற்கு இன்று வரை எழுந்துள்ள உரைகள் யாவற்றிலும் தலைமை யானது, தனிச் சிறப்புடையது. இவ்வுரைக்குப் பின் பல உரைகள் எழுந்தன. அவற்றுள் சில அச்சேறாமலேயே இறந்தன.வேறுசில அச்சேறிய பின்னும் இன்று அருகியுள்ளன.இவ்வாறு காலச்செலவான் அருகி வரும் உரைகளைக் காத்தற் பொருட்டும், தமிழாய்விற்குத் தக்க கருவி நூலாய் அமையும் திறம் நோக்கியும் இவ்வுரைவளம் உருவாக்கப் பெற்றுள்ளது.இதில் நன்னூலின் சிறந்த உரைகள் அனைத்தும் திரட்டப் பெற்றுள்ளன.

நூற்பா அதன்கீழ் சீர் பிரிக்கப் பெற்ற நிலையில் நூற்பா,ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு, இலாசரசு செய்த மூல நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு, தொல்காப்பியம் முதல் சுவாமிநாதம் வரையிலான இலக்கண நூல்களில் இருந்து தரப்பெற்றுள்ள ஒப்புமைப் பகுதி,நன்னூல் உரைகள் ஆகியன இவ்வுரைவளத்தில் நிரல்படுத்தப்பட்டுள்ளன. மூலநூலின் பாட வேறுபாடும், மயிலைநாதர் உரையின் பாடவேறுபாடும் காட்டப் பெற்றுள்ளன.

நன்னூலிற்கு விருத்த யாப்பில் எழுந்த ஆண்டிப்புலவர் உரை அழிந்து போனது. அச்சேறிய உரைகளுள் பல இன்று அருகி பெயரளவில் மட்டுமே அறியப் பெறுபவையாக உள்ளன. அச்சேறிய அரிய உரைகளையேனும் காக்கும் வகையில் இவ்வுரைவளம் இருபத்திரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றது. தமிழ் உலகம் ஏற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் முனைவர் ***கரு.அழ.குணசேகரன்*** அவர்களும், துணை இயக்குநர் **திரு.க.ந.வீரபாகு சுப்பிரமணியன்** அவர்களும் நன்னூல் உரைவள நூல்கள் அனைத்தையும் விரைந்து வெளிக் கொணர்ந்தனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வுரைவளத் திரட்டுப் பணியின்போது பல்லாற்றான் உதவிய சென்னை இராணிமேரி கல்லூரிப் பேராசிரியை **முனைவர் ந.கலைவாணி** அவர்களுக்கும், உற்றுழி உதவிய அனைவர்க்கும் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்வதோடு, தோன்றாத் துணையாய் இருந்து எம்மை இயக்கி வரும் தில்லைக் கூத்தனின் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிந்து அமைகிறேன்.

10.11.2010
சென்னை–55

**இரா.கண்ணன்.**

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அவி | – | அவிநயம் |
| இ –ள் | – | இதன் பொருள் |
| இல.விள | – | இலக்கண விளக்கம் |
| உ –ம் | – | உதாரணம் |
| உணர்–ற்று | – | உணர்த்துதல் நுதலிற்று |
| எ–டு | – | எடுத்க்காட்டு |
| எ–று | – | என்றவாறு |
| எ–னின் | – | என் நுதலிற்றோ எனின் |
| சுவாமி | – | சுவாமிநாதம் |
| சூ–ம் | – | சூத்திரம் |
| தொல். எழு | – | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல். சொல் | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல். பொருள் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொன் | – | தொன்னூல் விளக்கம் |
| நச் | – | நச்சினார்க்கினியர் |
| ந.பா | – | நவநீதப் பாட்டியல் |
| நேமி | – | நேமிநாதம் |
| பா–டு | – | பாட வேறுபாடு |
| பொ–ரை | – | பொழிப்புரை |
| மா.அலங் | – | மாறனலங்காரம் |
| முத்து.வீ | – | முத்துவீரியம் |
| வீர | – | வீரசோழியம் |
| வெண், பாட் | – | வெண்பாப் பாட்டியல் |

# குறிப்பு

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ ,ஒ, ஓ, ஔ,
ஃ – இவ்வெழுத்துக்கள் முறையே

a , ā , i , ī ,u ,ū ,e, ē ,ai ,o, ō, au, kh

எனவும்.
க், ங் , ச், ஞ் , ட் ,ண், த், ந் , ப், ம், ய், ர் , ல் ,
வ், ழ், ள், ற் , ன் - வ்வெழுத்துக்கள் முறையே

k, ṅ , s, ñ , t , ṇ, ṭ , n , p ,
m , y , r , l , v ,ḷ ,ḻ, ṟ , ṉ, kh

எனவும் ஆங்கில எழுத்துப்பெயர்ப்பில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

# இடைச் சொல்லியல்

**419.** வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள விசைநிறை யசைநிலை
F ¿ ¥bgbd © gF â Æ‰ [1]றனித்திய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்

வேற்றுமை வினை சாரியை ஒப்பு உருபுகள்
தம் தம் பொருள இசைநிறை அசைநிலை
குறிப்பு என் எண் பகுதியில் தனித்து இயல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின் முன் ஓர் இடத்து
ஒன்றும் பலவும் வந்து ஒன்றுவது இடைச்சொல்

vēṟṟumai viṉai sāriyai oppu urupukaḷ
ṭaṭṭam poruḷa isainiṟai asainilai
kuṟippu eṇ pakuṭiyiṉ ṭaṉiṭṭu iyal iṉṟip
peyariṉum viṉaiyiṉum piṉ muṉ ōritaṭṭu
oṉṟum palavum vanṭu oṉṟuvaṭu itaissol

---

பாட வேறுபாடு:-

1.தனித்தியல்பின்றி

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### Chapter iv. particles
### particles defined

*Particles, which consist of eight kinds, viz, case-endings terminations and medials of Verbs, increments, significant words, metrical expletives, expletives (proper) and indefinite terms, have no independent use but are inserted one or more at a time, in the body of nouns and verbs, or before or after these words.*

## ஒப்புமைப் பகுதி

இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே

(தொல். சொல்.: 249)

அவைதாம்
புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி யாகி வருநவும்
இசைநிறைக் கிளவி யாகி வருநவும்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்று
அப்பண் பினவே நுவலுங் காலை

(தொல். சொல்.: 250)

அவைதாம்
முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலுந்
தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்
அன்னவை யெல்லாம் உரிய வென்ப

(தொல். சொல்.: 251)

சாரியையாய் ஒன்றல் உருபாதல் தங்குறிப்பில்
நேரும் பொருளாதல் நின்றசையாய்ப் – போதல்
வினைச்சொற்கீ றாதல் இசைநிறைத்து மேவல்
இனைத்தே இடைச்சொல் அளவு

(நேமி.: 75)

இல்லைஉண் டுஆல்இல் இவைமுதலா
இடைச்சொற்களுக்கு ஓர்
எல்லை உண்டாக இயற்ற ஒண்ணா இசையும் பொருளும்
ஒல்லை உண்டாக நிற்கும் இடமும் தேர்ந்திவற்றொடொக்கச்
சொல்லை உண்டாக்குக என்பது நூலின் துணிபொருளே

(வீர.: 69)

**வேற்றுமை வினைசா ரியையொப் புருபுக**
**டத்தத் பொருள விசைநிறை யசைநிலை**
**யித்திற மேழிற் றனித்திய லின்றிப்**
**பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்**
**தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்**

**(இ.வி.: 251)**

**பெயர்வினை யிடத்துப் பிறப்ப திடைச்சொல்**

**(மு.வீ.: 643)**

**வேற்றுமை வின ஈசா ரியையொப் புருபுகள்**
**இசைநிறை யசைநிலை யிருமூன்று திறத்தன**

**(மு.வீ.: 644)**

**இடைச்சொல் தனிநிலை இன்றி முன்பின்**
**வினைபெயர் சேர்ந்து வேற்றுமை சாரியை**
**வினைஒப்பு உருபுகளும் விளங்குதம் பொருளவும்**
**இசைநிறைப் பனவும்அசை நிறைப்பனவும்**
**குறிப்பும் எனஎண் கூற்றவை என்ப**

**(தொ.வி.: 130)**

**உருபுசாரி யைவிகுதி இடைநிலையே இசைகொள்**
**ஒப்பசைதத் தம்பொருள்கோள் எழுத்தணவல் ஒன்பான்**
**கருதியவுந் தனித்தியலா தப்பெயரின் வினையின்**
**கடைஇடைமுன் னொன்றுபல வருதல் இடைச் சொல்லாம்**

**(சுவாமி.: 54: 1–2)**

## மயிலை நாதர்

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்னுதலிற்றோவெனின், ஒத்து நுதலியதூஉம் ஒத்தினது பெயருரைப்பவே விளங்கும்; ஆயின், இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், இடைச்சொற்களது இயல்பு உணர்த்திற்றாதலான், இடைச்சொல்லிய லென்னும் பெயர்த்து. மேலோத்தினோடு இதற்கு இயைபு என்னையோ வெனின், ஆதியில் நால்வகைச் சொற்களும் உணர்த்துவா னெடுத்துக் கொண்டார், அவற்றுள், இரண்டு உணர்த்தி அவற்றின் பின் நான்கிற்கும் பொதுவான அதனைச் **சிங்கநோக்கமாக** மேல் வருவனவற்றையும் தழுவ வைத்தார்; அதனால், மேலதனோடு இயைபுடைத்தென்க.

இவ்வோத்தினுள், இத்தலைச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இடைச்சொல்லினது இயல்பும் அதனது பாகுபாடும் உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.**:– வேற்றுமையுருபு வினையுருபு சாரியையுருபு உவமவுருபு இவைகளாகியும் தத்தம் பொருள் காட்டுவனவும் இசைநிறைப்பனவும் [1] அசை

---

பாட **வேறுபாடு**:–

**1. அசைநிறைப்பனவும்**

நிலையனவும் குறிப்பின் வருவனவு மென்னும் எட்டுப் பகுதியவாய்த் தாமாகத் தனித்து நடத்தலின்றிப் பெயர் வினைகளாம் இரண்டின் பின்னானும் முன்னானும் ஒரிடத்து ஒன்றானும் பலவானும் வந்துநிற்பது இடைச்சொல்லாவது, **எ–று.**

பிறதினிடத்தைச் சார்ந்து நடத்தலான் இடைச்சொல்லென்க.

அவற்றுள் வேற்றுமையுருபாவன: ஐ ஆல் முதலாயின; வினையுரு பாவன; அன் ஆன் அள் ஆள் முதலாயி; சாரியை யுருபாவன: அன் ஆன் இன் அல் முதலாயின; உவமவுருபாவன: போல புரைய முதலாயின; தத்தம் பொருள ஆவன: ஏ ஒ முதலாய்ப் பிரிநிலை முதலாகிய [1]பொருளைத் தோற்றிநிற்பன; இசைநிறை யாவன: ஏ ஒ முதலாயின; அசை நிலையாவன: மியா இக மோ மதி முதலாயின; குறிப்பாவன: விண்ணென, ஒல்லென, கல்லென முதலாயின.

"**அதுமன்,**" (புறநா. 147), "**அதுமற் றம்ம**", "**அதுமற் றம்மதானே**" எனவும், "**கொன்னூர்**" (குறுந். 138), "**ஓஒ வுவம னுறழ்வின்றி**" (கள.36) எனவும், பெயர்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. "**வருகதில்**", "**வருகதி லம்ம**" (அகநா. 276), "**வருகதி லம்ம தானே**" (புறநா. 147) எனவும், "**ஓஒ தந்தார்**", "**ஏஎ அம்பன் மொழிந்தனள் யாயே**" எனவும் வினைப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. தனித்தும் வருங்கொலென்னும் ஐயமறுத்தற்கு, '**தனித்தியலின்றி**' என்றா ரென்க.

'**வருவது**' என்னாது, '**வந்தொன்றுவது**' என்றதனால், இவற்றில், தம்மீறு திரிந்து நிற்கப் பெறுவனவும் சிலவுள வெனக்கொள்க ; அவை : மன் மன்னை, கொன் கொன்னை என வரும்.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

**எ–னின், 'இடை உரி அடுத்து நான்குமாம்'** என நிறுத்த முறையானே இடைச்சொல் லிலக்கணம் இவ்வியலால் உணர்த்துவான் தொடங்கி, அவை இத்துணைய இவ்வியல்பின என அவற்றின் பொதுவிலக்கணம் **உணர்–ற்று.**

**இ–ள்.:–** எழுவாயுருபு முதலிய எட்டு வேற்றுமையுருபுள் ★ ***பெயரும் பெயரது விகாரமுமாகிய எழுவாயும் விளியும் ஒழித்து ஒழிந்த ஐ முதலிய ஆறுருபுகளும்★***, பகுதி விகுதி இடைநிலை என்னும் தெரிநிலையும் குறிப்பும் ஆகிய வினையுருபுகளுள் ★***முதனிலைத் தனிவினைப்பெயரும் பொருளாதி அறுவகைப் பெயருமாகிய பகுதி ஒழித்து ஒழிந்த விகுதி★*** முதலிய வினை யுருபுகளும், ★***அன் ஆன் முதலிய சாரியை★*** யுருபுகளும், போல புரைய முதலிய உவமவுருபுகளும் பிறவாறு தத்தமக்கு உரிய பொருளை உணர்த்தி வருவனவும், வேறுபொருளின்றிச் செய்யுளிசை நிறைத்தலே பொருளாக வருவனவும்,

---

**பாட வேறுபாடு.:–**

**1. பொருள்தோன்றி நிற்பன**

அசைத்தலே பொருளாக நிற்பனவும், வெளிப்படையின் வரும் இவை போலாது குறிப்பின் வருவனவும் என்னும் எட்டுவகையினை உடையவாய்த் தனித்து நடத்தல் இன்றிப் பெயரின் அகத்தும் வினையின் அகத்தும் அவற்றின் புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்கள் ஆறனுள் ஓரிடத்து ஒன்றேனும் பலவேனும் வந்து அப்பெயர் வினைகட்கு அகத்துறுப்பாயும், புறத்துறுப் பாயும் ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது இடைச்சொல்லாம், எ-று.

தெரிநிலை வினையிடைநிலை போல ஏனை இடைநிலை சாரியைகட்கு வேறு பொருள் இன்றேனும், பெயர் வினைகட்கு இன்றியமையாது வருதலே பெரும்பால ஆதலின் அவற்றின் பொருளே பொருள் என்பது கருதி, இசைநிறை அசை நிலைகளைச் சாரவையாது முதற்கண் வைத்தார் என்க.

பெயரினும் வினையினும் என்ற உம்மையைப் பின் முன் என்பனவற்றோடும் கூட்டுக.

*★ இச்சொற்கள், முதற்கூறிய பெயர்ச்சொல் வினைச் சொற்களும் ஆகாது அவற்றின் வேறும் ஆகாது இடை நிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனக் காரணக்குறி பெற்றன. இது பாலைத்திணை நடுவுநிலைத் திணை எனப் பெயர்பெற்றது போலும் என்க.*

*அற்றேல், பாலைத்திணை நடுவுநிலைத் திணை என்றாய வாறு என்னையெனின் :- ஆசிரியர் தொல்காப்பியர்,*

*“நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு*
*முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே”*

*எனக் கூறியவழி, அங்ஙனம் நடுவுநிலைத்திணை என்னும் சொல்லே தன்காரணம் இனிது விளக்கி நிற்றலான், அது நடுவுநிற்றல் காரணத்தான் பெற்றபெயர் என்பது பெற்றாம். இன்னும் அவ்வாசிரியர் ஏனை நாற்றிணையும் முறையானே கூறி இறுதிக்கண் ஓதுதலான் இஃது அவற்றின் வேறு என்பது விளங்குதலானும், எஞ்ச நின்றது பாலையே யாகலானும்,*

*“நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்*
*படுதிரை வையம் பாத்திய பண்பே”*

*என நிலம் பகுத்தோதுங்கால் நடுவணது எனக் குறியிட்டமையானும் அங்ஙனம் பகுக்கப்படும் நிலங்களு மாகாது அவற்றின் வேறும் ஆகாது தனக்கு உரியநிலம் நடு நிகர்த்ததாய் நிற்றல்பற்றி நடுவுநிலைத் திணை எனக் குறியீடு பெற்றது எனக்கொள்க. இங்ஙனம் இதன் திறம் விரிக்கின் பெருகும். அது நிற்க.*

*இனி இடைநிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனக் காரணக்குறி போந்ததூஉமன்றித் தனித்து நடத்தல் இன்றிப் பெயர்வினைகளிடமாக நடத்தலின் இடைச்சொல் எனக்*

***காரணக்குறி*** ★ போந்தது எனினும் அமையும். அது முதனூலின் வழியாக நடக்கும் நூலை அங்ஙனம் கூறாது வழிநூல் என்றாற் போலப் பெயர்வினைகள் இடமாக நடக்கும் சொல்லை அங்ஙனம் கூறாது இடைச்சொல் எனப்பட்டது.

அங்ஙனமாயின் இடம் என இயற்சொல்லால் கூறாது இடை எனத் திரிசொல்லால் கூறியது என்னையெனின் :- இயற் சொல்லால் கூறின் இடப்பொருளை உணர்த்தும் சொல் எனப் பொருள்படும் ஆதலின் அதனோடு இதற்கு வேற்றுமை தோன்றற்கு என்க. எண்வகையுள் தோன்றாது ஒழிந்தன வருஞ் சூத்திரங்களான் உணர்க.

**வ–று.:** நம்பியை, நம்பியால், நம்பிக்கு என்புழிப் பெயரின் புறத்துறுப்பாய் ஐயுருபு முதலிய இடைச்சொல் ஒன்று வந்தது. தச்சன், தச்சச்சி, முடியினன் என்புழிப் பெயரின் அகத்துறுப்பாய் விகுதி இடைநிலை சாரியை இடைச்சொற்கள் பல வந்தன. வினைக்குறிப்பின் அகத்துறுப்பாய் பல வருவனவும் அன்ன.

நடந்தான், நடந்தனன் என்புழித் தெரிநிலை வினையின் அகத்துறுப்பாய் விகுதி இடைநிலை சாரியை யிடைச்சொற்கள் பல வந்தன. அவன், எவன், ஏனோன், ஏனையோன் எனவும் ; போல, புரைய எனவும்; சாத்தன் என்பான், சாத்தன் ஆயினான் எனவும் இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயராயும் வினையாயும் வினையிலக்கணையாயும் நிற்றலின் இவற்றின் பகுதி விகுதி முதலியவும் அன்ன, அதுமன், அதுமற்றம்ம எனவும்; "கொன்னூர்" " ஒஒ உவமன் உறழ்வின்றி" எனவும் பெயரின் புறத்து உறுப்பாய்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. வருகதில், ★***"வருகதில் அம்ம" எனவும்; ஓஒ தந்தார், "ஏயே அம்பல் மொழிந்தனள் யாயே" எனவும் ; தெரிநிலை வினையின் புறத்துறுப்பாய்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன*** ★. பிறவும் அன்ன. இவற்றுள் சில ஒரோவழி விகாரப்பட்டு. மன்கொன் எனற்பாலன மன்னை கொன்னை என வருவனவும் உள; அவையெல்லாம் '**புதியன புகுதலும் வழுவல**' என்பதன் பாற்படுத்துக.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** இடைச் சொல்லினது இயல்பும் அதன் பகுதியும் கூறுகின்றது.

**இ–ள்.: வேற்றுமை** – ஐ ஆல் முதலாகிய வேற்றுமை உருபும், **வினை** – அன் ஆன் அள் ஆள் முதலாகிய வினையுருபும், **சாரியை** –அன் ஆன் இன் அல் முதலாகிய சாரியை உருபும், **ஒப்புருபுகள்** – போலப் புரைய முதலாகிய உவமை உருபும், **தத்தம் பொருள்** – ஏ ஒ முதலாகிய பிரிநிலை முதலிய பொருளைத் தோற்றி நிற்கும் தத்தம் பொருளவும், **இசைநிறை** – ஏ ஒ முதலாகிய இசை நிறைப்பனவும், **அசைநிலை** – மியா இக மோ முதலாகிய அசைநிலையின் வருவனவும், **குறிப்பு** – கல்லென் விண்ணென ஒல்லென முதலாகிய குறிப்பின் வருவனவும், **எனெண்**

**பகுதியில்** – என்று சொல்லப்படும் எட்டுப் பகுதியவாய், **தனித்தியலின்றி** – தாமாகத் தனித்து நடத்தலின்றி, **பெயரினும் வினையினும்** – பெயரிடத்தினும் வினையிடத்தினும், **பின்முன் னோரிடத்து** – பின்னிடத்தாயினும் முன்னிடத் தாயினும் ஓரிடத்தாயினும், **ஒன்றும் பலவும் வந்து** – ஒன்றானும் பலவானும் வந்து, **ஒன்றுவ திடைச்சொல்** – பொருந்தி நிற்பது இடைச்சொல்லாம், **எ–று.**

**உ–ம்.:–**

“**அதுமன்**”, “**அதுமற்ற**”, “**அதுமற் றம்ம தானே**” எனவும் “**கொன்னூர்**” (குறு.138), “**ஓஒ வுவம னுறழ்வின்றி யொத்ததே**” (களவழி.36) எனவும் பெயர்க்குப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் இடைச்சொல் வந்தன. “**வருகதில்**”, "**வருகதி லம்ம தானே**" எனவும், “**ஓஒ தந்தார்**”, “**ஏஎ அம்பன் மொழிந்தனள் யாயே**” (திருமுருகு.217) எனவும் வினைக்குப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன.

தனித்து வருங்கொல் என்னும் ஐயமறுத்தற்குத் “**தனித்திய லின்றி**” என்றாரென்க.

வருவது என்னாது “**வந்தொன்றுவது**” என்றமையால் இவை தம்மீறு பிரிந்து நிற்கவும் பெறும். அவை மன், மன்னை; கொன், கொன்னை என வரும்.

பிறிதின் இடத்தைச் சார்ந்து நடத்தலான் இடைச்சொல் என்க

## விசாகப் பெருமாளையர்

**இது,** இடையுரி யடுத்து நான்குமாமென நிறுத்தமுறையால் இடைச்சொல் லிலக்கணம் இவ்வியலா லுணர்த்தத் தொடங்கி அவையித்துணையன இவ்வியல்பின என அவற்றின் பொதுவிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.:– வேற்றுமை (யுருபுகள்)** – ஐம் முதலிய வேற்றுமை யுருபுகளும், **வினை (யுருபுகள்)** – விகுதி முதலிய வினையுருபுகளும், **சாரியை (யுருபுகள்)** – அன் ஆன் முதலிய சாரியையுருபுகளும், **ஒப் (புருபுகள்)** போலப் புரைய முதலிய உவமையுருபுகளும், **தத்தம்பொருள** – தத்தமக்குரிய பொருளை யுணர்த்தி வருபவையும், **இசை நிறை** –செய்யுளிசை நிறைத்து வருபவையும், **அசைநிலை** – அசைத்தலே பொருளாக நிற்பவையும், **குறிப்பு**– இவைபோலாது குறிப்பினால் வருபவையும், **என்** – என்கிற, **எண்பகுதியின்** – எட்டு வகையினையுடையன வாய், **தனித்தியலின்றி** – தனித்து நடத்தலில்லாமல், **பெயரினும்** – பெயரினுள்ளும், **வினையினும்** – வினையினுள்ளும், **பின்முன்** – அவற்றின் பின்னு முன்னுமாகிய, **ஓரிடத்து** –ஆறனுளோரிடத்து, **ஒன்றும்**–ஒன்றாயினும், **பலவும்**–பலவாயினும், **வந்து**–வந்து, **ஒன்றுவது** – ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது, **இடைச்சொல்**– இடைச்சொல்லாகும், **எ–று.**

**வ–று.:–**

நம்பியை – பெயரின் புறத்துறுப்பாய் ஐயுருபு ஒன்று வந்தது. **முடியினன்** – பெயரினகத்துறுப்பாய் விகுதியு மிடைநிலையும் பல வந்தன. **உண்ணான்** – வினையிலகத்துறுப்பாய் விகுதி யுருபு

ஒன்று வந்தது. நடந்தனன் – வினையிலகத் துறப்பாய் விகுதியிடை நிலை சாரியை பலவந்தன, அதுவே, பொன்னி னாலோ, ஓ பெரியன், இனி மற்றொன்று எனப் பெயர்களுக்கும், வந்தானோகொன்றான், கூ கூ ஐயோ விறந்தான், சீ சீ போ, என வினைகளுக்கும் புறத்துறுப்பாய் முன்னும் பின்னும் ஒன்றும் பலவும் வந்தன. மற்றவைகளு மிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

இடைச்சொல்லாவதி யாது?

வேற்றுமை வினாசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள் விசைநிறை யசைநிலை
குறிப்பெனெண் பகுதியிற் றனித்திய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும் வந்தொன்றுவ திடைச்சொல்.

(வேற்றுமை வினை சாரியை ஒப்பு உருபுகள் தத்தம் பொருள் இசை நிறை அசைநிலை குறிப்பு என் எண் பகுதியின் தனித்து இயல் இன்றி பெயரினம் வினையினும் பின் முன் ஓர் இடத்து ஒன்றும் பலவும் வந்து ஒன்றுவது இடைச் சொல்.)

இ–ள்.:– ஐம்முதலிய வேற்றுமையுருபுகளும், விகுதிகளும், இடைநிலை களுமாகிய வினையுருபுகளும், அன் ஆன் முதலிய சாரியையுருபுகளும், போலப் புரைய முதலிய உவமவுருபுகளும், பிறவாறு தத்தமக்குரிய பொருளையுணர்த்தி வருபவையும், வேறுபொருளின்றி இசைநிறையே பொருளாக வருபவையும், அசைநிலையே பொருளாக நிற்பவையும், வெளிப்படையின் வரும் இவைபோலாது ஒலி அச்சம் விரைவு இவற்றைக் குறிப்பாலுணர்த்தி வருபவையும் என்னும் எட்டுவகையினை யுடையனவாய்த் தனித்து நடத்தலின்றிப் பெயரினகத்தும் வினையினகத்தும் அவற்றின் புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்களாறனு ளோரிடத்து ஒன்றாயினும் பலவாயினும் வந்து அப்பெயர்வினைகளுக்கு அகத் துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது இடைச் சொல் லாகும். எ–று.

அவை எத்தனை வகைப்படும்?

"வேற்றுமையுருபு, வினையுருபு, சாரியையுருபு, ஒப்புருபு தத்தம்பொருள், இசைநிறை, அசைநிலை, குறிப்பு என் எண்பகுதி."

இடைச்சொல் என்பதன் பெயர்க்காரணம் யாது.?

பெரும்பாலும் பெயருக்கிடையினும் வினைக்கிடையினும் வருதல்பற்றி அஃது இடைச்சொல் எனப்பட்டது.

இசைநிறையென்பது வேறுபொருளுணர்த்தாது செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது.

அசைநிலையென்பது வேறுபொருள் உணர்த்தாது பெயர்ச்சொல்லோடும் வினைச்சொல்லோடுஞ் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது. (அசைத்தல்–சார்த்துதல்.)

**வ–று.:–**

(1) குழையன் என்புழிப், பெயரினகத்துறுப்பாய் விகுதியிடைச் சொல் ஒன்று வந்தது. தச்சிச்சி, நிலத்தினன் என்புழிப், பெயரினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், இடைநிலையுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பலவந்தன.

(2) உண்ணாய் என்புழி, வினையினகத்துறுப்பாய் விகுதி யிடைச்சொல் ஒன்றுவந்தது. நடந்தான், நடந்தனன் என்புழி, வினையினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், இடைநிலையுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பலவந்தன.

(3) அதுமன், கொன்னூர் என்புழிப், பெயரின் புறத்துறுப்பாய்ப் பின்னுமுன்னும் ஒன்றுவந்தது. அதுமற்றம்ம, இனி மற்றொன்று என்புழிப், பெயரின் புறத்துறுப்பாய்ப் பின்னு முன்னும் பலவந்தன.

(4) வந்தானோ, ஐயோவிறந்தான் என்புழி, வினையின் புறத்துறுப் பாய்ப் பின்னுமுன்னும் ஒன்று வந்தது. கொன்றான் கூகூ, சீசீபோ என்புழி, வினையின் பறத்துறுப்பாய்ப் பின்னுமுன்னும் பலவந்தன.

## முகவை இராமானுச கவிராயர்

அதுவே, 'இயற்சொற் றிரிசொல் லியல்பிற்பெயர் வினை. யெனவிரண் டாகு மிடையுரியடுத்து நான்குமா' மென நிறுத்தமுறையே இடைச்சொல் இலக் கணம் இவ்வியலாலுணர்த்தத் தொடங்கி அவை இவ்வளவினை யுடையன இவ் வியல்பினை யுடையன என அவற்றின் பொதுவிலக்கணமுணர்த்திற்று, இச் சூத்திரம்.

**இ–ள்.:– வேற்றுமை(யுருபு)** – எழுவாயுருபு முதலிய எட்டு வேற்றுமை யுருபுகளுள் பெயரும் பெயரது விகாரமுமாகிய எழுவாயும் விளியு மொழித்து ஒழிந்த ஐ முதலிய ஆறு உருபுகளும், **வினையுருபு**– பகுதி விகுதி இடை நிலை யென்னும் வினையுருபுகளுள் பகுதியொழிந்த விகுதி முதலிய வினையுருபுகளும், **சாரியையுருபு** –அன் ஆன் முதலிய சாரியை யுருபுகளும், **ஒப்புருபுகள்** – போலப் புரைய முதலிய உவமையுருபுகளும், **தத்தம் பொருள** – தத்தமக்குரிய பொருளை யுணர்த்தி வருவனவும், **இசை நிறை** – வேறு பொருளின்றிச் செய்யுளிசை நிறைத்தலே பொருளாக வருவனவும், **அசைநிலை** – அசைத்தலே பொருளாக நிற்பனவும், **குறிப்பு** – (வெளிப்படையாய் வருமிவை போலாகாது) குறிப்பாற் பொருளுணர வருவனவும், **என்னெண் பகுதியின்**–என்னுமிவ் வெட்டு வகையினை யுடையவாய், **தனித்தியலின்றி** – தனித்து நடக்குந் தன்மையின்றி, **பெயரினும் வினையினும்**

– பெயர்ச்சொல்லிடத்தும் வினைச்சொல்லிடத்தும், **பின்முன்னோரிடத்து** - அவற்றின் பின்னாகவாயினு முன்னாகவாயினு மோரிடத்து, **ஒன்றும் பலவும் வந்து** – ஒன்றாயினும் பலவாயினும் வந்து, **ஒன்றுவதிடைச்சொல்** – (அப்பெயர் வினைகளுக்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும்) ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது இடைச்சொல்லாம், எ–று.

எனவே, தனித்து நடத்தலின்றிப் பெயர்வினைகளினிடமாக நடத்தலின் இடைச்சொல் லென்னுங் காரணக்குறி விளங்க நின்றமையுணர்க. அங்ஙன மாயின், இடச்சொல் என இயற்சொல்லாற் கூறாது இடையெனத் திரிசொல்லாற் கூறியதென்னின், இயற்சொல்லாற் கூறின், இடப்பொருளை யுணர்த்துஞ் சொல்லெனப் பொருள்படுமாதலின் அதனை யொழித்தற்கு இடைச்சொல் எனப்பட்டதென்க. இனிப் பெயருமாகாது வினையுமாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகர்த்ததாய் நிற்றலினிடைச் சொல் எனினும் அமையும். இனி முன்னும் பின்னும் வருமாயினும் பெரும்பாலும் இடையிலே வருதலால் இடைச்சொல்லென்பது ஆசிரியர் கருத்து. உருபுகளென்றதை, வேற்றுமை வினை முதலியவற்றொடுங் கூட்டுக.

வ–று.:–

நம்பியை, நம்பியால், நம்பிக்கு என்பவற்றில் பெயரின் புறத் துறுப்பாய் உருபிடைச்சொல் ஒன்று வந்தது. தச்சன், குழையன் என்பவற்றில் பெயரினுங் குறிப்பு வினையினும் அகத்துறுப்பாய் விகுதியிடைச் சொல்லொன்று வந்தது. தச்சிச்சி, நிலத்தினன் என்பவற்றில் அவ்விரண்டினும் அகத் துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும் இடைநிலை யுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பல வந்தன. நடந்தான், வந்தான், என்பவற்றில் இடைநிலை விகுதி யிடைச்சொற்கள் பலவந்தன. நடந்தனன், வந்தனன் என்ப வற்றில் அவற்றொடு சாரியையும் வந்தன. அவன் எவன் ஏனோன் ஏனையோன் என்பன இடைச்சொல் அடியாகப்பிறந்த பெயர்களாதலால், இவற்றின் பகுதி விகுதி முதலியனவும், போல புரைய என்பன இடைச் சொல்லடியாகப் பிறந்த வினை யெச்சங்களாய் நிற்றலின் இவற்றின் பகுதிவிகுதி முதலி யனவும், சாத்தனென்பான் சாத்தனாயினான் என்ப வற்றில் என்பான் ஆயினான் என்பன, வினையிலக் கணைகளாய் நிற்றலின் இவற்றின் பகுதி விகுதி முதலியனவும் அகத்துறுப்பாய் நின்ற பலவிடைச்சொற்கள். (இலக்கணை என்பதற்குப் பொருள் முன்னே சொல்லப்பட்டது) அதுமன், 'கொன்னூர்' எனப் பெயரின் புறத்துறுப்பாய்ப் பின்னும் முன்னு மொன்று வந்தது. 'அது மற்றம்ம', 'ஒ ஒ வுவமை யுறழ்வின்றி யொத்தது' இவற்றில் மற்று அம்ம எனவும் ஒ, ஒ எனவும் பின்னுமுன்னும் பலவந்தன. 'வருகதில்' 'ஓதந்தார்' என வினையின் புறத்துறுப்பாய்ப் பின்னும் முன்னும் ஒன்று வந்தது. 'வருகதில்லம்ம', 'ஏஎயம்பன்மொழிந்தனள்' என இவற்றில்

பின்னும் முன்னும் தில், அம்ம, ஏஏ எனவும் பல வந்தன. பிறவு மிவ்வாறே கண்டு கொள்க.

'என்றிசினோர்', 'அருங்குரைத்து' என வினைத்திரி சொல்லின் அகத்துறுப்பாய் வருவனவும் பொதுப்பட வந்தென்ற தினால், தில், மன், கொன் என்பன 'போகு கதில்ல' 'மன்னைச் சொல்' 'கொன்னைச்சொல்' என ஈறுதிரிந்து வருதலும், 'னகாரை முன்னர்' என எழுத்துச் சாரியை யீறுதிரிந்து வருதலுங் கொள்க. இன்னும், மாறு என்னுமிடைச்சொல் பெயராமாறு கூறுகிற தெனின், பெயராம் படி கூறுகின்றது என வருதலும், 'அனையை யாகன் மாறே சிறந்தோன்', பெயரன் பிறந்த மாறே', எனக் காரணப் பொருளுணர்த்தி மூன்றாவதன் பொருள்பட நிற்றலும், 'இயல்புளி கோலோச்சு மன்னவன்' எனவும், 'மந்திரவிதியின் மரபுளி வழாஅ அந்தணர் எனவும், உளி என்னுமிடைச் சொல் மூன்றாவதன் பொருளும் ஐந்தாவதன் பொருளும்பட நிற்றலுங் கொள்க.

**இடையெனப் படுப பெயரொடும் வினையொடு**
**நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே**
**அவைதாம் – முன்னும் பின்னு**
**மொழியடுத்து வருதலுந் தம்மீறு**
**திரிதலும் பிறிதவ ணிலைய லு**
**மன்னவையெல்லா முரியவென்ப**

என ஆசிரியர் தொல்காப்பியனார் – கூறுதலுங்காண்க. ஒன்றுவது இடைச்சொல் என முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– **வேற்றுமை** – (ஐ முதலிய) வேற்றுமை உருபுகளும், **வினை** – (விகுதி முதலிய) வினை உருபுகளும், **சாரியை** – (அன், ஆன் முதலிய) சாரியை உருபுகளும், **ஒப்பு உருபுகள்** – (போல முதலிய) உவமை உருபுகளும், **தத்தம்பொருள்** – தத்தமக்குரிய பொருளை உணர்த்திவருகிற ஏ ஓ முதலியவையும், **இசைநிறை** – (வேறு பொருளில்லாமற்) செய்யுளிசை நிறைத்தற்கே வருபவையும், **அசைநிலை** – அசையாய் வருதலே பொருளாக நிற்பவையும், **குறிப்பு** – (வெளிப்படையாய் வரும் இவை போலாமல்) குறிப்பினாற் பொருளுணர்த்தி வருபவையும், **என்** – என்கிற, **எண் பகுதியின்** – இவ்வெட்டுவகையை உடையனவாய், **தனித்து இயல் இன்றி** – தனித்து நடக்குந் தன்மையில்லாமல், **பெயரினும் வினையினும்** – பெயர்ச் சொல்லினிடத்தும் வினைச்சொல்லினிடத்தும், **பின்முன்** – (அவற்றின்) பின்னேயாயினும் முன்னேயாயினும், **ஓர் இடத்து** – ஓரிடத்தில், **ஒன்றும் பலவும்** – ஒன்றாயினும் பலவாயினும், **வந்து** –, **ஒன்றுவது** – ஒன்றுபட்டு நடப்பது, **இடைச்சொல்** –இடைச்சொல் ஆகும் எ –று.

குறிப்பு :–

அசைத்தல் – ஒரு பொருளும் உணர்த்தாமற் பெயர்ச் சொல் வினைச்சொற்களோடு சார்த்திச் சொல்லப்படுதல். 'இசை நிறை' 'அசைநிலை' என்னும் இரண்டும் வேறு பொருள் உணர்த்தாதன வாயினும், இசைநிறை – செய்யுளில் ஓசையை நிறைப்ப தென்றும், அசைநிலை – பெயர் வினைகளோடு சார்த்திச் சொல்லப்படுவதென்றும் வேறுபாடு அறிக.

வேற்றுமையுருபிடைச் சொற்கள் – பெயரியலிற் கூறப்பட்டன. வினையுருபிடைச் சொற்கள் – பதவியலிற் கூறப்பட்டன. பின் 'சாரியை' எனச் சொல்லுதலால், வினையென்றது – அது தவிர்ந்த மற்றையவற்றை, சாரியையிடைச் சொற்கள் – உருபு புணரியலிற் கூறப்பட்டன.

ஒப்புருபிடைச் சொற்கள்– பொதுவியலில் "போலப்புரைய" என்னுஞ் சூத்திரத்திற் சொல்லப்பட்ட எச்சங்களின் பகுதிகள்.

குறிப்பாற் பொருளுணர்த்தும் இடைச்சொற்கள் வருமாறு :– கோவென, சோவென, துடுமென, ஒல்லென, கஃறென, கடகடென, களகளென, திடுதிடென, நெறுநெறென, படபடென என்றாற்போல்வன – ஒலிக்குறிப்புப் பொருளைத் தரும் இடைச் சொற்கள். துண்ணென, துணுக்கென, திட்கென, 'திடுக்கென என்றாற்போல்வன – அச்சக் குறிப்புப் பொருளைத் தரும் இடைச்சொற்கள். பொள்ளென, பொருக்கென, ஞெரேலென என்றாற்போல்வன – விரைவுக் குறிப்புப் பொருளைத் தரும் இடைச்சொற்கள்.

குழையன், அது மற்றம்ம –பெயரின்பின் ஒன்றும் பலவும் வந்தன.

ஓ சாத்தன், இனி மற்றொன்று–பெயரின்முன் ஒன்றும் பலவும் வந்தன.

உண்ணாய், நடந்தனனே –வினையின்பின் ஒன்றும் பலவும் வந்தன.

அம்மா பெரிது, சீ சீ போ –வினையின்முன் ஒன்றும் பலவும் வந்தன.

தனித்து நடக்கும் ஆற்றலில்லாமற் பெயர் வினைகளோடு சேர்ந்து அவற்றினிடமாக நடத்தலால், இடைச்சொல் எனப் பட்டது. (இடம், இடை என்பன – ஒரு பொருளன). இனி, பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் ஆகாமல் அவற்றினும் வேறுமாகாமல் நடுத்தன்மையாய் நிற்கையால் இடைச்சொல் எனப்பட்டன எனினும் அமையும். இஃதன்றி, முன்னும் பின்னும் வருமாயினும், பெரும்பாலும் இடையிலே வருதலால், இடைச் சொல் என்பதும் பொருந்தும்.

உருபுகள் என்பதை வேற்றுமை வினைசாரியை என்ப வற்றோடுங் கூட்டுக.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:— வேற்றுமை (யுருபுகள்)** — ஐம் முதலிய வேற்றுமை யுருபுகளும், **வினை (யுருபுகள்)** – விகுதிகளும் இடைநிலைகளுமாகிய வினையுருபுகளும், **சாரியை (யுருபுகள்)** — அன் ஆன் முதலிய சாரியையுருபுகளும், **ஒப்புருபுகள்** — போலப் புரைய முதலிய உவமவுருபுகளும், **தத்தம் பொருள** — பிறவாறு தத்தமக்குரிய பொருளை யுணர்த்தி வருபவையும், **இசைநிறை**—வேறுபொருளின்றி இசை நிறையே பொருளாக வருபவையும், **அசைநிலை** — அசைநிலையே பொருளாக நிற்பவையும், **குறிப்பு** — வெளிப்படையின் வரும் இவை போலாது ஒலி அச்சம் விரைவு இவற்றைக் குறிப்பாலுணர்த்தி வருபவையும், **என் எண் பகுதியின்** — என்னும் எட்டு வகையினை யுடையனவாய், **தனித்து இயல் இன்றி** – தனித்து நடத்தலின்றி, **பெயரினும் வினையினும் பின் முன் ஓரிடத்து** – பெயரினகத்தும் வினையினகத்தும் அவற்றின் புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்களா றனுளோரிடத்து, **ஒன்றும் பலவும் வந்து ஒன்றுவது** – ஒன்றாயினும் பலவாயினும் வந்து அப்பெயர் வினைகளுக்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது, **இடைச்சொல்** – இடைச்சொல்லாகும், எ — று.

பெயர்ச்சொல் வினைச்சொற்களு மாகாது அவற்றின் வேறு மாகாது இடைநிகரனவாய் நிற்றலின், இடைச்சொல்லெனப் பட்டன; தனித்து நடத்தலின்றிப் பெயர் வினைகளிடமாக நடத்தலின், இடைச்சொல்லெனப்பட்டன வெனினும் அமையும்.

இசைநிறை யென்பது வேறுபொரு ளுணர்த்தாது செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது.

அசைநிலை யென்பது வேறுபொருள் உணர்த்தாது பெயர்ச் சொல்லோடும் வினைச்சொல்லோடுஞ் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது. (அசைத்தல் — சார்த்துதல்.)

வ—று.:—

(1) **குழையன்** என்புழிப், பெயரினகத்துறுப்பாய் விகுதியிடைச் சொல் ஒன்று வந்தது. **தச்சிச்சி; நிலத்தினன்** என்புழிப், பெயரினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், இடைநிலையுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பல வந்தன.

(2) **உண்ணாய்** என்புழி, வினையினத்துறுப்பாய் விகுதி யிடைச்சொல் ஒன்று வந்தது. நடந்தான், நடந்தனன் என்புழி, வினையினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், இடைநிலையுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பல வந்தன.

(3) **அதுமன், கொன்னூர்** என்புழிப் பெயரின்புறத்துறுப்பாய்ப்

பின்னுமுன்னும் ஒன்று வந்தது. **அதுமற்றம்ம, இனி மற்றொன்று** என்புழிப், பெயரின் புறத்துறுப்பாய்ப் பின்னு முன்னும் பல வந்தன.

(4)**வந்தானோ, ஐயோ விறந்தான்** என்புழி, வினையின் புறத்துறுப்பாய்ப் பின்னுமுன்னும் ஒன்று வந்தது. **கொன்றான் கூகூ, *சீசீ* போ** என்புழி, வினையின் புறத்திதுறுப்பாய்ப் பின்னு முன்னும் பல வந்தன.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– வேற்றுமை** (யுருபுகள்) — ஐம் முதலிய வேற்றுமையுருபுகளும், **வினை** (யுருபுகள்) – விகுதிகளும் இடைநிலைகளுமாகிய வினையுருபுகளும், **சாரியை** (யுருபுகள்) – அன் ஆன் முதலிய சாரியையுருபுகளும், **ஒப்புருபுகள்** – போலப் புரைய முதலிய உவமவுருபுகளும், **தத்தம் பொருளை** – பிறவாறு தத்தமக் குரிய பொருளையுணர்த்தி வருபவையும், **இசைநிறை** – வேறுபொரு ளின்றி இசைநிறையே பொருளாக வருபவையும், **அசைநிலை** – அசைநிலையே பொருளாக நிற்பவையும், **குறிப்பு** – வெளிப்படையின்வரும் இவை போலாது ஒலி அச்சம் விரைவு இவற்றைக் குறிப்பாலுணர்த்தி வருபவையும், – **என் எண பகுதியின்** – என்னும் எட்டுவகையினையுடையனவாய், – **தனித்து இயல் இன்றி** – தனித்து நடத்தலின்றி, **பெயரினும் வினையினும் பின் முன் ஓரிடத்து** – பெயரினகத்தும் வினையினகத்தும் அவற்றின் புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்களாறனுளோரிடத்து, ***ஒன்றும் பலவும் வந்து ஒன்றுவது*** – *ஒன்றா* யினும் பல வாயினும் வந்து அப்பெயர்வினைகளுக்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது, **இடைச்சொல்** – இடைச் சொல்லாகும். எ–று.

பெயர்ச்சொல் வினைச்சொற்களுமாகாது அவற்றின் வேறு மாகாது இடைநிகரனவாய் நிற்றலின், இடைச்சொல்லெனப் பட்டன; தனித்து நடத்த லின்றிப் பெயர்வினைகளிடமாக நடத்தலின், இடைச்சொல்லெனப்பட்டன வெனினும் அமையும். இப்பொருட்கு இடமெனினும் இடையெனினுமொக்கு மாயினும் இடையென்றது இடைநிகரனவாய் நிற்றலையு முணர்த்துதற்காம்.

இசைநிறையென்பது வேறுபொருளுணர்த்தாது செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது.

அசைநிலையென்பது வேறுபொருள் உணர்த்தாது பெயர்ச் சொல்லோடும் வினைச்சொல்லோடுஞ் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது. (அசைத்தல் – சார்த்துதல்.)

வ–று.:–

(1) குழையன் என்புழிப், பெயரினகத்துறுப்பாய் விகுதியிடைச் சொல் ஒன்று வந்தது. தச்சிச்சி, நிலத்தினன் என்புழிப், பெயரினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும்,

இடைநிலையுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பலவந்தன.

(2) உண்ணாய் என்புழி,வினையினகத்துறுப்பாய் விகுதி யிடைச் சொல் ஒன்று வந்தது, நடந்தான், நடந்தனன் என்புழி, வினையினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், இடைநிலையுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பலவந்தன.

(3) அதுமன், கொன்னூர் என்புழிப், பெயரின் புறத்துறுப் பாய்ப் பின்னும்முன்னும் ஒன்று வந்தது. அதுமற்றம்ம, இனிமற்றொன்று என்புழிப் பெயரின் புறத்துறுப்பாய்ப் பின்னுமுன்னும் பல வந்தன.

(4) வந்தானோ, ஐயோவிறந்தான் என்புழி, வினையின் புறத் துறுப்பாய்ப் பின்னமுன்னும் ஒன்று வந்தது. கொன்றான் கூகூ, சீசீபோ என்புழி, வினையின் புறத்துறுப்பாய்ப் பின்னு முன்னும் பலவந்தன.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– வேற்றுமை** – (ஐ முதலிய) வேற்றுமை யுருபுகளும், **வினை** – (விகுதி முதலிய) வினையுருபுகளும், **சாரியை** – (அன் ஆன் முதலிய) சாரியை யுருபுகளும், **ஒப்பு உருபுகள்** – (போல முதலிய) உவமையுருபுகளும், **தம் தம் பொருள** – தம் தமக்கு உரிய பொருளை உணர்த்தி வருகிற ஏ ஓ முதலியவையும், **இசைநிறை**– (வேறு பொருளில்லாமல்) செய்யுளிசை நிறைத்தற்கே வருபவையும், **அசைநிலை** – அசையாய் வருதலே பொருளாக நிற்பவையும், **குறிப்பு** – (வெளிப்படையாய் வரும் இவைபோலாமல்) குறிப்பினாற் பொருளுணர்த்தி வருபவையும், **என்** – என்கிற, **எண் பகுதியின்** – இவ்வெட்டு வகையை உடையனவாய், **தனித்து இயல் இன்றி** – தனித்து நடக்கும் தன்மையில்லாமல், **பெயரினும் வினையினும்** – பெயர்ச் சொல்லினிடத்தும் வினைச்சொல்லி னிடத்தும், **பின் முன்** –(அவற்றின்) பின்னேயாயினும் முன்னேயாயினும், **ஓர் இடத்து** – ஓரிடத்தில், **ஒன்றும் பலவும்** – ஒன்றாயினும் பலவாயினும், **வந்து– ஒன்றுவது** – ஒன்று பட்டு நடப்பது, **இடைச்சொல்**–; எ – று.

தனித்து நடக்கும் ஆற்றலில்லாமல் பெயர்வினைகளோடு சேர்ந்து அவற்றினிடமாக நடத்தலால், 'இடைச்சொல்' எனப்பட்டன. (இடம், இடை என்பன–ஒருபொருட் சொற்கள்.) இனி, பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லும் ஆகாமல் அவற்றினும் வேறுமா காமல் நடுத்தன்மையாய் நிற்கையால் இடைச்சொல் எனப்பட்டன எனினும் அமையும்; இனி, முன்னும் பின்னும் வருமாயினும், பெரும்பாலும் இடையிலே வருதலால், இடைச்சொல் என்பது ஆசிரியர் கருத்தென்பாரும் உளர்.

**'உருபுகள்'** என்பதை, வேற்றுமை வினை சாரியை என்ப வற்றோடும் கூட்டுக.

அசைத்தல் – ஒருபொருளையும் உணர்த்தாமல் பெயர்ச்சொல் வினைச்சொற்களோடு சார்த்திச் சொல்லப்படுதல். இசைநிறை அசைநிலை என்னும் இரண்டும் வேறுபொருளை உணர்த்தாதன வாயினும், இசைநிறை – செய்யுளில் ஓசையை நிறைப்ப தென்றும், அசைநிலை – பெயர் வினைகளோடு சார்த்திச் சொல்லப்படுவ தென்றும் வேறுபாடு அறிக.

வேற்றுமை யுருபுபிடைச்சொற்கள் – பெயரியலிற் சொல்லப் பட்டன.

வினை யுருபிடைச்சொற்கள்– பதவியலிற் சொல்லப்பட்டன. பின்– 'சாரியை' எனச் சொல்லுதலால், வினையென்றது அது நீங்கலான மற்றையவற்றை.

சாரியை யிடைச்சொற்கள், உருபு புணரியலிற் சொல்லப்பட்டன. ஒப்புருபிடைச் சொற்கள், பொதுவியலில் **"போலப் புரைய"** என்னும் சூத்திரத்திற் சொல்லப்பட்ட எச்சங்களின் பகுதிகள்.

தம்தம் பொருள் உணர்த்துவனவும், இசைநிறையும், அசை நிலையும் ஆகிய இடைச்சொற்கள், மேல் இவ்வியலிற் சொல்லப் படுவன.

குறிப்பாற் பொருளுணர்த்தும் இடைச்சொற்கள் வருமாறு:– கோவென, சோவென, துடுமென, ஒல்லென, கஃறென, சுஃறென, கடகடென, களகளென, திடுதிடென, நெறுநெறென, படபடென, என்றாற் போல்வன. ஒலிக் குறிப்புப் பொருளைத் தரும் இடைச் சொற்கள். துண்ணென, துணுக்கென, திட்கென திடுக்கென என்றாற் போல்வன. அச்சக் குறிப்புப்பொருளைத் தரும் இடைச்சொற்கள். பொள்ளென, பொருக்கென, ஞெரே லென என்றாற் போல்வன – விரைவுக்குறிப்புப் பொருளைத் தரும் இடைச்சொற்கள்.

**குழையன், அது மற்றம்ம**–பெயரின் முன் ஒன்றும் பலவும் வந்தன.

**ஓ சாத்தன், இனி மற்றொன்று** – பெயரின்முன் ஒன்றும் பலவும் வந்தன. **உண்ணாய், நடந்தனனே**–வினையின் பின் ஒன்றும் பலவும் வந்தன.

**அம்மா பெரிது, சீ சீ போ** – வினையின் முன் ஒன்றும் பலவும் வந்தன.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– வேற்றுமை (யுருபுகள்)** – ஐம்முதலிய ஆறு வேறுமையுருபுகளும், **வினை** (யுருபுகள்) – விகுதிகளும் இடைநிலைகளுமாகிய வினையுருபுகளும், **சாரியை** (யுருபுகள்) – அன் ஆன் முதலிய சாரியை யுருபுகளும், **ஒப்புருபுகள்** –

போலப் புரைய முதலிய உவமவுருபுகளும், **தத்தம் பொருள** – விறவாறு தத்தமக்குரிய பொருளை யுணர்த்தி வருபவையும், **இசைநிறை** – வேறுபொருளின்றி இசை நிறைத்தலே பொருளாக வருபவையும், **அசைநிலை** – அசைத்தலே பொருளாக நிற்பவையும், **குறிப்பு** – (வெளிப்படையின் வரும் இவை போலாது) ஒலி அச்சம் விரைவு இவற்றைக் குறிப்பாலுணர்த்தி வருபவையும், **என் எண் பகுதியின்** – என்னும் இவ்வெட்டுவகையினை யுடைனவாய், **தனித்து இயல் இன்றி** – தனித்து நடத்தலின்றி, **பெயரினும் வினையினும்** – பெயரினகத்தாயினும் வினையினகத்தாயினும், **பின் முன் ஓரிடத்து** – அவற்றின் பின்னாகவாயினும் முன்னாகவாயினும் ஒரிடத்து, **ஒன்றும் பலவும் வந்து** – ஒன்றாயினும் பலவாயினும் வந்து, **ஒன்றுவது** – (அப் பெயர்வினைகளுக்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும்) ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது, **இடைச்சொல்** – இடைச்சொல்லாகும். எ–று.

பெயர்ச்சொல் வினைச்சொற்களுமாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகரனவாய் நிற்றலின், இடைச்சொல்லெனப்பட்டன; தனித்து நடத்தலின்றிப் பெயர்வினைகளிடமாக நடத்தலின், இடைச்சொலெனப்பட்டன வெனினும் அமையும். பெயர்வினைகளுக்கு முன்னும் பின்னும் வருமாயினும் பெரும்பாலும் இடையிலே வருதலால் இடைச்சொல் எனப்பட்டன என்று கொள்வது முண்டு.

இசைநிறை என்பது வேறுபொருள் உணர்த்தாது செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது.

அசைநிலையென்பது வேறுபொருள் உணர்த்தாது பெயர்ச் சொல்லோடும் வினைச்சொல்லோடும் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது. (அசைத்தல் – சார்த்துதல்)

**உ–ம்.:–**

(1) குழையன் – பெயரினகத்துறுப்பாய் விகுதி யிடைச்சொல் ஒன்று வந்தது. தச்சிச்சி, முடியினன் – பெயரினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பல வந்தன.

(2)உண்ணாய் – வினையினகத்துறுப்பாய் விகுதியிடைச்சொல் ஒன்று வந்தது. நடந்தான், நடந்தனன் – வினையினகத் துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், இடைநிலை யுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பல வந்தன.

(3) அதுமன், கொன்னூர் – பெயரின்புறத்துறுப்பாய்ப் பின்னு முன்னும் ஒன்று வந்தது. அதுமற்றம்ம, இனி மற்றொன்று – பெயரின் புறத்துறுப்பாய்ப் பின்னு முன்னும் பல வந்தன.

(4)வந்தானோ, ஐயோவிறந்தான் – வினையின்புறத்துறுப்பாய்ப் பின்னு முன்னும் ஒன்று வந்தது. கொன்றான் கூகூ, சீசீ, போ, வினையின் புறத்துறுப்பாய்ப் பின்னு முன்னும் பல வந்தன.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

வேற்றுமை வினைசா ரியையொருப் புருகள் தத்தம் பொருள இசைநிறை அசைநிலை குறிப்பென்எண் பகுதியின் தனித்தியல் இன்றிப் பெயரினும் வினையினும் பின்முன் ஓரிடத் தொன்றும் பலவும்வந்தொன்றுவ திடைச்சொல்

இ—ள்.:— **வேற்றுமை** (உருபுகள்) — ஐ முதலிய வேற்றுமை உருபுகளும், **வினை** (உருபுகள்) — விகுதி முதலிய வினையுருபுகளும், **சாரியை** (உருபுகள்) — அன் ஆன் முதலிய சாரியை உருபுகளும், **ஒப்பு உருபுகள்** — போல புரைய முதலிய உவமை உருபுகளும், **தத்தம் பொருள்** — தத்தமக்குரிய பொருளை யுணர்த்தி வருபவையும், **இசைநிறை**—செய்யுளிசைநிறைத்து வருபவையும், **அசைநிலை** — அசைத்தலே பொருளாக நிற்பவையும், **குறிப்பு** — (இவைபோலாது) குறிப்பினால் வருபவையும், **என்** — என்கிற, **எண் பகுதிகள்** — எட்டு வகையினை யுடையனவாய், **தனித்து இயல் இன்றி** — தனித்து நடத்தலில்லாமல், **பெயரினும் வினையினும்** — பெயர்ச்சொல்லினகத்தும் வினைச்சொல்லினகத்தும், **பின் முன் ஓர் இடத்து** — (அவற்றின் புறமாகிய) பின்னும் முன்னும் (ஆகிய இவ்வாறிடங்களில்) ஓரிடத்து, **ஒன்றும் பலவும் வந்து** — ஒன்றாயினும் பலவாயினும் வந்து, **ஒன்றுவது** — ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது, **இடைச் சொல்** — இடைச்சொல்லாகும். **(எ—று)**

**பொ—ரை.:—**

எழுவாயுருபு முதலிய எட்டு வேற்றுமை யுருபுகளுள் பெயரும் பெயரது விகாரமுமாகிய எழுவாயும் விளியும் ஒழித்து ஒழித்து ஐ முதலிய ஆறு உருபுகளும், பகுதி விகுதி இடைநிலை யென்னும் தெரிநிலையும் குறிப்பும் ஆகிய வினையுருபுகளுள் முதனிலைத் தனிவினைப் பெயரும் பொருளாகி யறுவகைப்பெயருமாகிய பகுதி ஒழித்து ஒழிந்த விகுதி முதலிய வினையுருபுகளும், போலப் புரைய முதலிய உவமவுருபுகளும் பிறவாறு தத்தமக்குரிய பொருளை யுணர்த்திவருவனவும், வேறு பொருளின்றிச் செய் யிளிசை நிளைத்தலே பொருளாக வருவனவும், அசைத்தலே பொருளாக நிற்பனவும், வெளிப்படையின் வரும் (இவை போலாது) குறிப்பின் வருவனவும் என்னும் எட்டு வகையினை யுடையவாய்த் தனித்து நடத்தலின்றிப் பெயரினகத்தும் வினை யினகத்தும் (அவற்றின் புறமாகிய) பின்னும் முன்னும் ஆகிய இவ்விடங்கள் ஆறனுள் ஓரிடத்து ஒன்றேனும் பலவேனும் வந்து அப் பெயர்வினைகட்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்று பட்டு நடக்குந் தன்மையது இடைச்சொல்லாம்.

**உ—ம்.:—**

(1) குழையன் — அன் — விகுதி யிடைச்சொல் ஒன்று வந்தது.

முடியினன் — இன், அன் — இடைநிலையம், விகுதியுமாகிய இடைச் சொற்கள் பல வந்தன.

நிலத்தினன் — அத்து, இன், அன்—சாரியை, இடைநிலை, விகுதியுமாகிய இடைச்சொற்கள் பல வந்தன.

(2) உண்ணான் – ஆன் – விகுதி இடைச்சொல் ஒன்று வந்தது.

உண்டான் – ட், ஆன்–இடைநிலையும், விகுகியுமாகிய இடைச் சொற்கள் பல வந்தன.

உண்டனன்– ட், அன், அன் – இடைநிலை, சாரியை, விகுதிபு மாகிய இடைச்சொற்கள் பல வந்தன.

வினையின் அகத் துறுப்பு.

(3) நம்பியை – ஐ – உருபிடைச்சொல் ஒன்று பின்னே வந்தது.

அதுவே–ஏ– இடைச்சொல் ஒன்று பின்னே வந்தது.

அதுமற்றமம் – மற்று, அம்ம – இடைச்சொற்கள் பல பின்னே வந்தன.

பெயரின் புறத்துறுப்பு.

பொன்னினாலோ – இன், ஆல், ஒ – சாரியை, உருபு, ஒவுமாகிய இடைச் சொற்கள் பல பின்னே வந்தன.

(4) கொன்னூர் ஓ பெரியன் – கொன், ஓ – இடைச் சொற்கள் ஒவ்வொன்று முன்னே வந்தது.

ஓஓ கொடியை இனி மற்றொன்று – ஓஓ, இனி, மற்று – இடைச் சொற்கள் பல முன்னே வந்தன.

இவையும் பெயரின் புறத்துறுப்பு.

(5) வந்தானே – ஒ – இடைச்சொல் ஒன்று பின்னே வந்தது.

கொன்றான் கூகூ – கூகூ – இடைச்சொற்கள் பல பின்னே வந்தன.

(6) ஐயோ இறந்தான் – ஐயோ – இடைச் சொல் ஒன்று முன்னே வந்தது.

*சீசீ* போ – *சீ சீ* – இடைச் சொற்கள் பல முன்னே வந்தன.

வினையின் புறத்துறுப்பு.

## கா. நமச்சிவாய முதலியார்

**வேற்றுமை** (உருபுகள்)–ஐ முதலிய வேற்றுமை யுருபுகளும், **வினை** (உருபுகள்) – விகுதி முதலிய வினை யுருபுகளும், **சாரியை** (உருபுகள்) – அன் ஆன் முதலிய சாரியை யுருபுகளும், **ஒப்பு** (உருவுகள்) – போல புரைய முதலிய உவம வுருபுகளும், **தத்தம் பொருள்** – தத்தமக்குரிய பொருளை உணர்த்தி வருபவையும், **இசைநிறை** – செய்யுள் இசைநிறைத்து வருபவையும், அசைநிலை – **அசைத்தலே** பொருளாக நிற்பவையும், **குறிப்பு** – (இவை போலாது) குறிப்பினால் வருபவையும், **என்** – என்னும், **எண் பகுதியின்** – எட்டு வகையினை யுடையனவாய், **தனித்து இயல் இன்றி** – தனித்து நடத்தலில்லாமல், **பெயரினும் வினையினும்** – பெயர்ச்சொல்லினகத்தும் வினைச்சொல் வினகத்தும், **பின்முன்** – பின்னும் முன்னும், **ஓர் இடத்து** – ஓரிடத்தில், **ஒன்றும் பலவும்** – ஒன்றாயினும் பலவாயினும்,

**வந்து** – வந்து, **ஒன்றுவது** – ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது, **இடைச் சொல்** – இடைச்சொல்லாகும்.

பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் ஆகாது, அவற்றின் வேறும் ஆகாது, இடைநிகர்த்ததாய் நிற்றலின், இடைச்சொல் எனப் பட்டது.

**இசைநிறை** என்பது, வேறுபொருள் உணர்த்தாமல் செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது.

**அசைநிலை** என்பது, வேறுபொருள் உணர்த்தாமல் பெயர்ச் சொல்லோடும், வினைச்சொல்லோடும் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது. (அசைத்தல் = சார்த்தல்)

**உதாரணம்**

1.நம்பி**யை**, நம்பி**யால்**, நம்பி**க்கு** என்னும் இடத்து, பெயரின் புறத்துறுப்பாய் ஐ, ஆல், கு என்னும் வேற்றுமையுருபிடைச் சொற்கள் வந்தன.

2.**அறிஞன்** என்னும் இடத்து, பெயரின் அகத்துறுப்பாய் விகுதி இடைச்சொல் வந்தது.

3.நடந்தனன் என்னும் இடத்து, வினையின் அகத்துறுப்பாய்ச் சாரியை இடைச்சொல் வந்தது.

4.**போன்**றான் என்னும் இடத்து, வினையின் அகத்துறுப்பாய்ப் – போல் என உவம உருபிடைச்சொல் வந்தது.

5.அதுமன், அது**மற்றம்ம** என்னும் இடத்து, பெயரின் புறத் துறுப்பாய், பின்னே இடைச்சொல் ஒன்றும், பலவும் வந்தன.

6.**மற்றொ**ன்று, ஓ ஓ கொடியன் என்னும் இடத்து, பெயரின் புறத்துறுப்பாய், முன்னே இடைச்சொல் ஒன்றும், பலவும் வந்தன.

7.வந்தானோ, கொன்றான் கூ கூ என்னும் இடத்து, வினையின் புறத்துறுப்பாய்ப் பின்னே இடைச்சொல் ஒன்றும், பலவும் வந்தன.

8.ஐயோ இறந்தான், சீ சீ போ என்றும் இடத்து, வினையின் புறத்துறுப்பாய், முன்னே இடைச்சொல் ஒன்றும், பலவும் வந்தன.

தத்தம் பொருள் தருபவையும், இசைநிறைப்பொருள் தருபவையும், அசைநிலைப்பொருள் தருபவையும், குறிப்புப் பொருள் தருப வையும் ஆகிய இடைச்சொற்களுக்கு உதாரணம் பின்வரும் சூத்திரங்களால் உணர்க.

## மோசகு பொன்னையா

ஐ, ஆன் முதலிய வேற்றுமை உருபுகளும்[1] இடைநிலை[2] விகுதி[3] ஆகிய

---

குறிப்புகள்.:–

1. நன். 296–302;
2. நன். 142–144;
3. நன். 140, 145;

வினை உருபுகளும்; அன், நம், வற்று முதலிய சாரியை உருபுகளும்[1]; போல, புரைய[2] முதலிய உவம உருபுகளும்; தத்தமக்கு உரிய பொருளை உணர்த்தும் ஏ, ஓ முதலியனவும்; இசையை (சொல்லை) நிறைத்தலையே பொருளாகக் கொண்டு வருவனவும்; அசைத்து (சார்த்தி) நிற்றலையே பொருளாகக் கொண்டு வரு வனவும்; ஒலி, அச்சம், விரைவு என்பவற்றைக் குறிப்பால் உணர்த்தி வருவனவும் என்னும் எட்டு வகைப்பட்டனவாய்த் தனித்து நடக்கும் இயல்பு இல்லாதனவாய்ப், பெயர்ச்சொல் வினைச்சொல் ஆகியவற்றின் பின்முன் ஆகிய இடங்களில் ஒன்றோ அன்றிப்பலவோ வந்து பொருந்தி நின்று வழங்குவது இடைச்சொல்லாகும் எ-று.

வேற்றுமை உருபுகளைப் பெயரியலிலும், வினையுருபுகளைப் பதவியலிலும், சாரிபை உருபுகளை உருபு புணரியலிலும், ஒப்பு உருபுகளைப் பொதுவியலிலும் உணர்த்தினார்; பொருள்புணர் இடைச்சொற்களாகிய, தத்தம் பொருளுணர்த்துனவற்றையும், பொருள்புணரா இடைச்சொற்களாகிய இசைநிறை அசை நிலைகளாக வருவனவற்றையும் இனிவரும் நூற்பாக்களிற் கூறுவார்.

குறிப்பாற் பொருளுணர்த்துவன; கோவென, சோவென, துடுமென, ஒல்லென, கஃறென, சுஃறென, கடகடவென, களகளவென, மடமடவென, நெறுநெறுவென முதலாக வருவன வற்றை ஒலிக்குறிப்பிடைச் சொற்கள் எனவும்; துண்ணென, துணுக்கென, திட்டென, திடுக்கென, என்பன முதலாக வருவன வற்றை அச்சக்குறிப் பிடைச் சொற்கள் எனவும்; பொள்ளென, பொருக்கென, ஞெரேலென என்பன முதலாக வருவனவற்றை விரைவுக் குறிப்பிடைச் சொற்கள் எனவுங் கொள்க. குறிப்பு இடைச்சொல் தொல்காப்பியரால் கூறப்பட வில்லை.

அவை பெயர், வினைகளின் முன், பின் இடமாக ஒன்றும் பலவும் வருமாறு;

| **ஒன்று** | **பல** |
|---|---|
| குழையன் | அதுமற்றம்ம<br>– பெயரின்பின் வந்தன |
| மற்றையவன் | இனிமற்றொன்று<br>– பெயரின்முன் வந்தன |
| உண்ணாய் | நடந்தனனே<br>– வினையின் பின்வந்தன |
| அம்மபெரிது | சீசீபோ<br>– வினையின் முன்வந்தன |

**குறிப்புகள்:-**

1. நன். 244, 245;
2. நன். 367;

தொல்காப்பியர், சொற்கள் பொருள் குறித்தே வரும்[1] எனவும்; அவற்றால் பொருண்மை தெரிதல், சொன்மை தெரிதல் என்னும் இரண்டும் புலனாகும்[2] எனவும்; பொருண்மை வெளிப்படை, குறிப்பு என இருபாற்படும்[3] எனவும் ஓதிய பின்னர்,

**சொல்லெனப் படுப பெயரே வினையென்**

**றாயிரண் டென்ப அறிந்திசி னோரே,[4]**

எனவும்,

**இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியும்**

**அவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப,[5]**

எனவும் மொழிந்தார். அதனால், சொன்மைநிலைப்படிக்[6] கூறுவதாயின், சிறப்புடைச் சொற்கள் பெயர், வினை என இரண்டே என்பதும், சிறப்பில் சொற்கள் இடை, உரி என இரண்டே என்பதும் போதரும். சிறப்பில் இடை உரிச் சொற் களைப் பற்றி அவர் எச்சவியலில்,

**இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே,[7]**

**உரிச்சொல் மருங்கினு முரியவை யுரிய[8],**

எனக்கூறி, இடைச் சொல்லின் இலக்கணங் கூறும் இடை யியலில்,

**இடையெனப் படுப பெயரொடும் வினையொடு**

**நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே,[9]**

என அதன் இலக்கணங் கூறினார். அவ்வாற்றால் வேற்றுமைச் சொல், அதாவது விசேடிக்கும் சொல்லாகவே வரும் இடைச் சொல்லானது, பெயரும் வினையும் போல் பொருளைத் தானே நேரிற்காட்டாது, வேறுபட்ட பொருளைக் குறிக்கும் அதன் பொருண்மை நிலை தெளிவுறுக்கப்பட்டது எனலாம். தெய்வச் சிலையார், 'மன் என்பதும் கழிவினும், ஆக்கத்தினும், ஒழியிசை யினும் வந்தவழித், தானிடைப் பெற்று நிலைமொழியின் வேறுபட்ட பொருளைக் குறித்துநின்ற தல்லது, அப்பொருட்கு

---

**குறிப்புகள்.:–**

1. **தொல். சொல். 155–159;**
2. **தொல். சொல். 155–159;**
3. **தொல். சொல். 155–159;**
4. **தொல். சொல். 155–159;**
5. **தொல். சொல். 155–159;**
6. **Morphology.**
7. **தொல், சொல். 455.**
8. **தொல், சொல். 456;**
9. **தொல். சொல். 249**

வாசகமன்றி நின்றமை கண்டு கொள்க'[1] எனக் கூறுவதாலும் அது புலனாகும். இடைச்சொல்லின் இலக்கணப் பொருண்மை நிலைகள் பற்றிய விளக்கவுரையாக,

அவைதாம்,

**புணரிய னிலையிடைப் பொருணிலைக் குதநவும்**
**வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்**
**வேற்றுமைப் பொருள்வயி னுருபா குநவு**
**மசைநிலைக் கிளவி யாகி வருநவு**
**மிசை நிறைக் கிளவி யாகி வருநவுந்**
**தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவு**
**மொப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்**
**றப்பண் பினவே நுவலுங் காலை**[2],

என்ற நூற்பாவைத் தொல்காப்பியர் தந்தார். இடைச்சொல்லின் சார்பும், உருபும், தன்மையும் பற்றி.

அவைதாம்,

**முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலுந்**
**தம்மீறு திரிதலும் பிறிதவ ணிலையலு**
**மன்னவை யெல்லா முரிய வென்ப,**[3]

என அவர் எடுத்துரைத்தார்.

இவ்வாசிரியர், அவ்வெல்லம் ஓராற்றன் ஏற்று இந்நூற்பாவை அமைத்ததுடன், 'பெரும்பான்மையும் இடைவருதலின் இடைச் சொல்'[4] என்பது போன்ற கொள்கையை மறுப்பாரே போல், இடத்து ஒன்றுவது இடைச்சொல் என நூற்பாவில் அமைத்துத் தெளிவுறித்தினார். தொல்காப்பியர், பெயரும், வினையும் தனிச்சொல்லாய்த் தனித்து நடக்கும் தன்மை பெற்று, மரம், மலை, ஆடு, வீடு என்றோ, வா, போ, யார்? என்றோ வழங்குவதே போல், இடைச்சொற்கள் தனிச்சொற் களாய் வழங்கா என்பதைத் 'தமக்கியல்பில' என்றராக உரைகாரர் 'தமக்கெனப் பொருளு டையன வல்ல'[5] என உரைகூறி மயங்கினார். இவ்வாசிரியர், தீமையன், நடந்தாள் முதலிய சொற்களில் விகுதிகளான இடைச்சொற்கள் சிறப்புப் பொருள் பெற்றும் பிறவாறும் பொருளுடையனவாக வழங்குவதைக் கண்டும்,

---

குறிப்புகள்.:–

1. **தொல். சொல். 445 உரை;**
2. **தொல். சொல். 250.**
3. **தொல். சொல். 251;**
4. **தொல். சொல். 251 சேனா உரை; சாரியை தவிர ஏனைய இடையில் வாரா;**
5. **தொல். சொல். 249. சேனா உரை பார்க்க.**

**எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே,**[1]

என்னும் ஆசிரியர் வாக்கை, மனத்திருத்தியும், 'தனித்திய லின்றி' எனத் திட்பமுஞ் செறிவும்படக் கூறி உண்மையை நிலை நாட்டினார். இதனால், பெயரோடோ, வினையோடோ இணை யாமல், அவற்றின் முன்னோ, பின்னோ தனித்து நின்று, 'அந்தோவிசயை பட்டனகொண்டு', 'உண்டால் அம்ம' என இவ்வாறு வருவது செய்யுள் வழக்காக இருப்பதால், அதனை ஆசிரியர் விலக்கார் ஆதலின், 'முற்கூறிய பெயர் வினைச்சொற் களுமாகாது, அவற்றின் வேறு மாகாது இடைநிகரனவாய் கூட்டி எண்ணி முடிக்குமாற்றாற் புலப்பட வைத்தது அயர்ப்போ, அன்றி மயங்கவைத்தலோ என எண்ண இடமுண்டு. டாக்டர் இலக்கு வனார் கருதுமாறேபோல், தொல்காப்பியர் வினை இடைநிலை களையே 'காலமொடு வருந' எனக் குறிப்பிட்டார் எனக் கருதி, அதனையே இவர் ஈண்டு வினை எனக் கூறி அமைந்தார் எனக் கொள்ளலாம் எனின், காலங்காட்டும் விகுதிகளைப் பற்றி விரித்துக் கூறியுள்ள பவணந்தி யாருக்கு அது கருத்தாதல் ஒல்லாது என்பதாம்.

இவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ள இவ்வெட்டு வகை இடைச் சொற்களில் முன்னைய மூன்றும் ஒட்டிடைச் சொற்கள் எனவும், பின்னைய ஐந்தும் துணுக்கிடைச் சொற்கள், எனவும் மொழி யியல் வல்லுநராற் பகுக்கப்படும். இவ்விடைச் சொற் களெல்லாம் இலக்கணப் பொருள் உதவுவனவேயன்றி, உரிப்பொருள் உடையன அல்ல. ஒரு காலத்தில் இசை உரிப்பொருள் உடையன வாக வழங்கியிருக்கலாம்.

(1)

## 420. தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப் பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள்.

**தெரிநிலை தேற்றம் ஐயம் முற்று எண் சிறப்பு**
**எதிர்மறை எச்சம் வினா விழைவு ஒழியிசை**
**பிரிப்புக் கழிவு ஆக்கம் இன்னன இடைப்பொருள்.**

---

குறிப்புகள்.:–

1. தொல். சொல். 155.

ṭerinilai ṭēṟṟam aiyam muṟṟu eṉsiṟappu
eṭirmaṟai essam viṉā viḷaivu oḷiyisai
pirippuk kaḷivu ākkam iṉṉaṉa itaipporuḷ.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### Signification's of particles

The following (fourteen) are the principal meanings of the significant particles; certainty, emphasis, doubt, completeness, enumeration, speciality, negation, incompleteness, interrogation, desire, ellipsis of counter part, isolation, pity and change of state.

## மயிலை நாதர்

எ–ன், மேல், "தத்தம்பொருள" என்றார், அவற்றின் பொருளாவன இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ –ள்.:– தெரிநிலை முதலான பதினாலும் இவை போல்வனன பிறவும் இடைச்சொற்குப் பொருளாம், எ – று.

இவற்றிற்கு உதாரணம் மேல்வருஞ் சூத்திரங்களுட் காண்க.

'**இன்னன**' என்றதனாற் சில வருமாறு:–தொறு தோறு ஞெரேர் அந்தோ அன்னோ கொல்லோ ஆ ஆவா அ ஆ இனி என் ஏன் ஏதில் ந கல் ஒல் கொல் துடும் துண் பொள் கம் கொம் என்பன. இவற்றுள், தொறு தோறு என்பன தாம் புணர்ந்த மொழிப் பொருண்மையினைப் பலவாக்கி ஆங்காங் கென்பதுபட நிற்கும். அது,

"**குன்றுதொ றாடலும் நின்றதன் பண்பே**" (முருகு.217), "**சேரி தோறிது செல்வத் தியற்கையே**" (சீவக.129), "**அறிதோ றறியாமை கண்டற்றாற் காமம், செறிதோறுஞ் சேயிழை மாட்டு**" (குறள்.1110) என வரும்.

[1]ஞெரேரென்பது [2]"**ஞெரேரெனத், தலைக்கோள் வேட்டங் களிறட்டாஅங்கு**" (பொருந.141 – 2) என வெருவுதற் பொருளில் வரும்.

அந்தோ அன்னோ கொல்லோ ஆ ஆவா அஆ என்பன இரக்கங் குறித்து வரும்;

"**அந்தோ விசயை பட்டன**" (சீவக.312),

"**அரக்காம்ப லொறும்வா யம்மருங்குற் கன்னோ
பரற்கான மாற்றின கொல்லோ**", (நாலடி, 396),

---

பாட வேறுபாடு:–

1. ஞெரோவென்பது
2. ஞெரோவென

**"ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ"**
(புறநா. 235; குறுந்.176, 325)

**"ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோடு"** (யா.வி.),

**"ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தார்"** (யா.வி.),

**"அஆ, விழந்தானென் றெண்ணப் படும்"** (நாலடி.9) எனக் காண்க.

**'இனி'** என்றது காலத்தின் மேலும் இடத்தின்மேலும் **'முன்'** என்பதுபட வரும்; **"அளிதோ தானே நாணே நம்மொடு, நனிநீ டுழந்தன்று மன்னே யினியே"** (குறுந்.149), **"இனியெம் மெல்லை'** என வரும்.

**'என்'** என்பது சொல்லுதலென்னும் தொழில் குறித்துப் பெயர் வினைகட்குரிய விகுதிகளுடனே வரும்;

**"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும், கண்ணென்ப வாழு முயிர்க்கு"** (குறள்.392),

**"மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே, கடியென்றார் கற்றறிந் தார்"** (நாலடி.56),

**"செல்வா ரல்லரென் றியானிகழ்ந் தனனே, விடுவா ளல்லளென் றவரிகழ்ந் தனரே"** (குறுந்.43) எனக் காண்க.

**'ஏன்'** என்பது, ஒழிதற்பொருள் குறித்து வரும்; **ஏனோன், ஏனோள், ஏனோர், ஏனது, ஏனவை, ஏனைய, ஏனுழி** எனக் காண்க.

**'ஏதில்'** என்பது, அயலென்னும் பொருள் குறித்து வரும்; ஏதிலான், ஏதிலாள், ஏதிலார், ஏதிலது, ஏதில,

**"ஏதிலான் செய்த திறப்பவே"** (நாலடி. 228),

**"ஏதி லாட்டி யிவளெனப், போயின்று கொல்லோ"** (நற்.56),

**"ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பின்"**
(குறள்.190) எனக் காண்க.

**'ந'** என்பது சிறப்புப்பொருட்டு; பெயர்முன் அடுத்து வரும்; நக்கீரர், நச்செள்ளையார், நப்பாலத்தனார் [1]நப்பிஞ்ஞை, நக்நாகனார், நக்கடகமெனக் காண்க.

**'கல்'** என்பது முதல் நான்கும் ஓசைப்பொருண்மேல் வரும்;

**"கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப்
படுத்தபின்"** (கலி. 5),

**"ஒல்லென் றொலிக்கு மொலிபுனலூரற்கு"** (ஐந். ஐம்.28),

**"புள்ளுங் [2]கொல்லென வொலிசெய்யும்"**

பாட வேறுபாடு:–

1. நப்பின்னை, நந்நாகர், நக்குடகம்

2. கொள்ளெனச் செய்யும்

**"நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து"** (புறநா.243) எனக் காண்க.

**'துண்'** என்றது முதல் நான்கும் குறிப்புப்பொருண் மேல் வரும்; **"துண்ணென்னு நெஞ்சமொடு"**,

**"போர்த்ததன் னகலமெல்லாம் பொள்ளென வியர்த்துப் பொங்கி"** (சீவக. 256),

**"பொள்ளென வாங்கே புறம்வேரார்"** (குறள்.487), **"கம்மென, வம்பு விரித்தன்ன பொங்குமணற் கான்யாற்று"** (அகநா.11), **"கொட்புறு நெஞ்சிற் கொம்மென வுராஅய்"** எனக் காண்க. பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்

**எ-னின்,** மேல் 'தத்தம்பொருள' என்றார் அப்பொருளாவன இவை என்பது **உணர் -ற்று.**

**இ-ள்.:-** தெரிநிலை முதலாக விதந்த பதினான்கும் அவை போல்வன பிறவும், மேல் **'தத்தம் பொருள'** என்ற இடைச்சொற் பொருள்களாம், **எ-று.**

**'இன்னன'** என்றதனால் சில வருமாறு:- அக்கொற்றன், எக்கொற்றன் என்பன சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் தந்தன. நக்கீரர், நப்பாலத்தனார் என்புழி நகர இடைச்சொல் சிறப்புப் பொருள் தந்தது.

**"அஆ இழந்தானென் றெண்ணப்படும்"**

**"ஆஅ அளியஅலவன்றன்பார்ப்பினோடு"**

**அந்தோவிசையை பட்டன"**

**"அரக்காம்பல் நாறும்வா யம்மருங்கிற்கன்னோ**

**பரற்கான மாற்றின கொல்லோ"**

என்புழி அஆ, ஆ, அந்தோ, அன்னோ என்னும் இடைச்சொற்கள் இரங்குதற் பொருள் தந்தன. இவற்றிற்கு அதிசயப் பொருளும் உள.

**"அறிதோறறியாமை கண்டற்றால்"**

**"சேரிதொறிது செல்வத்தியற்கையே"**

என்புழித் தோறு தொறு என்னும் இடச்சொற்கள் இடப் பன்மைப் பொருள் தந்தன. இனிச் செய்வான், இனி யெம் எல்லை என்புழி இனி என்னும் இடைச்சொல் காலப் பொருளும் இடப்பொருளும் முறையே தந்தது. பிறவும் இவ்வாறு தனித்து நடக்கும் பெயர் வினையாகாது வருவன எல்லாம் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** மேலே "தத்தம் பொருள்" என்றார்; அவற்றின் பொருளாவன இவையெனக் கூறியது.

**இ–ள்.:– தெரிநிலை தேற்றம்** – தெரிநிலைப் பொருளும் தேற்றப் பொருளும், **ஐயமுற்று** – ஐயப் பொருளும், முற்றுப் பொருளும், **எண்சிறப்பு** – எண்ணுப் பொருளும் சிறப்புப் பொருளும், **எதிர்மறை யெச்சம்** – எதிர்மறைப் பொருளும் எச்சப் பொருளும், **வினாவிழைவு**–வினாப் பொருளும் விழைவுப் பொருளும், **ஒழியிசை பிரிப்பு**–ஒழியிசைப் பொருளும் பிரிநிலைப் பொருளும், **கழிவாக்கம்** – கழிவுப் பொருளும் ஆக்கப் பொருளும், **இன்ன** – இப்பதினான்கு பொருளும் இவை போல்வன பிறவும், **இடைப்பொருள்** – இடைச்சொற்குப் பொருளாவன, **எ–று.**

உதாரணம் வருஞ் சூத்திரத்திற் காண்க.

"**இன்ன**" என்றதனாற் சில வருமாறு.:–

தொறு, தோறு, ஞெரோ, அந்தோ, அன்னோ, கொல்லோ, ஆ, ஆஅ, இனி, என், ஏன், ஏதில், ந, கல், ஒல், கொன், துடும், துண், பொள், கம், கொம் என்பன.

இவற்றுள் தொறு தோறு என்பது தான்புணர்ந்த மொழிப் பொருண்மையைப் பலவாக்கி ஆங்காங்கு என்பதுபட வரும்.

**உ–ம்.:–**

"**குன்றுதொ றாடிய குமரற் போற்றுவாம்**" "**அறிதோ றறியாமை கண்டற்றாற் காமம்**" (குறள்.110) என வரும்.

ஞெரோவென்பது வெருவுதற் பொருளின் வரும். "**ஞெரோ வெனத், தலைக்கொள் வேட்டங் களிறட் டாஅங்கு**"

(பொருந.141) என வரும்.

அந்தோ அன்னோ என்பன இரக்கங் குறித்து வரும். "**அந்தோ விசையைப் பட்டன**" (சீவக.312), "**அரக்காம்ப னாறும்வா யம்மருங்கிற் கன்னோ, பரற்கான மாற்றின கொல்லோ**" (நாலடி.396), "**ஆசாகெந்தை யாண்டுளன் கொல்லோ**" (புறம்.235), "**ஆவாழிய துயர்**" "**ஆஅ ஆசா ரார்**" என வரும். இனி என்பது காலத்தின் மேலும் இடத்தின் மேலும் பின் என்பது பட வரும். '**சென்ற காலநிற்க இனி நல்லறஞ் செய்வோம்**', '**ஒன்னார் மதிலெடுத்த வாசிரினி விடுவானல்லன்**', '**பிரிந்த தலைமகன் இமையில் வந்தான் இனி விடுவா ளல்ல ளென்றவ ரீந்தனரே**' எனக் காண்க.

என் என்பது சொல்லுதலென்னும் தொழில் குறித்துப் பெயர் வினைகட்குரிய விகுதிகளுடனே வரும். 'என்றான்', 'என்றாள்', 'என்றார்', 'என்றது', 'என்றன', 'என்றேன்', 'என்றேம்', 'என்றாய்', 'என்றீர்' என வரும்.

ஏன் என்பது ஒழிதற் பொருள் குறித்து வரும். '**ஏனோன், ஏனோர், ஏனையது, ஏனையவை, ஏனைய, ஏனுழி**' என வரும். ஏதில் என்பது அயலென்னும் பொருள் குறித்து வரும். '**ஏதிலான், ஏதிலாள், ஏதிலார், ஏதிலது, ஏதிலவை,**'

**"ஏதிலார் குற்றம்போற் தங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு"** (குறள்.190)

என வரும்.

ந சிறப்புப் பொருளை உடையதாய்ப் பேர்முன் அடுத்து வரும். **நக்கீரர் நச்செள்ளையார் நப்பிஞ்சை, நந்நாகனார், நக்கடகம்** எனக் காண்க.

கல் என்றது முதல் நான்கும் ஓசைப் பொருண்மேல் வரும். **"கல்லென்ற புள்ளுங் கொள்ளென ஒலிசெய்யும்", "நிலை யருங் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து"** (புறம்.243) என வரும். துண் என்றது முதல் நான்கும் குறிப்புப் பொருண்மேல் வரும். '**துண்ணென நடந்தார்**', '**பொள்ளென வியர்த்தார்**', '**கம்மென அரும்பு விரிந்தன**', '**கொம்மென வந்தார்**' என வரும்.

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன்சூத்திரத்திலே தத்தம் பொருள வெனப்பட்டவை இவையென்பது உணர்த்துகின்றது.

**இ—ள்.:— தெரிநிலை** — தெரிநிலையும், **தேற்றம்** — தெளிவும், **ஐயம்** — சந்தேகமும், **முற்று** — முற்றும், **எண்** — எண்ணும், **சிறப்பு** — சிறப்பும், **எதிர்மறை** — எதிர்மறையும், **எச்சம்** — எச்சமும், **வினா** — வினாவும், **விழைவு** — விருப்பமும், **ஒழியிசை** — ஒழிந்தசொல்லும், **பிரிப்பு** — பிரிநிலையும், **கழிவு** — கழிவும், **ஆக்கம்** — ஆக்கமும், **இன்னன** — இவைபோல்வன பிறவும், **இடை** — தத்தம் பொருளவென்ற விடைச்சொற்களுடைய, **பொருள்** — பொருள்களாம், எ—று.

**வ—று.:—**

இவை போல்வன வென்றதனாற் சிலவருமாறு அ இ உ என்பன சுட்டுப்பொருளைத் தருவன. எ யா என்பன வினாப்பொருளைத் தருவன. முன் பின் இனி என்பன இடப்பொருளுங் காலப் பொருளுந் தருவன. தொறும் தோறும் இடப்பன்மைப் பொருளைத் தருவன. ஆவது, ஆயினும் முதலியவை விகற்பப்பொருளைத் தருவன. ஐயோ அந்தோ முதலியன இரக்கப்பொருள் தருவன. ஆ அம்மா ஓ ஓகோ முதலியவை வியப்புப் பொருளைத் தருவன. கூ கூ ஐயோ முதலியவை அச்சப்பொருளைத் தருவ்ன. சீ சிச்சீ சை முதலியவை இகழ்ச்சிப் பொருளைத் தருவன. கடகடென துடுமென முதலியவை ஒலிக்குறிப்புப் பொருளைத் தருவன. பொள்ளென சரேலென முதலியவை விரைவுக் குறிப்புப் பொருளைத் தருவன. மற்று மிப்படியே வருகிற பலவகைப்பட்ட இடைச்சொற்களை ஆராய்ந்தறிந்து கண்டு கொள்க.

## ஆ- முத்துத்தம்பிப் பிள்ளை

இடைச்சொற்களினது பொருள்கள் யாவை?

தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்
பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை
பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள்.

(தெரிநிலை தேற்றம் ஐயம் முற்று எண் சிறப்பு எதிர்மறை எச்சம் வினா விழைவு ஒழியிசை பிரிப்பு கழிவு ஆக்கம் இன்னன இடைப்பொருள்.)

**இ–ள்.:–** தெரிநிலையும் தெளிவும் சந்தேகமும் முற்றும் எண்ணும் சிறப்பும் எதிர்மறையும் எச்சமும் வினாவும் விருப்பமும் ஒழிந்த சொல்லும் பிரிநிலையும் கழிவும் ஆக்கமும் இவைபோல் வனபிறவும் இடைச்சொற்களுடைய பொருள்களாம். எ–று.

இன்னனவென்றதனாற் சில வருமாறு:–

(1) அ, இ, உ என்பன சுட்டுப்பொருளைத் தருவன.

(2) எ, ஏ, யா, ஆ என்பன வினாப்பொருளைத் தருவன.

(3) முன், பின் என்பன காலப்பொருளையும் இடப்பொருளையுந் தருவன.

(4) இனியென்பது காலவிடங்களின் எல்லைப்பொருளைத்தருவது.

(5) தொறும், தோறும் என்பன இடப்பன்மைப் பொருளையுந் தொழிற்பயிவ்வுப்பொருளையுந் தருவன.

(6) வாளா, சும்மா என்பன பயனின்மைப்பொருளைத் தருவன.

(7) ஆவது, ஆதல், ஆயினும், தான் என்பன விகற்பப்பொருளைத் தருவன.

(8) ஐயோ, அந்தோ முதலியவை இரக்கப்பொருளைத் தருவன.

(9) ஆ, அம்ம, ஓ, ஓகோமுதலியவை வியப்புப்பொஜளத் தருவன.

(10) கூகூ, ஐயோ முதலியவை அச்சப்பொருளைத் தருவன.

(11) சீ, சீச்சி, சை முதலியவை இகழ்ச்சிப்பொருளைத் தருவன.

குறிப்பின் வருமிடைச்சொற்கள் வருமாறு:–

(1) அம்மென, இம்மென, கோவென, சோவென, துடுமென, ஒல்லென, கஃறென, எனவும், கடகடென, களகளென, திடு திடென, நெறுநெறென, படபடென. எனவும், வருவன ஒலிக் குறிப்புப்பொருளைத் தருவன.

(2) துண்ணென, துணுக்கென, திட்கென, திடுக்கென என்றாற் போல்வன அச்சுக்குறிப்புப்பொருளைத் தருவன.;

(3) பொள்ளென, பொருக்கென, கதுமென, ஞெரேலென, சரேலென என்றாற்போல்வன விரைவுக் குறிப்புப்பொருளைத் தருவன.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மேலே **'தத்தம் பொருள'** வென்ற அவை இவை யென வுணர்த்து கின்றது.

**இ—ள்.:—** தெரிநிலை முதலாக எடுத்தோதிய இப்பதினான்கும் இவை போல்வன பிறவும் மேலேதத்தம் பொருளவென்ற இடைச்சொற்களாம், **எ—று.**

இவற்றுள், விழைவு என்றது ஆசை, மற்றைய பொருள் விளங்கிக் கிடந்தன. இவை போல்வன பிறவுமென்றவற்றுள், சில வருமாறு:—

அக்கொற்றன், எக்கொற்றன் என்பன சுட்டுப்பொருளும் வினாப்பொருளுந் தந்தன. நக்கீரர், நப்பாலத்தனார் என்ப வற்றில் நகர இடைச்சொல் சிறப்புப் பொருளைத் தந்தது, 'அஆ விழந்தானென் றெண்ணப்படும்',

**'ஆஅ வளிய வலவன்',**

**'அந்தோ விசையைப் பட்டன',**

**'அன்னோ பரற்கான மாற்றின கொல்லோ'**

என்பனவற்றுள் அஆவும், ஆவும், அந்தோ, அன்னோ என்ப னவும் இரக்கப்பொருளைத் தந்த இடைச்சொற்கள். இவற்றிற்கு, அதிசயப்பொருளும் உளவாம்.

**'அறிதோ றறியாமை கண்டற்றால்',**

**'செரிதோறிது செல்வத் தியற்கை'**

என்புழி, தோறும் தொறுவும் இடப்பன்மைப் பொருளைத் தந்தன. 'இனிச்செய்வான்', 'இனிஎம்மெல்லை' என்புழி, இனி என்னு மிடைச் சொல் முறையே காலப்பொருளும் இடப் பொருளுந் தந்தது. பிறவுமிவ்வாறே. தனித்து நடக்குந் தன்மை யின்றிப் பெயர் வினைகளைச் சார்ந்து வருமாயின் அவை யெல்லாம் இடைச்சொல்லென்றும், அவைதரும் பொருளை யிடைப் பொருளென்றுங் கண்டு கொள்க. இனித் தெரிநிலை தேற்ற முதலிய பதினான்கிற்கு முதாரணம் இனி வருஞ் சிறப்புச் சூத்திரங்களுட் காண்க.

**"அவைதாம்**

**புணரியனிலையிடைப் பொருணிலைக் குதநவும்**

**வினை செயன் மருங்கிற் காலமொடு வருநவும்**

**வேற்றுமைப் பொருள் வயி னுருபாகுநவு**

**மசைநிலைக் கிளவி யாகி வருநவு**

**மிசைநிலைறக் கிளவி யாகி வருநவுந்**

**தத்தங் குறிப்பிற் பொருள் செய் குநவு**

**மொப்பில வழியாற் பொருள்செய் குநவுமென்**

**றப்பண் பினவே நுவலுங் காலை"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க. பதினா னாகும் இன்னனவும் இடைப்பொருளெனமுடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **தெரிநிலை** – தெரிநிலையும், **தேற்றம்** – தெளிவும், **ஐயம்** – சந்தேகமும், **முற்று** – முற்றும், **எண்** – எண்ணும், **சிறப்பும்** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **எச்சம்** – எச்சமும், **வினா**–வினாவும், **விழைவு** – விருப்பமும், **ஒழியிசை** – ஒழிந்த சொல்லும், **பிரிப்பு** – பிரிநிலையும், **கழிவு** – கழிதலும், **ஆக்கம்** – ஆக்கமும் (என்னும் பதினான்கும்), **இன்னன** – இவைபோல்வன பிறவும், **இடை** ('தத்தம்பொருள' என்ற) இடைச் சொற்களினுடைய, **பொருள்** – பொருள்களாம். (அவை மேற்காட்டப்படும்).

**'இன்ன' என்றதனாற் சிலவருமாறு :**

(1) அ, இ, உ – சுட்டுப் பொருளைத்தருவன : அவன்.

(2) எ, யா, ஆ, ஓ, ஏ – வினாப்பொருளைத் தருவன : எவன்?

(3) முன், பின் – இடைப்பொருளுங் காலப்பொருளுந் தருவன : முன்செய், பின் இரு.

(4) இனி – கால இடங்களில் எல்லைப் பொருளைத் தருவது : இனிச் செய்வேன், இனி எம் ஊர்.

(5) தொறும், தோறும் – தொழில் இடங்களின் பன்மைப் பொருளைத் தருவன : செய்தொறும், ஊர்தோறும்.

(6) ஆவது, ஆதல், ஆயினும், தான் – விகற்பப் பொருளைத் தருவன : பத்தாவது எட்டாவது கொடு.

(7) ஐயோ, ஆ, அந்தோ முதலியவை – இரக்கப் பொருளைத் தருவன : ஐயோகெட்டான்.

(8) அம்மா, ஆ, ஓ முதலியவை – வியப்புப் பொருளைத் தருவன : அம்மா பெரிது.

(9) வாளா, சும்மா, கொன்னே – பயனின்மைப் பொருளைத் தருவன: வாளா இருந்தான்.

(10) *சீ, சீச்சீ*, சை, முதலியவை – இகழ்ச்சிப் பொருளைத் தருவன :
*சீ சீ* போ.

(11) ந – உயர்வுப் பொருளைத் தருவது : நப்பின்னை, நக்கீரன்.

(12) கூ, கூ, ஐயோ முதலியவை – அச்சப் பொருளைத் தருவன : கூ! கூ!! கொள்ளை! 'ஐயோ' என்பது ஓசை வேறுபாட்டால் இரக்கப் பொருளையும், அச்சப் பொருளையுந் தருதல் கண்க.

(மற்றும் இவ்வாறு வருவனவற்றை ஆராய்ந்து அறிந்து கொள்க.)

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– தெரிநிலை** – தெரிநிலையும், **தேற்றம்** – தெளிவும், **ஐயம்** – சந்தேகமும், **முற்று** – முற்றும், **எண்** – எண்ணும் , **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **எச்சம்** – எச்சமும், **வினா** – வினாவும், **விழைவு** – விருப்பமும், **ஒழியிசை** – ஒழிந்த சொல்லும், **பிரிப்பு** – பிரிநிலையும், **கழிவு** – கழிவும், **ஆக்கம்** – ஆக்கமும், **இன்னன** – இவை போல்வன பிறவும், **இடைப்பொருள்** – தத்தம் பொருளவென்ற இடைச்சொற்களுடைய பொருள்களாம், எ – று.

இன்ன வென்றதனால் சில வருமாறு:–

(1) அ, இ, உ என்பன சுட்டுப் பொருளைத் தருவன.

(2) **எ, ஏ, யா, ஆ** என்பன வினாப்பொருளைத் தருவன.

(3) **முன், பின்** என்பன காலப்பொருளையும் இடப்பொருளையுந் தருவன.

(4) **இனி** யென்பது காலவிடங்
களின் எல்லைப்பொருளைத் தருவது.

(5) **தொறும், தோறும்** என்பன இடப்பன்மைப் பொருளையுந் தொழிற் பயில்வுப்பொருளையுந் தருவன.

(6) **வாளா, சும்மா** என்பன பயனின்மைப்பொருளைத் தருவன.

(7) **ஆவது, ஆதல், ஆயினும், தான்** என்பன விகற்பப் பொருளைத் தருவன.

(8) **ஐயோ, அந்தோ** முதலியவை இரக்கப்பொருளைத் தருவன.

(9) **ஆ, அம்ம, ஓ, ஓகோ** முதலியவை வியப்புப்பொருளைத் தருவன.

(10) **கூகூ, ஐயோ** முதலியவை அச்சப்பொருளைத் தருவன.

குறிப்பின் வருமிடைச்சொற்கள் வருமாறு:–

(1) **அம்மென, இம்மென, கோவென, சோவென, துடுமென, ஒல்லென, கஃறென சுஃறென** எனவும், **கடகடென, களகளென, திடுதிடென, நெறுநெறென, படபடென** எனவும், வருவன ஒலிக்குறிப்புப் பொருளைத் தருவன.

(2) **துண்ணென, துணுக்கென, திட்கென, திடுக்கென,** என்றாற்

போல்வன அச்சக்குறிப்புப் பொருளைத் தருவன.

(3) **பொள்ளென, பொருக்கென, கதுமென, ஞெரேலென, சரேலென** என்றாற் போல்வன விரைவுக்குறிப்புப் பொருளைத் தருவன.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ – ள்.:– தெரிநிலை** – தெரிநிலையும், **தேற்றம்** – தெளிவும், **ஐயம்** – சந்தேகமும், **முற்று** – முற்றும், **எண்** – எண்ணும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **எச்சம்** – எச்சமும். **வினா** – வினாவும், **விழைவு** – விருப்பமும், **ஒழியிசை** – ஒழிந்தசொல்லும், **பிரிப்பு** – பிரிநிலையும், **கழிவு** – கழிவும், **ஆக்கம்** – ஆக்கமும், **இன்னன** – இவைபோல்வனபிறவும், **இடைப்பொருள்** – தத்தம் பொருளவென்ற இடைச்சொற்களுடைய பொருள்களாம். **எ–று.**

(சிறப்பு – அதிகம், மேற்படுகை)

இன்னனவென்றதனால் சிலவருமாறு:

(1) அ, இ, உ என்பன சுட்டுப்பொருளைத் தருவன.

(2) எ, ஏ, யா, ஆ என்பன வினாப்பொருளைத் தருவன.

(3) முன், பின் என்பன காலப்பொருளையும் இடப்பொருளையுந் தருவன.

(4) இனியென்பது காலவிடங்களின் எல்லைப்பொருளைத் தருவது.

(5) தொறும், தோறும் என்பன இடப்பன்மைப் பொருளையுங் காலப் பன்மைப்பொருளையுந் தொழில்பயில்வுப் பொருளையுந் தருவன.

(6) வாளா, சும்மா என்பன பயனின்மைப் பொருளைத் தருவன.

(7) ஆவது, ஆதல், ஆயினும், தான், என், என்ன என்பன விகற்பப் பொருளைத் தருவன. (விகற்பமாவது பலவற்றுள் இதுதான் என்னுநியதியில்லாமை.)

(8) ஐயோ, அந்தோ முலியவை இரக்கப்பொருளைத் தருவன. ஐயோ வியப்புப் பொருளையுந்தரும்.

(9) ஆ, ஆகா, அம்ம, ஓ, ஓகோ முதலியவை வியப்புப்பொருளைத் தருவன.

(10) ஆவா, கூகூ, ஐயோ முதலியவை அச்சப்பொருளைத் தருவன.

(11) சீ, சீசீ, சிச்சீ, சை முதலியவை இகழ்ச்சிப்பொருளைத் தருவன.

குறிப்பின்வரு மிடைச்சொற்கள் வருமாறு :–

(1) அம்மென, இம்மென, கோவென, சோவென, துடுமென, ஒல்லென, கஃறென, சுஃறென. எனவும். கடகடென, களகளென, திடுதிடென, நெறுநெறென, படபடென. எனவும் வருவன ஒலிக்குறிப்புப் பொருளைத் தருவன.

(2) துண்ணென, துணுக்கென, திட்கென, திடுக்கென என்றாற் போல்வன அச்சக்குறிப்புப் பொருளைத் தருவன.

(3) பொள்ளென, பொருக்கென, கதுமென, ஞெரேலென, சரேலென என்றாற்போல்வன விரைவுக்குறிப்புப்பொருளைத் தருவன.

ஆம், ஓம் என்பன அங்கீகாரப்பொருளைத் தருவன. ஆம் – பிறர்கூற்றென்பதையுமுணர்த்தும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– **தெரிநிலை** – தெரிநிலையும், **தேற்றம்** – தெளிவும், **ஐயம்** – சந்தேகமும், **முற்று** – முற்றும், **எண்** – எண்ணும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **எச்சம்** – எச்சமும், **வினா** – வினாவும், **விழைவு** – விருப்பமும், **ஒழியிசை** – ஒழிந்தசொல்லும், **பிரிப்பு** – பிரிநிலையும், **கழிவு** – கழிதலும், **ஆக்கம்** – ஆக்கமும், (என்னும் பதினான்கும்), **இன்னன** – இவை போல்வன பிறவும், **இடை** – (தத்தம் பொருள்' என்ற ) இடைச்சொற்களினுடைய, **பொருள்** – பொருள்களாம்; எ–று. அவை – மேற் காட்டப்படும்.

'**இன்னன**' என்றதனால் சில வருமாறு:–

**அ, இ, உ**– சுட்டுப்பொருளைத் தருவன; அவன், இவன், உவன்.

**எ, யா, ஆ, ஓ, ஏ,** – வினாப்பொருளைத் தருவன; எவன், யாவன், பொன்னனா, சாத்தனோ, ஏது.

**முன், பின்,** – இடப்பொருளும் காலப்பொருளும் தருவன; முன் செய், பின் இரு.

**இனி** என்பது–கால இடங்களின் எல்லைப்பொருளைத் தருவன; இனிச் செய்வேன், இனி எம் ஊர்.

**தொறும், தோறும்**–தொழில் இடங்களின் பன்மைப்பொருளைத் தருவன; செய்தொறும் ஊர்தோறும்.

**ஆவது, ஆதல், ஆயினும்; தான்** – விகற்பப் பொருளைத் தருவன; பத்தாவது எட்டாவது கொடு, (பிறவும் இவ்வாறே காண்க.)

**அந்தோ, ஐயோ, ஆ** முதலியவை–இரக்கப் பொருளைத் தருவன; அந்தோ இழந்தான்.

**அம்மா, ஆ, ஓ,** முதலியவை–வியப்புப் பொருளைத் தருவன; அம்மா பெரிது.

**வாளா, சும்மா, கொன்னே**–பயனின்மைப் பொருளைத் தருவன; வாளா இருந்தான்.

**சீ, சிச்சீ** முதலியவை–இகழ்ச்சிப்பொருளைத் தருவன; சீ சீ போ.

'**ந**' என்பது – உயர்வுப் பொருளைத் தருவது; நப்பின்னை, நக்கீரன். மற்றும் இப்படி வருகின்றவற்றை ஆராய்ந்து அறிந்து கொள்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ன்.:– **தெரிநிலை** – தெரிநிலையும், **தேற்றம்** – தெளிவும், **ஐயம்** – சந்தேகமும், **முற்று** – முற்றும், **எண்** – எண்ணும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **எச்சம்** – எச்சமும், **வினா** – வினாவும், **விழைவு** – விருப்பமும், **ஒழியிசை** – ஒழிந்த சொல்லும், **பிரிப்பு** – பிரிநிலையும், **கழிவு** – கழிவும், **ஆக்கம்** – ஆக்கமும், **இன்னன** – இவை போல்வன பிறவும், **இடைப்பொருள்** – தத்தம் பொருளவென்ற இடைச்சொற்களுடைய பொருள்களாம். எ–று.

இன்னனவென்றவற்றுள் சில வருமாறு :–

(1) அ, இ, உ என்பன சுட்டுப்பொருளைத் தருவன.

(2) எ, யா, ஆ என்பன வினாப்பொருளைத் தருவன.

(3) முன், பின் என்பன காலப்பொருளையும் இடப்பொருளையுந் தருவன.

(4) இனியென்பது காலவிடங்களின் எல்லைப்பொருளைத் தருவது.

(5) தொறும், தோறும் என்ப இப்பன்மைப்பொருளையுந் தொழிற் பயல்வுப்பொருளையுந் தருவன.

(6) வாளா, சும்மா என்பன பயனின்மைப்பொருளைத் தருவன.

(7) ஆவது, ஆதல், ஆயினும், தான் என்பன விகற்பப்பொருளைத் தருவன.

(8) ஐயோ, அந்தோ முதலியவை இரக்கப்பொருளைத் தருவன.

(9) ஆ, அம்ம, ஒ, ஒகோ முதலியவை வியப்புப்பொருளைத் தருவன.

(10) கூகூ, ஐயோ முதலியவை அச்சப்பொருளைத் தருவன.

(11) சீ, சிச்சீ, சைமுதலியவை இகழ்ச்சிப்பொருளைத் தருவன.

(12) ந என்பது சிறப்புப்பொருள் குறித்து வரும்.

(உ–ம்.) நக்கீரர், நப்பின்னை, நச்செள்ளையார்.

(13) அம், இம், ஒல் முதலியவை ஒலிக்குறிப்புப் பொருளில் வரும்.

(உ–ம்.) அம்மென, இம்மென, ஒல்லென.

(14) துண், திடுக்கு முதலியவை அச்சக்குறிப்புப் பொருளில் வரும்.

(உ–ம்.) துண்ணென, திடுக்கென.

(15) பொள், கதும், ஞெரேல் முதலியவை விரைவுக்குறிப்புப் பொருளில் வரும்.

(உ–ம்.) பொள்ளென, கதுமென, ஞெரேலென.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

இ–ன்.:– **தெரிநிலை**–தெரிநிலையும், **தேற்றம்**–தெளிவும், **ஐயம்** – சந்தேகமும், **முற்று** – முற்றும், **எண்** – எண்ணும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **எச்சம்** – எச்சமும், **வினா** – வினாவும், **விழைவு** – விருப்பமும், **ஒழியிசை** – ஒழிந்த சொல்லும், **பிரிப்பு** – பிரிநிலையும், **கழிவு** – கழிவும், **ஆக்கம்** – ஆக்கமும், **இன்னன** – இவைபோல்வன பிறவும், **இடை** – (தத்தம் பொருள என்ற இடைச்சொற்களுடைய, **பொருள்** – பொருள்களாம். **எ–று.**

**பொ—ரை.:—**

தெரிநிலை முதலாகவிதந்த பதினான்கும் இவை போல்வன பிறவும் மேல் தத்தம் பொருள என்ற இடைச்சொற் பொருள்களாம்.

இன்னன என்றதனாற் சில வருமாறு:— அ, இ, உ என்பன சுட்டுப்பொருளைத் தருவன.

உ—ம்.:— அவன், இவன், உவன்.

எ, யா, என்பன வினாப்பொருளைத் தருவன.

(உ—ம்.) எவன், யாவன்.

முன், பின், இனி என்பன இடப் பொருளும், காலப் பொருளும் தருவன.

(உ—ம்.) முன் இருந்தான்.

பின் இருந்தான்.

இனி என்மூர். இடப்பொருள்.

(இனி—இனி வருமிடம்.)

முன் பிறந்தான்.

பின் பிறந்தான். காலப்பொருள்.

இனி வருவேன்.

தொறும், தோறும் என்பன தொழிலிடங் காலங்களின் பன்மைப் பொருளைத் தருவன.

(உ—ம்.) செயதொறும். தொழிற் பன்மைப் பொருள்.
காணுந்தோறும்.

ஊர்ந்தொறும்.இடப்பன்மைப்பொருள். ஊர்ந்தொறும்.

நாள் தொறும். காலப் பன்மைப்பொருள்.நாள் தோறும்.

ஆவது, ஆயினும் முதலியவை விகற்பப் பெருளைத் தருவன.

(உ—ம்.) பத்தாவது எட்டாவது கொடு.

பத்தாயினும் எட்டாயினும் கொடு.

விகற்பப் பொருள்.

ஐயோ, அந்தோ முதலியவை இரக்கப் பொருளைத் தருவன.

(உ—ம்.) ஐயோ பிரிந்தார். இரக்கப் பொருள்.

அந்தோ இழந்தார்.

அம்மா, ஆ, ஓ, ஒகோ முதலியவை வியப்புப் பொருளைத் தருவன.

(உ—ம்.) அம்மா பெரிது.

ஆ இஃதென்ன. வியப்புப் பொருள். ஓ ஓ பெரிது.
ஓகோ பெரிது.

கூ கூ, ஐயோ முதலிய அச்சப்பொருளைத் தருவன.

(உ—ம்.) கூ கூ புலி வந்தது. அச்சப் பொருள். ஐயோ சிச்சீ,

சை முதலியவை இகழ்ச்சிப் பொருளைத் தருவன.

(உ–ம்.) சீசீ போ.

சிச்சீ போ.இகழ்ச்சிப் பொருள்.சை யொழி.

கடகடடென, துடுமென, ஒல்லென முதலியவை ஒலிக்குறிப்புப் பொருளைத் தருவன.

(உ–ம்.) கடகடடெனத் தேரோடிற்று.

துடுமென விழுந்தது. ஒலிக்குறிப்புப் பொருள்.

துல்லென ஒலித்தது

பொள்ளென், சரேலென முதலியவை விரைவுக் குறிப்புப் பொருளைத் தருவன.

(உ–ம்.) பொள்ளென எழுந்தது.

சரேலெனப் பாய்ந்தது. விரைவிக் குறிப்புப் பொருள்.

'ந' என்பது உயர்வுப் பொருளைத் தருவது.

நக்கீரன்.

நப்பின்னை.உயப்வுப் பொருள்.

மற்றும் இப்படியே வருகிற பலவகைப்பட்ட இடைச்சொற்களை ஆராய்ந்தறிந்து கண்டுகொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**தெரிநிலை** – தெரிநிலையும், **தேற்றம்** – தெளிவும், **ஐயம்** – சந்தேகமும், **முற்று** – முற்றும், **எண்** – எண்ணும், **சிறப்பு** – சிறப்பும் , **எதிர்மறை** – எதிர்மறையும், **எச்சம்** – எச்சமும், **வினா** – வினாவும், **விழைவு** – விருப்பமும், **ஒழியிசை** – ஒழிந்த சொல்லும், **பிரிப்பு** – பிரிநிலையும், **கழிவு** – கழிவும் , **இரக்கம்** – இரக்கமும், **இன்னன** – இவைபோல்வன பிறவும், **இடை** – இடைச்சொற்களுடைய, **பொருள்** – பொருள்களாம்.

**இன்னன என்றதனால் சில வருமாறு :**

1. அ, இ, உ என்பன சுட்டுப்பொருளைத் தருவன.
2. எ, யா என்பன வினாப்பொருளைத் தருவன.
3. முன், பின், இனி என்பன இடப்பொருளையும், காலப் பொருளையும் தருவன.
4. தொறும், தோறும் என்பன இடப்பன்மைப் பொருளைத் தருவன.
5. ஆவது, ஆயினும் முதலியவை விகற்பப்பொருளைத் தருவன.
6. ஐயோ, அந்தோ முதலியவை இரக்கப்பொருளைத் தருவன.

7. ஆ, அம்மா, ஓ, ஓகோ முதலியவை வியப்புப்பொருளைத் தருவன.
8. கூகூ, ஐயோ முதலியவை அச்சப்பொருளைத் தருவன.
9. சீ, சீச்சீ, சை முதலியவை இகழ்ச்சிப்பொருளைத் தருவன.
10. கடகடென, துடுமென, ஒல்லென, கோவென, நெறுநெறென, படபடென முதலியவை ஒலிக்குறிப்புப் பொருளைத் தருவன.
11. பொள்ளென, சரேலென, பொருக்கென, கதுமென முதலியவை விரைவுக்குறிப்புப் பொருளைத் தருவன.
12. துண்ணென, துணுக்கென, திடுக்கென முதலியவை அச்சக் குறிப்புப் பொருளைத் தருவன.

## மோசகு பொன்னையா

தெரிநிலையும், தெளிவும், ஐயமும், முற்றும், எண்ணும், சிறப்பும், எதிர்மறையும், எச்சமும், வினாவும், விருப்பமும், ஒழிந்த சொல்லும், பிரிநிலையும், கழிவும், ஆக்கமும், இவை போல்வன பிறவும் தத்தம்பொருள. என்ற இடைச் சொற்களின் பொருளாம் எ–று.

இவற்றின் பொருள்விளக்கம் பின்னர் வரும் சிறப்பு நூற்பாக் களால் தெளிவுறும்.

இன்னன என்றதனால், அ, இ, உ என்னும் சுட்டிடைச் சொற் களையும்; எ, யா, ஆ, ஓ, ஏ என்னும் வினா விடைச் சொற் களையும்; கால, இடப் பொருள்களில் வரும் முன், பின் என்பனவற்றையும் கால, இட, எல்லைப் பொருள்களில் வரும் இனி1 என்பதையும்; இடப்பான்மையையும், தொழில் பயில்வையும் உணர்த்தி வரும் தொறும், தோறும் என்பவற்றையும்; பய னின்மைப் பொருளை உணர்த்திவரும் வாளா, சும்மா என்ப வற்றையும்; விகற்பப் பொருள்தந்து நிற்கும் ஆவது, ஆதல், ஆயினும், என்பவற்றையும்; பிரிவில் அசைநிலைகளாக வரும் ஆக ஆக, ஆகல் ஆகல், என்பது, என்பது ஒள ஒள, என்ப வற்றையும் இரக்கப் பொருளில் வரும் ஐயோ, அந்தோ முதலிய வற்றையும்; வியப்புப் பொருள்தரும் ஆ, அம்ம, ஓ, ஓகோ முதலியவற்றையும்; அச்சப்பொருள் தரும் கூகூ, ஐயோ முதலிய வற்றையும்; இகழ்ச்சிக் குறிப்பில் வரும் சீ, சிச்சீ, சை முதலிய வற்றையும்; இவ்வாறு வரும் பிற உளவேல் அவற்றையும் அமைக்க. நக்கீரன், நச்செள்ளை, நவ்வந்துவன், நப்பாலத்தன்

என்னுஞ் சிறப்புப் பெயர்களில் அமைந்த ந என்னும் இடைச்சொல்லையும் அதனாலேயே அமைக்க.

(2)

**421. பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே.**

**பிரிநிலை வினா எண் ஈற்று அசை தேற்றம்
இசைநிறை என ஆறு ஆகாரம்மே.**

pirinilai vinā eṇ īṟṟu asai tēṟṟam
isainiṟai eṉa āṟu ēkārammē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### The particle

(The particle) e has six meanings: Isolation, interrogation, enumeration, (final) expletive, emphasis, and metrical expletive.

## ஒப்புமைப் பகுதி

**தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந்து ஏகா ரம்மே**

(தொல். சொல்.: 257)

**ஏயும்.... இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைய வென்ப**

(தொல். சொல்.: 272)

**தேற்றம் வினாவெண் எதிர்மறையும் தேமொழியாய்
ஈற்றசையும் ஏகாரம் என்**

(நேமி.: 76: 3–4)

**தேற்றம் வினாஎண் பிரிநிலை எதிர்மறை
ஈற்றசை எனஆறே ஏகாரம்மே**

(இ.வி.: 252)

**எண்ணே பிரிநிலை ஈற்றசை தேற்றம்
வினாவோ ரைந்தும் விளங்கும் ஏகாரம்**

(மு.வீ.: 650)

**ஏவுங் குரையு இசைநிறை அசைநிலை**

(மு.வீ.: 661)

**ஏஎன் இடைச்சொல் ஈற்று அசைதேற்றம் எண்**

**வினாப் பிரிநிலை இசைநிறை என ஆறே**

**(தொ.வி.: 131)**

**மறைதேற்றம் பிரிவு எண்வினா ஈற்றசை ஆறு ஏயாம்**

**(சுவாமி.: 54: 3)**

## மயிலை நாதர்

**எ—ன்:—** வேற்றுமையுருபு முதலாயின நான்கும் மேலே சொல்லப்பட்டன; தத்தம் பொருளனவும் இசைநிறைப்பனவும் அசைநிலையும் குறிப்புமாவன வுணர்த்துவான் றொடங்கினார் அவற்றுள், இஃது ஏகார விடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

**இ—ள்.:—** ஒருகுழுவின் ஒன்றைப் பிரித்தற்கண்ணும் வினாதற்கண்ணும் பலவற்றை அடுக்கி எண்ணற்கண்ணும் ஈற்றிலே பொருள் வேண்டாவிடத்தும் ஒருபொருளைத் துணியுமிடத்தும் ஓசைநிறைக்க வேண்டுமிடத்தும் நிற்றவின், அவ்வப்பெயரான் ஆறு கூற்றதாம் ஏகாரம், **எ—று.**

**வ—று.:—**

'**அவனேகொண்டா**'னென்பது பிரிநிலை;

'**நீயே கொண்டா**'யென்பது வினா;

'**நிலனே நீரே தீயே வளியே**' என்பது எண்;

"**கடல் போற் றோன்றல காடிறந் தோரே**" (அகநா. 1) என்பது ஈற்றசை; அவனே கொண்டான், "உண்டேமறுமை" என்பன ŋj %഻ഺk; [1]"**ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்**" (சீவக.652) என்பது இசைநிறை.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** வேற்றுமையுருபு முதலிய நான்கும் மேலே சொல்லப்பட்டமையின் அவற்றை ஒழித்து ஏனையவற்றை உணர்த்துவான் தொடங்கி அவற்றுள் ஏகார இடைச்சொல்லிலக்கணம் **உணர்—ற்று.**

**இ—ள்.:—** தெரிநிலை முதலிய பதினான்கும் அவைபோல்வன பிறவுமாகிய பொருள்களுள்ளும் இசைநிறைத்தல் அசைத்தல் குறிப்பு என்னும் மூன்று பொருள்களுள்ளும் பிரிநிலை முதலிய ஆறு பொருளையும் தரும் ஏகார இடைச் சொல், **எ—று.**

**வ—று.:—**

'**அவனே கொண்டான்**' என்பது ஒரு குழுவினின்றும்

பாட வேறுபாடு.:—

1. ஏஎ

ஒருவனைப் பிரித்து நிற்றலின் பிரிநிலை. இவ்வேகாரம் '**அவனே கொண்டான்**' என்னும் பொருள்பட வினாவி நிற்பின் வினா. 'நிலனே நீரே தீயே வளியே' என்பது நிலனும் நீரும் தீயும் வளியும் என்னும் பொருள்பட எண்ணி நிற்றலின் எண். "கடல் போல் தோன்றல காடிறந் தோரே" என்பது சொல்லிறுதிக்கண் அசைத்தற்பொருள் தருதலின் ஈற்றசை. இவ் ஏகார அசைநிலை முதற்கண் வாராது என்பார் ஈற்றசை என்றார். '**அவனே கொண்டான்**' என்பது துணிதற்பொருள் தரின் தேற்றம். இத்தேற்றப்பொருள் பிரிநிலைக்கண்ணே உளது ஆதலின் இப்பொருளை வேறெடுத்துக் கூறுதல் ஏனையபோற் சிறப்புடைத் தன்று என்பார் இதனைப் பொருட்சிறப்பில்லாத ஈற்றசைக்கும் இசைநிறைக்கும் இடையே கூறினார். [2]"**ஏ ஏ இவளொருத்தி பேடியோ என்றார்**" என்பது இசை நிறைத்தற் பொருள் தருதலின் இசைநிறை. அவனே கொண்டான் என்பது ஒரோவழி அவன் கொள்கிலன் என எதிர்மறைப்பொருள் தரின் அது செம்பொருளன்றி வலிந்து கொள்ளப்படுதலின் '**புதியன புகுதலும் வழுவல**' என்பதன் பாற்படுத்துக.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** வேற்றுமையுருபு முதலான நாலும் மேலே சொல்லப்பட்டன; தத்தம் பொருட்டு வருவனவும் இசை நிறைப்பனவும் அசைநிலையும் குறிப்புமாவன உணர்த்தத் தொடங்கினார்; இது ஏகார இடைச்சொல் இயல்பு கூறுகின்றது.

**இ–ள்.:– பிரிநிலை வினா**–ஒரு குழுவின் ஒன்றைப் பிரித்தற்கண்ணும் வினாதற்கண்ணும், அவனே கொண்டான் என்பது பிரிநிலை ஏகாரம். நீயே கொண்டாய் என்பது வினா ஏகாரம். **எண்** – பலவற்றை அடுக்கி எண்ணுதற் கண்ணும், நிலனே நீரே தீயே வளியே என்பது எண்ணேகாரம். **ஈற்றசை** – ஈற்றிலே பொருள் வேண்டா இடத்தும், கடல்போல் றோன்றல காடிறந் தோரே (அகம்.1) என்பது ஈற்றசை ஏகாரம். **தேற்றம்** – ஒரு பொருளைத் துணியுமிடத்தும், (பொருள் கொள்வார் மேற்றே புகழ் என்பது தேற்றேகாரம். **இசைநிறை** – ஓசை நிறைக்க வேண்டுமிடத்தும், ஏஏ யிவளொருத்தி பேடியோ வென்றார் (சீவக.652) என்பது இசைநிறை ஏகாரம். **எனவா றேகா ரம்மே** – அவ்வப் பெயரால் ஆறு கூற்றதாம் ஏகாரம், எ–று.

## விசாகப் பெருமாளையர்

**இது,** வேற்றுமை முதலாகிய நான்கும் முன்னே சொல்லப்பட்டதனால் அவையொழிந்த மற்றவைகளில் ஏகார விடைச்சொல்லிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.:– பிரிநிலை**–பிரிநிலையும், **வினா** – வினாவும், **எண்**–எண்ணும், **ஈற்றசை** – ஈற்றிலசைத்தலும், **தேற்றம்**–தெளிவும், **இசைநிறை** – இசைநிறைத் தலும், **என**–என்று, **ஆறு** – ஆறுபொருளைத்தரும், **ஏகாரம்**–ஏகாரவிடைச் சொல், எ–று.

வ—று.: —

'அவனேகொண்டான்', என்பது ஒரு கூட்டத்திலிருந்து ஒருவனைப் பிரித்து நிற்கையாற் பிரிநிலை 'நீயேகொண்டாய்' என்பது நீயா கொண்டாய் என வினாவி நிற்கையால் வினாவாம். நிலனே நீரே தீயே வளியே, என்பவை நிலனு நீருந் தீயும் வளியும் எனவெண்ணி நிற்கையால் எண்ணாம். 'வகுத்தனர் கொளலே'. என்பது இறுதியிலசைத்து நிற்கையால் ஈற்றசையாம், 'நானே கொண்டேன்' என்பது துணிவைக் காட்டுதலால் தேற்றமாம். 'ஏஎ யிவளொருத்தி பேடியோவென்றார்' என்பது இசைநிறைத்து நிற்கையால் இசைநிறையாம்.

(அன்றியும், யானேகொண்டேன் என்பது, யான் கொள்கில னென்னும் எதிர்மறைப் பொருள்தருதலால் எதிர்மறை; ஏகாரம் எதிர்மறைப் பொருளைத் தருவது **புதியன புகுதலாற்** கொள்க.)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஏகாரவிடைச்சொல் எத்தனைபொருளைத் தரும்?

பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே.

(பிரிநிலை வினா எண் ஈற்றசை தேற்றம் இசைநிறை என ஆறு ஏகாரம்மே.)

**இ—ள்.:—** பிரிநிலையும் வினாவும் எண்ணும் ஈற்றிலசைத்தலும் தெளிவும் இசைநிறைத்தலும் என்று ஆறுபொருளைத் தரும் ஏகாரவிடைச்சொல். **எ—று.**

வ—று.:—

(1) அவருள் இவனே கள்வன்: இங்கே ஒருகூட்டத்தினின்றும் ஒருவனைப் பிரித்துநிற்றலாற் பிரிநிலை.

(2) நீயே கொண்டாய்: இங்கே நீயா கொண்டாயென்னும் பொருளைத் தருமிடத்து வினா.

(3) நிலமே நீரே தீயே வளியே: இங்கே நிலமு நீருந் தீயும் வளியும் எனப் பொருட்பட எண்ணிநிற்றலால், எண்.

(4) "என்று மேத்தித் தொழுவோ மியாமே." இங்கே வேறுபெருளின்றி இறுதியிலே சார்த்தப்பட்டு நிற்றலால் ஈற்றசை.

(5) உண்டே மறுமை: இங்கே உண்டென்பதற்கு ஐயமில்லையென்னுந் தெளிவுப்பொருளைத் தருதலால் தேற்றம்.

(6) "ஏயேயிவளொருத்தி பேடியோவென்றார்." இங்கே வேறு பொருளின்றிச் செய்யுளில் இசை நிறைத்து நிற்றலால் குசைநிறை.

அவனே கொண்டான் என்பது ஒரோரிடத்து அவன்கொண்டிலன் என எதிர்மறைப்பொருள்பட நிற்றல் "புதியன புகுதலும் வழுவல" என்பதனாற் கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** வேற்றுமை யுருபு முதலிய நான்கும் மேற் சொல்லப்பட்டமையால் அவற்றை யொழித்து ஒழிந்தனவற்றை யுணர்த்தத் தொடங்கி அவற்றுள் ஏகார இடைச்சொல் இலக்கணம் இச்சூத்திரமுணர்த்திற்று.

**இ–ள்.:–** (மேற்கூறிய பொருள்களுள்) பிரிநிலை முதலிய ஆறுபொருளையுந் தரும் ஏகாரவிடைச்சொல், **எ–று.**

**வ–று.:–**

'அவருளிவனே கொண்டான்' என்பது, ஒருகூட்டத்தில் நின்றும் ஒருவனைப் பிரித்தமையாற் பிரிநிலை, 'இவனே கொண்டான்' என வினாவி நிற்பின் வினா; 'நிலனே நீரே தீயே வளியே' என்பன நிலனும் நீரும் தீயும் வளியும் என எண்ணி நிற்றலால் எண். 'கடல்போற் றோன்றல் கங்குலது நிலையே' என்பது, சொல்லின் இறுதியில் ஓரசையாக அசைத்தற் பொருள்பட நிற்றலின், அசைநிலை; 'அவனேகொண்டான்' என்பது துணிதற்பொருள்பட நிற்பின், தேற்றம்; 'ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்' என்பது, இசைநிறைத்து நிற்றலின் இசைநிறை, எனக் காண்க.

ஏகாரம் அசைநிலையாக வருங்கால் முதற்கண் வாராதென்று சொல்ல வந்தவர் 'ஈற்றசை' யென்றார், 'அவனே கொண்டான்' என்பது ஒரோரிடத்து அவன்கொண்டிலன் என எதிர்மறைப் பொருள்பட நிற்றலும், 'ஏயே யிவளொருத்தி பேடியோ' என்றது 'ஏயே சீசீ யெல்லைந்து மிகழ்ச்சி' என்பது நிகண்டு ஆதலால், இசை நிறைத்தலன்றி இகழ்ச்சிப் பொருள்பட நிற்றலும் 'புதியன புகுதலும் வழுவல'வென்பதனாற் கொள்க. "தேற்றம் வினாவே பிரிநிலை யெண்ணே யீற்றசை யிவ்வைந்தே காரம்மே" என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க. இதனுள், தரும் என்னு முற்றுவினைச் சொல் குறைந்து நின்றது. ஏகாரமென்பதை அதற்குப் பயனிலையாக்கி முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **ஏகாரம்** – ஏகார இடைச்சொல், **பிரிநிலை** – பிரிநிலையும், **வினா** – வினாவும், **எண்** – எண்ணும், **ஈற்றசை** – ஈற்றசையும், **தேற்றம்** – தெளிவும், **இசைநிறை** – இசைநிறைத்தலும், **என** – என்று, **ஆறு** – ஆறுபொருள்தரும்.

**உதாரணம் :**

(1)அவர்களுள் இவனே கொண்டான் – இதில், ஒரு கூட்டத்திலிருந்து ஒருவனைப் பிரித்து நிற்றலால், பிரிநிலை.

(2)நீயே கொண்டாய் – இதில் நீயோ கொண்டாய்? என வினாவுதற் பொருளைத் தருதலால், வினா.

(3)நிலமே, நீரே, தீயே – இதில் நிலமும் நீரும் தீயும் என எண்ணுதலால், எண்.

(4)"இயம்புவ னெழுத்தே" – இதில் வேறு பொருள் இல்லாமல் இறுதியில் அசைத்து நிற்றலால், ஈற்றசை.

(5)உண்டே மறுமை – இதில் தெளிவுப் பொருளைத் தருதலால், தேற்றம்.

(6)"ஏயே இவளொருத்தி பேடி" – இதில் வேறு பொருளில்லாமற் செய்யுளில் இசையை நிறைத்து நிற்றலால், இசைநிறை.

இனிப், "புதியன புகுதல்" என்பதனால், 'நானே கொண்டேன்' எனச் சிலவிடத்து 'நான் கொண்டிலேன்' என்று எதிர்மறைப் பொருள்பட நிற்றலும், "எ ஏ சீ சீ யெல்லைந்து மிகழ்ச்சி" என்னும் நிகண்டுவால் 'ஏ எ பேதை' என இகழ்ச்சிப் பொருள்பட நிற்றலுங் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:–** **பிரிநிலை** – பிரிநிலையும், **வினா** – வினாவும், **எண்**–எண்ணும், **ஈற்றசை** – ஈற்றிலசைத்தலும், **தேற்றம்**–தெளிவும், **இசை நிறை** – இசைநிறைத்தலும், **என ஆறு ஏகாரம்** – என்று ஆறுபொருளைத் தரும் ஏகாரவிடைச்சொல், எ – று.

வ–று.:–

(1)'**அவருள் இவனே கள்வன்**'. இங்கே ஒருகூட்டத்தினின்றும் ஒருவனைப் பிரித்து நிற்றலாற் பிரிநிலை.

(2) '**நீயே கொண்டாய்?**' இங்கே நீயா கொண்டாயென்னும் பொருளைத் தருமிடத்து வினா.

(3) '**நிலமே நீரே தீயே வளியே**'. இங்கே நிலமு நீருந் தீயும் வளியும் எனப் பொருள்பட எண்ணி நிற்றலால் எண்.

(4)"**என்று மேத்தித் தொழுவோ மியாமே**" இங்கே வேறுபொருளின்றி இறுதியிலே சார்த்தப்பட்டு நிற்றலால் ஈற்றசை.

(5) '**உண்டே மறுமை**'. இங்கே உண்டென்பதற்கு ஐயமில்லையென்னுந் தெளிவுப்பொருளைத் தருதலாற் றேற்றம்.

(6) **"ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்"** இங்கே வேறுபொருளின்றிச் செய்யுளில் இசை நிறைத்து நிற்றலால் இசைநிறை.

**'அவனே கொண்டான்'** என்பது ஒரோரிடத்து அவன் கொண்டிலன் என எதிர்மறைப்பொருள்பட நிற்றல் **"புதியன புகுதலும் வழுவல"** என்பதனாற் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ – ள்.:– **பிரிநிலை** – பிரிநிலையும், – **வினா** – வினாவும் – **எண்** – எண்ணும், – **ஈற்றசை** – ஈற்றிலசைத்தலும், – **தேற்றம்** – தெளிவும், – **இசைநிறை** – இசைநிறைத்தலும், – **என ஆறு ஏகாரம்** – என்று ஆறு பொருளைத் தரும் ஏ காரவிடைச்சொல். எ–று.

**வாறு.:–**

(1)அவருள் இவனே கள்வன்: இங்கே ஒரு கூட்டத்தினின்றும் ஒருவனைப் பிரித்துநிற்றலாற் பிரிநிலை.

(2)நீயே கொண்டாய்: இங்கே நீயே கொண்டாயென்னும் பொருளைத்தருமிடத்து வினா.

(3)நிலமே நீரே தீயே வழியே இங்கே நிலமு நீருந் தீயும் வளியும் எனப் பொருள்பட எண்ணிநிற்றலால், எண்.

(4) "என்று மேத்தித் தொழுவோ மியாமே" இங்கே வேறுபொருளின்றி இறுதியிலே சார்த்தப்பட்டு நிற்றலால், ஈற்றசை.

(5) உண்டேமறுமை. இங்கே உண்டென்பதற்கு ஐயமில்லையென்னுந் தெளிவுப்பொருளைத் தருதலாற் றேற்றம்.

(6) 'ஏயேயிவளொருத்தி பேடியோவென்றார்' இங்கே வேறுபொருளின்றிச் செய்யுளில் இசைநிறைத்து நிற்றலால் இசைநிறை. அவனேகொண்டான் என்பது ஒரோரிடத்து அவன் கொண்டிலன் என எதிர்மறைப் பொருள்பட நிற்றல் "புதியனபுகுதலும் வழுவல" என்பதனாற் கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:–** **ஏகாரம்** – ஏகார இடைச்சொல், **பிரிநிலை**–பிரிநிலையும், **வினா**–வினாவும், **எண்** – எண்ணும், **ஈற்றசை** – ஈற்றசையும், **தேற்றம்** – தெளிவும், **இசைநிறை** – இசைநிறைதலும், **என** –என்று, **ஆறு** –ஆறு பொருள்தரும்.

**உ–ம்.:–**

(1) **'அவர்களுள் இவனே கொண்டான்'**–இதில், ஒரு

கூட்டத்திலிருந்து ஒருவனைப் பிரித்து நிற்றலால்; பிரிநிலை.

(2) 'நீயேகொண்டாய்?'–இதில் நீயா கொண்டாய் என வினாவுதற் பொருளைத் தருமிடத்து, வினா.

(3) 'நிலமே நீரே தீயே' – இதில், நிலமும் நீரும் தீயும் என எண்ணுதலால், எண்

(4) "இயல்புவனெழுத்தே"–இதில், வேறுபொருள் இல்லாமல் இறுதியில் நிற்றலால், ஈற்றசை.

(5) 'உண்டே மறுமை' – இதில், தெளிவுப்பொருளைத் தருதலால், தேற்றம்.

(6) "ஏயே இவளொருத்தி பேடி! "– இதில், வேறு பொருளில்லாமல் செய்யுளில் இசையை நிறைத்து நிற்றலால், இசைநிறை.

இனி, 'நானே கொண்டேன்?' என வினாவுகையில் சிலவிடத்து, நான் கொண்டிலேன் என்று எதிர்மறைப் பொருள்பட நிற்றலும்; ஏ ஏபேதை! என இகழ்ச்சிப் பொருள்பட நிற்றலும் முதலியவற்றை **"புதியன புகுதல்"** என்பதனால் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:–** **பிரிநிலை** – பிரிநிலையும், **வினா** – வினாவும், **எண்** – எண்ணும், ***ஈற்றசை*** – ஈற்றிலசைத்தலும், **தேற்றம்** – தெளிவும், **இசை நிறை** – இசை நிறைத்தலும், **என ஆறு ஏகாரம்** – என்று ஆறுபொருளைத் தரும் ஏகார விடைச்சொல். **எ–று.**

**உ–ம்.:–**

(1) அவருள் இவனே கள்வன் – இங்கே ஒரு கூட்டத்தினின்றும் ஒருவனைப் பிரித்து நிற்றலாற் பிரிநிலை.

(2) நீயே கொண்டாய்? – இங்கே நீயா கொண்டா யென்னும் பொருளைத் தருமிடத்து வினா.

(3) நிலமே நீரே தீயே வளியே – இங்கே நிலமும் நீரும் தீயும் வளியும் எனப் பொருள்பட எண்ணிநிற்றலால் எண்.

(4) "என்று மேத்தித் தொழுவோ மியாமே" – இங்கே வேறுபொருளின்றி இறுதியிலே சார்த்தப்பட்டு நிற்றலால் ஈற்றசை.

(5) உண்டே மறுமை – இங்கே உண்டென்பதற்கு ஐயமில்லை யென்னுந் தெளிவுப்பொருளைத் தருதலால் தேற்றம்.

(6) "ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்" – இங்கே வேறுபொருளின்றிச் செய்யுளில் இசை நிறைத்து நிற்றலால் இசைநிறை.

அவனே கொண்டான் என்பது ஒரோரிடத்து அவன் கொண்டிலன் என எதிர்மறைப்பொருள்படி நிற்றல் "புதியன புகுதலும் வழுவல" என்பதனாற் கொள்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– பிரிநிலை** – பிரிநிலையும், **வினா** – வினாவும், **எண்** – எண்ணும், **ஈற்றசை** – ஈற்றலசைத்தலும், **தேற்றம்** – தெளிவும், **இசை நிறை** – இசை நிறைத்ததலும், **என ஆறு** – என்று ஆறு பொருளைத் தரும்; **ஏகாரம்** – ஏகார இடைச்சொல். **எ–று**

**பொ–ரை.:–**

(தெரிநிலை முதலிய பதினொன்கும், அவைபோல்வன பிறவுமாகிய பொருள்களுள்ளும்) பிரிநிலை முதலிய ஆறு பொருளையும் தரும் ஏகார இடைச்சொல்.

1. அவனே கொண்டான்.

   ஒரு கூட்டத்திலிருந்து ஒருவனைப் பிரித்து நிற்கையால் பிரிநிலை.

2. நீயே கொண்டாய்.–

   நீயா கொண்டாய் என வினாவி நிற்கையால் வினாவாம்.

3. நிலனே நீரே தீயே வளியே.

   நிலனும் நீரும் தீயும் வளியும் என எண்ணி நிற்கையால் எண்ணாம்.

4. வகுத்தனர் கொளலே.–

   இறுதியில் அசைத்து நிற்கையால் ஈற்றசையாம்.

5. நானே கொண்டேன்.

   துணிவைக் காட்டுதலால் தேற்றமாம்.

6. ஏ ஏ இவளொருத்தி பேடியோவென்றார்.

   இசை நிறைத்து நிற்கையால் இசை நிறையாம்.

அன்றியும், யானே கொண்டேன் என்பது யான் கொள்கிலன் எனன்னும் எதிர்மறைப் பொருளைத் தருதலால் எதிர்மறையாம்; ஏகாரம் எதிர்மறைப் பொருளைத் தருவது புதியன புகுதலால் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**ஏகாரம்** – ஏகார இடைச்சொல், **பிரிநிலை** – பிரிநிலையும், **வினா** – வினாவும், **எண்** – எண்ணும், **ஈற்றசை** – ஈற்றசையும், **தேற்றம்** – தெளிவும், **இசை நிறை** – இசைநிறையும், **என** – என்று, **ஆறு** – ஆறு பொருளைத் தரும்.

**உதாரணம்**

| | |
|---|---|
| 1. இவர்களுள் அவனே கொண்டான் | ஒரு கூட்டத்திலிருந்து ஒருவனைப் பிரித்து நிற்கையால் பிரிநிலை. |
| 2. நீயே கொண்டாய்? | நீயாகொண்டாய் எனவினாவி நிற்கையால் வினா. |
| 3. நிலனே நீரே தீயே வளியே | நிலனும் நீரும் தீயும் வளியும் என எண்ணி நிற்கையால் எண். |
| 4. வகுத்தனர் கொளலே | இறுதியில் அசைத்து நிற்கையால் ஈற்றசை. |
| 5. நானே கொண்டேன் | துணிவைக் காட்டுதலால் தேற்றம் |
| 6. ஏ ஏ இவளொருத்தி பேடியோ என்றார் | இசை நிறைத்து நிற்கையால் இசைநிறை. |

அன்றியும், யானே கொண்டேன் என்பது யான்கொண்டிலேன் என்னும் எதிர்மறைப் பொருளைத் தருதலால் எதிர்மறை.

ஏகாரம், எதிர்மறைப் பொருளைத் தருவது **புதியன புகுதல்.**

## மோசசு பொன்னையா

பிரிநிலை, வினா, எண், இறுதிஅசை, தெளிவு, சொல், நிறைவு என்னும் ஆறு பொருளிலும் ஏகார இடைச்சொல் வரும் **எ—று.**

**எ-டு.:-**

| | |
|---|---|
| 1.இவருள் இவனே கள்வன் | பிரிநிலை |
| 2.நீயே கொண்டாய் | வினா |
| 3.நிலனே, நீரே, தீயே | எண் |
| 4.அழகான் மருட்டிய தாழ்குழலே | ஈற்றசை |
| 5.உண்டே மறுமை | தேற்றம் |
| 6.ஏயே யிவளொருத்தி பேடியோ! | இசைநிறைவு |

தொல்காப்பியர்,

**தேற்றம் வினாவே பிரிநிலை யெண்ணே**

**யீற்றசை யிவ்வைந் தேகா ரம்மே,**

என வரும் ஏகார இடைச்சொல் பற்றிய நூற்பாவில் இசைநிறை ஏகாரம் என ஒன்றைக் கூறவில்லை. அவர் ஏகார ஈறுபற்றிய புணர்ச்சி விதியமைக்கும் எழுத்ததிகாரத்தில்,

**மாறுகோள் எச்சமும் வினாவும் எண்ணும்**

**கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும்,**

எனக் கூறியுள்ளதால், ஏகார இடைச்சொல்லுக்கு மாறுகோட் பொருள் கொளல் அவர்க்கு உடம்பாடு எனத்தெரிவித்துள்ளார்.

நேமிநாதமுடையார்,

**தேற்றம் வினாவெண் ணெதிர்மறையுந் தேமொழியாய்**

**ஈற்றசையு மேகார மென்,**

எனக் கூறி, பிரிநிலை ஏகாரம் ஒழிந்தவற்றைக் கொண்டார். அதன் உரைகாரர், '**தேற்றேகாரத்துள்ளே அடங்குமாதலாற் பிரிநிலையேகாரம் வேண்டிற்றிலர் என்றறிக**' என அதற்கு நியாயமுங் கூறினார்.

இசைநிறை ஏகாரம் என்று இவர் கொண்டதற்கு எடுத்துக் காட்டாகத் தரப்படும் 'ஏயே யிவளொருத்தி பேடியோ' என்பது சொல்லின் இகழ்ச்சிப் பொருள் நிறை செய்யும் இடைச் சொல்லாகக் காணப்படுகின்றது.

(2)

## 422. ஒழியிசை வினாச் சிறப் பெதிர்மறை தெரிநிலை கழி வசைநிலை பிரிப் பெனஎட் டோவே

**ஒழியிசை வினாச் சிறப்பு எதிர்மறை தெரிநிலை**
**கழிவு அசைநிலை பிரிப்பு என எட்டு ஓவே**

oḷiyisai viṉās siṟappu eṭirmaṟai ṭerinilai
kaḷivu asainilai pirippu eṉa ettu ōvē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### The particle ê

(The particle) ê has eight meanings: Ellipsis of counterpart, interrogation, speciality, negation, certainity, pity, expletive, and isolation.

ஒப்புமைப் பகுதி

**பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை**
**தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ**
**இருமூன் றென்ப ஓகா ரம்மே**

**(தொல். சொல்.: 256)**

**சிறப்பும் வினாவும் தெரிநிலையும் எண்ணும்**
**உறுப்பின் எதிர்மறையி னோடும் – வெறுத்த**
**ஒழியிசையும் ஈற்றசையும் ஓகாரஞ் சொல்லா**
**ஒழிபொருளும் சார்த்தி உணர்**

**(நேமி.: 79)**

**ஒழியிசை வினாச்சிறப்பு எதிர்மறை தெரிநிலை**
**கழிவு பிரிப்பு அசைநிலை என எட்டு ஓவே**

**(இ.வி.: 253)**

**தெரிநிலை எதிர்மறை சிறப்புப் பிரிநிலை**
**ஒழியிசை வினாவாறு ஓகாரம்மே**

**(மு.வீ.: 649)**

**ஓபிரிப்பு அசைநிலை ஒழிவு எதிர்மறை வினாத்**
**தெளிவு கழிவு சிறப்பு என எட்டே**

**(தொ.வி.: 132)**

**நீக்கம் மறை அசைதெரிவு பிரிவு வினா ஒழிவு**
**நிகழ்சிறப்பு எட்டு ஓவாகும் ............**

(Rt hÄ.: 55: 2)

## மயிலை நாதர்

**எ–ன்,** ஓகார இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:–** ஒரு சொல்லொழிய வரும் ஒழியிசையும் வினாவும் ஒன்றைச் சிறப்பிப்பதும் அறிந்தபொருளை எதிர்மறுப்பதும் [1]தெரிநிலையும் ஒரு பொருட் கழிவும் அசைநிலையும் பிரிநிலையுமென்னும் எட்டுப்பொருட் கூற்றதாம் ஓகாரம், **எ–று.**

வ–று.:–

'**கொளலோ** கொண்டானென்பது ஒழியிசை ; கோடற்குத் தகுமாயினும் கொண்டுய்யப் போயினானல்லனென ஒரு சொல் ஒழிவுபட வந்தமையின். 'அவனோ அல்லனோ' வென்பது வினா. ''ஒஒ பெரியன்'' என்பது சிறப்பு. யானோ கொண்டேனென்பது எதிர்மறை. 'நன்றோ அன்று, தீதோ அன்'றென்பது தெரிநிலை ; இடை நிகர்த்ததென்பது தெரித்தமையின்.

**''நைதலொன்றி நல்லறஞ்[1] செய்கின்றிலா, ரோஓ தமக்கோ ருறுதி யுணராரோ''** என்பது கழிவு.

**''சார னாட நடுநாள், வாரல் வாழியோ வருந்துதும் யாமே''** (குறுந்.69),

**''காணிய வம்மினோ [2]கங்குலது நிலையே''** என்பன அசைநிலை;

**''முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர், விதைக்குறு வட்டிபோதொடு பொதுளப், பொழுதோ[3]தான்வந் தன்றே''** (குறுந். 155) என்பது பிரிநிலை.

---

பாட வேறுபாடு.:–

**1. (1) தெரிவு,**
**( 2) தெரியும்.**

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், ஒகார இடைச்சொல்லிலக்கணம் **உணர்–ற்று.**

**இ–ள்.:** ஒழியிசை முதலிய எட்டுப்பொருளையும் தரும் ஒகார இடைச்சொல், எ–று.

**வ–று.:–**

கொளலோ கொண்டான் என்பது கொண்டுய்யப் போயினான் அல்லன் என்றற்றொடக்கத்து ஒழிந்த சொற்களைத் தருதலின் ஒழியிசை.

**'குற்றியோ மகனோ'** என்பது வினா. சிறப்பு உயர்வுசிறப்பு இழிவுசிறப்பு என இருவகைத்து.

**'ஓஒ பெரியன்'** என்பது உயர்வுசிறப்பு.

**'ஓஒ கொடியன்'** என்பது இழிவுசிறப்பு.

**'அவனோ கொண்டான்'** என்பது கொண்டிலன் என்னும் பொருள் தந்தவழி எதிர்மறை.

அலியை நோக்கி **'ஆணோ அதுவும் அன்று'** பெண்ணோ அதுவும் அன்று என்பது அத்தன்மையின்மை தெரிந்தவழி நிற்றலின் தெரிநிலை.

உறுதியுணராது கெட்டாரை **"ஓஒ தமக்கோர் உறுதி உணராரோ"** என்பது கழிவிரக்கப் பொருள் தருதலின் கழிவு.

**"காணியவம்மினோ கங்குலது நிலையே"** என்பது அசைநிலை.

**'அவனோ கொண்டான்'** என்பது பலருள் நின்றும் ஒருவனைப் பிரித்தமை கருதியவழிப் பிரிநிலை. இப்பொருள் எதிர்மறைக்கண்ணே உளதாதலின் அசைநிலையின் பின் வைத்தார்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** ஒகார இடைச்சொல்லினது இயல்பு கூறுகின்றது.

**இ–ள்.:– ஒழியிசை** – ஒரு சொல் ஒழிவுபடவந்து ஒழியிசை ஒகாரமாகியும், **வினா** – ஒன்றை வினாதற்கண் வந்து வினா ஒகாரமாகியும், **சிறப்பு** – ஒன்றைச் சிறப்பிக்க வந்து சிறப்பு ஒகாரமாகியும், **எதிர்மறை** – எதிர் மறுத்தற்கண் வந்து எதிர்மறை ஒகாரமாகியும், ... ... **கழிவு** – ஒருபொருளைக் கழிக்க வந்து கழிவு

---

பாட வேறுபாடு.:–

1. **செய்கென்றா லோஒதமக்கோ ருறுதி யுணராரே**
2. **மாலையது நிலையே**
3. **கான்வந்தன்றே.**

ஓகாரமாகியும், **அசைநிலை** – அசைகளை அசைத்தற்கண் வந்து அசைநிலை ஓகாரமாகியும், **பிரிப்பு** – ஒரு குழுவின் ஒன்றைப் பிரித்தற்கண் வந்து பிரிநிலை ஓகாரமாகியும், **எனவெட் டோவே** – என்று கூறப்படும் இவ்வெட்டுப் பொருளையும் தரும் ஓகார இடைச்சொல், எ–று.

உ–ம்.:–

**'கொளலோ கொண்டான்'** என்பது, கோடற்குத் தகுமாயினும் கொண்டுய்யப் போயினானல்லன் என ஒரு சொல் ஒழிவுபட வந்தமையால் இது, **ஒழியிசை.**

**'நன்மைக்கோ வந்தான்'** என்பதுவும் அது.

**'அவனோ அல்லனோ'** என்பது வினா.

**'ஓஒ பெரியன்'** என்பது, சிறப்பு.

**'யானோ கொண்டேன்'** என்பது **எதிர்மறை.**

**'நன்றோ அன்று தீதோ அன்று'** என்பது **தெரிநிலை,** இடை நிகர்த்தலென்பது தெரித்தமையின்.

**'நைதலின்றி நல்லறஞ் செய்கின்றாலோ உயிருய்யும்'** என்பது கழிவு.

**"காணியவம்மினோ மாலையது நிலையே"** என்பது அசை.
**'அவனோ செய்தான்'** பிரிநிலை.

## விசாகப் பெருமாளையர்

இது, ஓகாரவிடைச்சொல் லிலக்கணம் உணர்த்துகின்றது.

இ–ள்.:– **ஒழியிசை** – ஒழியிசையும், **வினா** – வினாவும், **சிறப்பு**–சிறப்பும், **எதிர்மறை**–எதிர்மறையும், **தெரிநிலை** – தெரிநிலையும், **கழிவு**–கழிவும், **அசைநிலை** – அசைநிலையும், **பிரிப்பு**–பிரிநிலையும், **என** – என்று, **எட்டு**–எட்டுப் பொருளைத்தரும், **ஓ**–ஓகாரவிடைச்சொல், எ–று.

வ–று.:–

**'கொளலோகொண்டான்'**, என்பது கொண்டுய்யப் போயினா னல்லன் என ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

**குற்றியோ மகனோ** என்பது வினா.

சிறப்பு – உயர்வுசிறப்பும் இழிவுசிறப்புமென இருவகைப்படும். **ஓஒ பெரியன்** – உயர்வுசிறப்பு; **ஓஒ கொடியன்,** இழிவு சிறப்பு.

**அவனோகொண்டான்,** என்பது கொண்டிலனெனப் பொருள்படின் எதிர்மறை.

அலியை நோக்கி, **'ஆணோ அதுவு மன்று பெண்ணோ அதுவுமன்று'** என்பவை, அத் தன்மையில்லாமை தெரிந்தவழி நிற்கையால் தெரிநிலை.

உறுதியுணராது கெட்டாரை, **'ஒ ஒ தமக்கோ ருறுதியுணராரோ'** என்பது, கழிவிரக்கப் பொருடருதலாற் கழிவு.

**'காணிய வம்மினோ கங்கு லதுநிலையே'** என்பது, அசைநிலை.

**'அவனோகொண்டான்'** என்பது பலருளிருந்து ஒருவனைப் பிரித்தலாற் பிரிநிலை.

## ஆ- முத்துத்தம்பிப் பிள்ளை

**ஒகாரவிடைச்சொல் எத்தனைபொருளைத் தரும்?**
**ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை**
**கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே.**

(*ஒழியிசை வினா சிறப்பு எதிர்மறை தெரிநிலை கழிவு அசைநிலை பிரிப்பு* என எட்டு ஒவே.)

**இ—ள்.:**– ஒழியிசையும் வினாவும் சிறப்பும் எதிர்மறையும் தெரிநிலையும் கழிவும் அசைநிலையும் பிரிநிலையும் என்று எட்டுப்பொருளைத் தரும் ஒகார விடைச்சொல். எ—று

சிறப்பு: உயர்வுசிறப்பும் இழிவுசிறப்பும் என இருவகைப்படும். உயர்வுசிறப்பு ஒருபொருளினது உயர்வைச் சிறப்பித்தல். இழிவுசிறப்பு ஒருபொருளினது இழிவைச் சிறப்பித்தல். இங்கே சிறப்பித்தல் என்றது. உயர்வேயாயினும் இழிவேயாயினும் அதனது மிகுதியை விளக்குதல்.

**வ—று.:**–

(1) படிக்கவோ வந்தாய். இங்கே படித்தற்கன்று விளையாடுதற்கு வந்தாய் என ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

(2) சாத்தனுண்டானோ என்பது வினாப்பொருளைத் தருதலால் வினாவோகாரம்.

(3) ஒஒ பெரியன். இங்கே ஒருவனது பெருமையாகிய உயர்வின் மிகுதியை விளக்குதலால், உயர்வுசிறப்போகாரம்.

ஒஒ கொடியன். இங்கே ஒருவனது கொடுமையாகிய இழிவின் மிகுதியை விளக்குதலால் இழிவுசிறப்கபோகாரம்.

(4) அவனோ கொண்டான். இங்கே கொண்டிலன் என்னும் பொருளைத் தருமிடத்து எதிர்மறையோகாரம்.

(5) ஆணோ அதுவுமன்று பெண்ணோ அதுவுமன்று. இங்கே அத்தன்மையில்லாமையைத் தெரிவித்து நிற்றலால் தெரிநிலை யோகாரம்.

(6) உறுதியுணராது கெட்டாரை ஒஒ தமக்கோ ருறுதியுணராரோ என்னுமிடத்துக் கழிந்ததற் கிரங்கலிற் கழிவோகாரம்.

(7) "காணிய வம்மினோ" இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலையோகாரம்.

(8) இவனோ கொண்டான். இங்கே பலருணின்றும் ஒருவனைப் பிரித்துநிற்குமிடத்துப் பிரிநிலையோகாரம்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, ஒகார விடைச்சொல் லிலக்கண முணர்த்திற்று.

**இ—ள்.:**— ஒழியிசை முதலிய எட்டுப்பொருளையுந் தரும் ஒகார இடைச்சொல், எ—று.

**வ—று.:—**

கொளலோ கொண்டான், படிக்கவோ வந்தான் என் பன முறையே கொண்டு பிழைத்தலை மேற்கொண்டவன் அல்லன், படித்து நன்னெறிச் செல்ல வந்தவன் அல்லன், என்னுந் தொடக்கத்து ஒழிந்த சொற்களைத் தருதலால், ஒழியிசை குற்றியோ மகனோ என்பது வினா; சிறப்பு, உயர்வு சிறப்பும் இழிவு சிறப்பும் என இருவகைப்படும்; 'ஒஒபெரியன் என்பது'—உயர்வு சிறப்பு; 'ஒஒ கொடியன்' என்பது இழிவுசிறப்பு; 'அவனோ கொண்டான்' கொண்டிலனென்னும் பொருள் படின் எதிர்மறை; அலியை நோக்கி, 'ஆணோ அதுவுமன்று பெண்ணோ அதுவுமன்று' என ஆராய்தற் கண்வருதலின், தெரிநிலை; உறுதியுணராமற் கெட்டாரை நோக்கி, 'ஒஒ தமக்கோ ருறுதி யுணராரோ' என்பது, கழிந்ததற்கு இரங்குதலாற் கழிவு; 'காணிய வம்மினோ' என்றது காண வாருங்கள் எனப் பொருள்பட்டு ஒகாரத்திற்குப் பொருளின்றி அசையாகவே நிற்றலால் அசைநிலை; 'அவனோ கொண்டான்' என்றது பலருள்நின்று ஒருவனைப் பிரித்தலாற் பிரிநிலை.

**மொழியாததனையு மொழிந்ததனோடு முட்டின்றி முடித்த** லென்பதினால், பத்தோ பதினொன்றோ என வரும் ஐயமும்,

**"வெண்ணெயோ விதுர னிட்ட விருந்தையோ வேலை**
**சூழ்ந்த**
**மண்ணையோ வுண்டு முன்னாள் வருபசி தீர்ந்த**
**மாயோன்"**

என எண்ணி நிற்றலுங் கொள்க, பிறவுமன்ன.

**"பிரிநிலை வினாவே யெதிர்மறை யொழியிசை**
**தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ**
**யிருமூன் றென்ப வோகா ரம்மே"**

என ஆசிரியார் தொல்காப்பியனார் கூறுதலுங்காண்க. முடிவு மேலைச் சூத்திரம் போலவே முடிந்துநின்றது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **ஓ** – ஓகார இடைச்சொல், **ஒழியிசை** – ஒழியிசையும், **வினா** – வினாவும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **தெரிநிலை** – தெரிநிலையும், **கழிவு** – கழிவும், **அசைநிலை** – அசைநிலையும், **பிரிப்பு** – பிரிநிலையும், **என** – என்று, **எட்டு** – எட்டுப்பொருளைத் தரும்.

**குறிப்பு :–**

சிறப்பு – உயர்வுசிறப்பு, இழிவு சிறப்பு என இருவகைப் படும்; ஒருபொருளினது உயர்வின் மிகுதியை விளக்குவது – உயர்வு சிறப்பு; இழிவின் மிகுதியை விளக்குவது – இழிவு சிறப்பு.

**உதாரணம் :–**

(1) படித்தற்கோ வந்தான் – இதில், படித்தற்கன்று, விளையாடுதற்கு வந்தான் என ஒழிந்த சொற்களைத் தருதலல், ஒழியிசை.

(2) குற்றியோ? மகனோ? – இதில், குற்றியா மகனா என வினாவுதற் பொருளைத் தருதலால், வினா.

(3)a. ஓ ஓ பெரியன் – இதில், ஒருவனது பெருமையின் மிகுதியைக் காட்டுதலால் உயர்வு சிறப்பு.

b. ஓ ஓ கொடியன் – இதில் ஒருவனது கொடுமையின் மிகுதியைக் காட்டுதலால், இழிவு சிறப்பு.

(4)அவனோ கொண்டான் – இதில் அவன் கொண்டிலன் என்னும் பொருளைத் தருமிடத்து, எதிர்மறை.

(5)அலியைநோக்கி, 'ஆணோ அதுவும் அன்று; பெண்ணோ அதுவும் அன்று' என்றதில், அத்தன்மையில்லாமையைத் தெரிவித்தலால், தெரிநிலை.

6)நன்மை யறியாமற் கெட்டவர்களை, 'ஓ ஓ தமக்கொரு நன்மை உணரார்' என்றதில், கழிந்ததற்கு இரங்குதலால், கழிவு.

(7)"சொல்லுவன் கேண்மினோ" – இதில் சொல்லுவேன் கேளுங்கள் எனப் பொருள்பட்டு ஓகாரம் வேறுபொருளில்லாமற் சார்த்தப்பட்டு நிற்றலால், அசைநிலை.

(8)அவர்களுள் இவனோகொண்டான் – இதில், பலரினின்று ஒருவனைப் பிரித்து நிற்றலால், பிரிநிலை.

இனிச் சிலவிடத்துப் பத்தோ? பதினொன்றோ? என ஐயப் பொருள்பட வருதல் முதலியனவுங் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:— ஒழியிசை** — ஒழியிசையும், **வினா** — வினாவும், **சிறப்பு**—சிறப்பும், **எதிர்மறை** — எதிர்மறையும், **தெரிநிலை** — தெரிநிலையும், **கழிவு** — கழிவும், **அசைநிலை** — அசைநிலையும், **பிரிப்பு** — பிரிநிலையும், **என எட்டு ஒ** — என்று எட்டுப்பொருளைத் தரும் ஒகாரவிடைச்சொல், எ — று.

**சிறப்பு,** உயர்வுசிறப்பும் இழிவுசிறப்பும் என இருவகைப்படும். **உயர்வுசிறப்பு** ஒருபொருளினது உயர்வைச் சிறப்பித்தல். **இழிவு சிறப்பு** ஒரு பொருளினது இழிவைச் சிறப்பித்தல். இங்கே சிறப்பித்தல் என்றது, உயர்வேயாயினும் இழிவேயாயினும் அதனது மிகுதியை விளக்குதல்.

வ—று.:—

(1) '**படிக்கவோ வந்தாய்**'. இங்கே, படித்தற்கன்று விளை யாடுதற்கு வந்தாய் என ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

(2) "**குற்றியோ மகனோ?**" இங்கே, குற்றியா மகனா என வினாப்பொருளைத் தருதலால் வினா.

(3) '**ஓஒ பெரியன்**'. இங்கே, ஒருவனது பெருமையாகிய உயர்வின் மிகுதியை விளக்குதலால் உயர்வுசிறப்பு.

'**ஓஒ கொடியன்**' இங்கே, ஒருவனது கொடுமையாகிய இழிவின் மிகுதியை விளக்குதலால் இழிவு சிறப்பு

(4) '**அவனோ கொண்டான்**'. இங்கே, கொண்டிலன் என்னும் பொருளைத் தருமிடத்து எதிர்மறை.

(5) '**ஆணோ அதுவுமன்று பெண்ணோஅதுவுமன்று**' இங்கே, அத்தன்மை யில்லாமையைத் தெரிவித்து நிற்றலாற் றெரிநிலை.

(6) உறுதியுணராது கெட்டாரை, '**ஓஒ தமக்கோருறுதி யுணரரோ**' என்னுமிடத்துக் கழிவிரக்கப் பொருளைத் தருதலாற் கழிவு. (கழிவிரக்கம் — கழிந்ததற் கிரங்குதல்.)

(7) "**காணிய வம்மினோ**" இங்கே, வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(8) '**இவனோ கொண்டான்**'. இங்கே, பலருணின்றும் ஒருவனைப் பிரித்து நிற்குமிடத்துப் பிரிநிலை.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள்.:— ஒழியிசை** — ஒழியிசையும், — **வினா** — வினாவும், — **சிறப்பு** — சிறப்பும், — **எதிர்மறை** — எதிர்மறையும், — **தெரிநிலை** — தெரிநிலையும், — **கழிவு** — கழிவும், — **அசைநிலை** — அசைநிலையும், — **பிரிப்பு** — பிரிநிலையும், — **என எட்டு ஒ** — என்று எட்டுப்பொருளைத் தரும் ஒகாரவிடைச் சொல். எ—று.

சிறப்பு உயர்வுசிறப்பும் இழிவு சிறப்பும் என இருவகைப்படும். உயர்வு சிறப்பு ஒரு பொருளினது உயர்வைச் சிறப்பித்தல், இழிவுசிறப்பு ஒரு பொருளினது இழிவைச் சிறப்பித்தல். இங்கே சிறப்பித்தல் என்றது, உயர்வேயாயினும் இழிவேயாயினும் அதனது மிகுதியை விளக்குதல்.

வ.–று.:–

(1)படிக்கவோவந்தாய். இங்கே படித்தற்கன்று விளையாடுதற் குவந்தாய் என ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை

(2) குற்றியோ மகனோ. இங்கே குற்றியா மகனா என வினாப் பொருளைத் தருதலால் வினா.

(3) ஓ ஓ பெரியன். இங்கே ஒருவனது பெருமையாகிய உயர்வின் மிகுதியை விளக்குதலால் உயர்வுசிறப்பு.

ஓ ஓ கொடியன். இங்கே ஒருவனது கொடுமையாகிய இழிவின் மிகுதியை விளக்குதலால் இழிவுசிறப்பு.

(4) அவனோகொண்டான், இங்கே கொண்டிலன் என்னும் பொருளைத் தருமிடத்து எதிர்மறை.

(5) ஆணோ அதுவுமின்றி பெண்ணோ அதுவுமன்று. இங்கே அத்தன்மையில்லாமையைத் தெரிவித்து நிற்றலாற் தெரிநிலை.

(6) உறுதியுணராது கெட்டாரை ஓ ஓ தமக்கோருறு தியுணராரோ என்னுமிடத்துக் கழிவிரக்கப்பொருளைத் தருதலாற் கழிவு. (கழிவிரக்கம் – கழிந்ததற்கிரங்குதல்)

(7)"காணியவம்மினோ" இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப் பட்டு நிற்றலால் அசைநிலை.

(8) இவனோ கொண்டான். இங்கே பலருணின்றும் ஒருவனைப் பிரித்து நிற்குமிடத்துப் பிரிநிலை.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ –ள்.:–** **ஓ** – ஓகார இடைச்சொல், **ஒழியிசை** – ஒழியிசையும், **வினா**– வினாவும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **தெரிநிலை** – தெரிநிலையும், **கழிவு** – கழிவும், **அசைநிலை** – அசைநிலையும், **பிரிப்பு** – பிரிநிலையும், **என** – என்று, **எட்டு** – எட்டுப் பொருளைத் தரும்; **எ – று.**

**சிறப்பு**–உயர்வுசிறப்பு, இழிவுசிறப்பு; என இருவகைப்படும். ஒரு பொருளினது உயர்வின் மிகுதியை விளக்குவது – உயர்வுசிறப்பு: இழிவின் மிகுதியை விளக்குவது – இழிவுசிறப்பு.

**உ–ம்.:–**

(1) 'படித்தற்கோ வந்தான்' – இதில், படித்தற்கன்று; விளையாடுதற்கு வந்தான் என ஒழிந்தசொற்களைத் தருதலால் ஒழியிசை.

(2) **'குற்றியோ மகனோ?'** –இதில், குற்றியா மகனா என வினாவுதற்பொருளைத் தருதலால், வினா.

(3) **'ஓ ஓ பெரியன்!'** –இதில், ஒருவனது, பெருமையின் மிகுதியைக் காட்டுதலால், உயர்வுசிறப்பு. 'ஓ ஓ கொடியன்!' –இதில், ஒருவனது கொடுமையின் மிகுதியைக் காட்டுதலால் இழிவுசிறப்பு.

(4) **'அவனோ கொண்டான்'** –இதில், அவன் கொண்டிலன் என்னும் பொருளைத் தருமிடத்து, எதிர்மறை.

(5) அலியை நோக்கி, 'ஆணோ அதுவும் அன்று. பெண்ணோ அதுவும் அன்று' என்றதில் அத்தன்மையில்லாமையைத் தெரிவித்தலால் தெரிநிலை

(6) நன்மையறியாமற் கெட்டவர்களை **'ஓஒ தமக்கு ஒருநன்மை உணரார்'** என்றதில் கழிந்தற்கு இரங்குதலால், கழிவு.

(7) "சொல்லுவன் கேண்மினோ" – இதில், சொல்லுவேன் கேளுங்கள் எனப் பொருள்பட்டு ஓகாரம் வேறுபொருளில்லாமல் நிற்றலால், அசைநிலை.

(8) **'அவர்களுள் இவனோ கொண்டான்'** – இதில், பலரினின்று ஒருவனைப் பிரித்து நிற்றலால், பிரிநிலை.

இனி, சிலவிடத்து, **'பத்தோ பதினொன்றோ'** என ஐயப்பொருள் படவருதல் முதலியனவும் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– ஒழியிசை** – ஒழியிசையும், **வினா** – வினாவும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **தெரிநிலை** – தெரிநிலையும், **கழிவு** – கழிவும், **அசைநிலை** – அசைநிலையும், **பிரிப்பு** – பிரிநிலையும், **என எட்டு ஓ** – என்று எட்டுப்பொருளைத் தரும் ஓகாரவிடைச்சொல். எ–று.

சிறப்பு உயர்வுசிறப்பும் இழிவுசிறப்பும் என இருவகைப்படும். உயர்வுசிறப்பு ஒருபொருளினது உயர்வைச் சிறப்பித்தல். இழிவு சிறப்பு ஒருபொருளினது இழிவைச் சிறப்பித்தல். இங்கே சிறப்பித்தல் என்றது, உயர்வேயாயினும் இழிவேயாயினும் அதனது மிகுதியை விளக்குதல்.

**உ–ம்.:–**

(1) படிக்கவோ வந்தாய் – இங்கே படித்தற்கன்று விளையாடுதற்கு வந்தாய் என ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

(2) குற்றியோ மகனோ? – இங்கே குற்றியா மகனா என வினாப்பொருளைத் தருதலால் வினா.

(3) ய ஓஒ பெரியவன் – இங்கே ஒருவனது பெருமையாகிய உயர்வின் மிகுதியை விளக்குதலால் உயர்வுசிறப்பு.

ஒஒ கொடியன் – இங்கே ஒருவனது கொடுமையாகிய இழிவின் மிகுதியை விளக்குதலால் இழிவுசிறப்பு.

(4) அவனோ கொண்டான் – இங்கே கொண்டிலன் என்னும் பொருளைத் தருமிடத்து எதிர்மறை.

(5) ஆணோ அதுவுமன்று பெண்ணோ அதுவுமன்று – இங்கே அத் தன்மையில்லாமையைத் தெரிவித்து நிற்றலால் தெரிநிலை.

(6)(உறுதியுணராது கெட்டாரை) ஒஒ தமக்கோருறுதியுணராரோ – என்னுமிடத்துக் கழிவிரக்கப் பொருளைத் தருதலாற் கழிவு. (கழிவிரக்கம் – கழிந்ததற் கிரங்குதல்.)

(7) "காணியம்மினோ" – இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(8) இவனோ கொண்டான் – இங்கே பலருணின்றும் ஒருவனைப் பிரித்து நிற்குமிடத்துப் பிரிநிலை.

'மொழியாததனையும் மொழிந்ததனோடு முட்டின்றி முடித்தல்' என்பதினால் 'பத்தோ பதினொன்றோ' என ஐயப்பொருளில் வருதலும், 'வெண்ணெயோ விதுரனிட்ட விருந்தையோ வேலை சூழ்ந்த – மண்ணையோ உண்டு முன்னாள் வருபசி தீர்ந்த மாயோன்' என எண்ணுப் பொருளில் வருதலும் கொள்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:–** **ஒழியிசை** – ஒழியிசையும், **வினா** – வினாவும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **தெரிநிலை** – தெரிநிலையும், **கழிவு** – கழிவும், **அசைநிலை** – அசைநிலையும், **பிரிப்பு** – பிரிநிலையும், **என எட்டு** – என்று எட்டுப் பொருளைத் தரம், **ஓ** – ஓகார இடைச் சொல். **எ–று**

**பொ–ரை.:–**

ஒழியிசை முதலிய எட்டுப் பொருளையும் தரும் ஓகார இடைச்சொல்.

(சிறப்பு – உயர்வு சிறப்பும், இழிவு சிறப்பும் என இருவகைப்படும்.)

**உ–ம்.:–**

1. படிக்கவோ வந்தாய்.

படித்தற்கன்று; விளையாடுதற்கு வந்தாய் என ஒழிந்த சொற்களைத் தருதலால், ஒழியிசை.

2. குற்றியோ மகனோ.

குற்றியா மகனா என வினாப்பொருளைத் தருதலால், வினா.

3. ஓ ஓ பெரியன்.

ஒருவனது பெருமையாகிய உயர்வின் மிகுதியை விளக்குதலால், உயர்வு சிறப்பு.

ஓ ஓ கொடியன்.

ஒருவனது கொடுமையாகிய இழிவின் மிகுதியை விளக்குதலால், இழிவு சிறப்பு.

4. அவனோ கொண்டான்.

கொண்டிலன் எனப் பொருள் படின், எதிர்மறை.

5. 'அலியை நோக்கி,ஆணோ அதுவுமன்று; பெண்ணா அதுவுமன்று.'

அத்தன்மை யில்லாமையைக் தெரிவித்து நிற்கையால், தெரிநிலை.

6. உறுதியுணராது கெட்டாரை, ஓ ஓ தமக்கோருறுதி யுணராரோ.-

கழிவிரக்கப் பொருள் தருதலால், கழிவு. (கழிவிரக்கம் – கழிந்தற்கிரங்கல்.)

7. காணிய வம்மினோ கங்குலது நிலையே.

வேறு பொருளின்றிச் சார்த்தப் பட்டு நிற்றலால், அசைநிலை

8. அவனோ கொண்டான்.

பலருளிருந்து ஒருவனைப் பிரித்தலால், பிரிநிலை.

## கா. நமச்சிவாய முதலியார்

**ஓ** – ஒகார இடைச்சொல், **ஒழியிசை** – ஒழியிசையும், **வினா** – வினாவும், **சிறப்பு** – சிறப்பும், **எதிர்மறை** – எதிர்மறையும், **தெரிநிலை** – தெரிநிலையும், **கழிவு** – கழிவும், **அசைநிலை** – அசை நிலையும், **பிரிப்பு** – பிரிநிலையும், **என** – என்று, **எட்டு** – எட்டுப்பொருளைத் தரும்.

சிறப்பு – உயர்வு சிறப்பும், இழிவு சிறப்பும் என இருவகைப் படும்.

**உதாரணம்**

| | | |
|---|---|---|
| 1. படிக்கவோ சென்றான் | – | விளையாடுவதற்குச் சென்றான் என ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை. |
| 2. குற்றியோ மகனோ? | – | வினா. |
| 3. ஓ ஓ பெரியன் – | | உயர்வு சிறப்பு. |
| ஓ ஓ கொடியன் | – | இழிவு சிறப்பு |
| 4. அவனோ கொண்டான் | – | கொண்டிலன் எனப் பொருள் படின் எதிர்மறை. |
| 5. ஆணோ அதுவுமன்று பெண்ணோ அதுவுமன்று | – | அத்தன்மையில்லாத அலி, அல்லது, பேடி எனத்தெரிவித்து நிற்றலால் தெரிநிலை. |
| 6. (உறுதியுணராது கெட்டாரை நோக்கி) ஓ ஓ தமக்கோர் உறுதி | | கழிவிரக்கப்பொருள் தருதலால் கழிவு. (கழிவிரக்கம் – கழிந்த பொருளுக்கு |

| | | |
|---|---|---|
| உணராதோர் என்றல் | | இரங்குதல்). |
| 7. காணியவம்மினோ கங்குலது நிலையே | – | அசைநிலை. |
| 8. இவர்களுள் அவனோ கொண்டான் | | பலருளிருந்து ஒருவனைப் பிரித்தலால் பிரிநிலை |

## .மோசசு பொன்னையா

ஒழிந்த சொற்பொருள் தரும் ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை, கழிவு, அசைநிலை, பிரிநிலை என்னும் ஆறு பொருளிலும் ஓகார இடைச்சொல் வழங்கும் எ–று.

சிறப்பு, உயர்வு, இழிவு என உயர்ந்தோர் வகுத்த மரபின்படி அமையும் எனக் கொள்க.

எ–டு.:-

1.படித்தற்கோ வந்தாய்? (விளையாட) ஒழியிசை

2.குற்றியோ மகனோ வினா

3.(அ) ஒ ஒ பெரியன்

(ஆ) ஒ ஒ கொடியன் உயர்வு சிறப்பு

4.யானோ விடுவேன் எதிர்மறை

5.(அலியை) ஆணோ அதுவுமன்று பெண்ணோ அதுவுமன்று எனல் தெரிநிலை

6.நைதலின்றி நல்லறஞ் செய்கின்றாலோ உயிருய்யும் கழிவு

7.காணிய வம்மினோ கங்குலது நிலையே அசைநிலை

8.யானோ தேறேனவர் பொய் வழங்கலரே பிரிநிலை இழிவு சிறப்பு

தொல்காப்பியர்,

**பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை**
**தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ**
**இருமூன் றென்ப ஓகாரம்மே,**

என ஓகாரம் பிரிநிலை, வினா, எதிர்மறை, ஒழியிசை, தெரிநிலை, சிறப்பு என்னும் ஆறு பொருள்களிலேயே வரும் எனக் கூறினார். அவர்,

**அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென**
**மெய்பெறக் கிளந்த வியல வாயினும்**
**வினையொடும் பெயரொடு நினையத் தோன்றித்**
**திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே,2**

என இடைச்சொற்களின் பொருளறி நுட்பமோதிய நூற்பாவால்

உரையாசிரியர்கள் 'சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரோ' எனவும், 'கடங்கொண்டன கள்ளென்கோ காழ்கோத்தன சூட்டென்கோ' எனவும் முறையே வரும் ஈற்றசை, எண் ஒகாரங்களை அமைத்தனர். நச்சினார்க்கினியர், அவற்றோடு, 'நீங்கின ளோவென் பூங்கணோளே' என இவ்வாறு இரக்கக் குறிப்புப் பொருளில் வரும் ஒகாரத்தையும் கூட்டியுரைத்தார். குணவீர பண்டிதர் நேமிநாதத்தில்,

**சிறப்பும் வினாவுந் தெரிநிலையு மெண்ணும்**
**உறப்பின் எதிர்மறையி னோடும்—வெறுத்த**
**ஒழியிசையும் ஈற்றசையும் ஒகாரஞ் சொல்லா**
**ஒழிபொருளுஞ் சார்த்தி உணர்,**

எனக் கூறி ஒகாரம் சிறப்பு, வினா தெரிநிலை, எண், எதிர்மறை, ஒழியிசை, ஈற்றசை என்னும் எட்டுப் பொருள்களில் வரும் என உரைத்தார். இவ்வாற்றால், இவ்வாசிரியர் தொல்காப்பியரும், நேமிநாத ஆசிரியரும் கொண்ட எண் ஒகரத்தைக் கூறாது விடுத்து, நேமிநாத ஆசிரியர் கூறிய ஈற்றசையை அசையுள் அடக்கினார் என்பதும், நச்சினார்க்கினியர் கூறிய இரக்கக் குறிப்பைப் புதியன புகுதலாகக் கழிவு என்னும் பொருளாகக் கூறினார் என்பதும் புலனாகும்.

கழிவு என்பதற்கு மயிலைநாதர் பொருட்கழிவு என்றும், சங்கர நமச்சிவாயர் கழிவிரக்கம் எனவும் பொருளுரைத்து,

**நைத லொன்றி நல்லறஞ் செய்கின்றிலா**
**ரோஓ தமக்கோ ருறுதி யுணராரோ,**

என்பதையே எடுத்துக்காட்டினர், தொன்னூல் விளக்கமுடையார், 'நைதலின்றி நல்லறஞ் செல்கின்றாறலோ உயிருய்யும்' என எடுத்துக்காட்டி ஒகாரம் கழிந்ததற் கிரங்கி நிற்றலின், கழிவு என்றார்3. மன்னிடைச் சொல் பற்றிய உரையில் மயிலைநாதர், சங்கர நமச்சிவாயர், முகவை இராமாநுசர், முதலியோரும், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் முதலியோர்கள் உரைகண்ட முறைமையும், காட்டியுள்ள, 'சிறியகட் பெரினே யெமக்கீயு மன்னே' என்ற எடுத்துக்காட்டும் கழிவிரக்கத் தையே புலப்படுத்துவதாக உள்ளன. எனவே, ஈண்டுத் தொன்னூல் விளக்கமுடையார் கருத்தும் எடுத்துக்காட்டுமே ஏற்படையன என எண்ணலாம்.

(4)

**423.** **வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்**
**எனவெனு மொழிவரு மென்று மற்றே.**

வினை பெயர் குறிப்பு இசை எண் பண்பு ஆறினும்
என எனும் மொழி வரும் என்றும் அற்றே.

vinaip peyar kuṟippu isai eṇ paṇpu āṟiṉum
eṉaveṉum moḻivarum eṉṟum aṟṟē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### The Particles ena, enru

The word 'ena' is used as the accompaniment of Verbs, Nouns, symbolic words, Imitative sounds, enumeration and quality; and the same of 'enru'.

## ஒப்புமைப் பகுதி

வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோடு அவ்வாறு கிளவியும்
கண்ணிய நிலத்தே எனவென் கிளவி

(தொல். சொல்.: 258)

என்றென் கிளவியும் அதனோ ரற்றே

(தொல். சொல்.: 259)

வினைபெயரும் எண்ணும் இசைக்குறிப்பும் பண்பும்
எனஎன் றிரண்டும் இயலும்....

(நேமி.: 78.: 1–2)

வினைபெயர் குறிப்பிசை பண்பெண் ணாறினும்
எனவெனு மொழிவரும் என்றும் அற்றே

(இ.வி.: 255)

என என்பது உவமை எண் குணம் வினைபெயர்
இசைக்குறிப்பு இயலும் என்றும் இணைத்தே

(தொ.வி.: 133)

எண்ணே குறிப்பே இசையே பண்பே
வினையே பெயரே எனவோர் ஆறினும்
எனவெனு மொழிவரும் என்றும் அற்றே

(மு.வீ.: 651)

...................... என்று என
பாக்குறிப்பு எண் பண்பிசைபேர் வினை ஆறுனவாம்

(சுவாமி.: 55.: 2–3)

## மயிலை நாதர்

எ—ன், எனவெனவும் என்றெனவும் வரும் இடைச்சொற்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.:— இந்த ஆறு பொருளிலும் எனவென்னும் இடைச்சொல் வரும்; என்றென்னு மிடைச்சொல்லும் இவ்வாறு பொருளிலும் வரும், எ—று.

வ—று.:—

**'கொள்ளெனக் கொண்டான்'** என்பது வினை.

**"ஊரெனப்படுவ துறையூர்"** என்பது பெயர்;

**"விண்ணென விசைத்தது"** என்பது குறிப்பு ;

**"ஒல்லென வொலித்தது"** என்பது இசை ;

**"கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென உடல்சின வுருமென வூழித்தீயென"** (சீவக. 973),

**"ஒன்றென இரண்டென மூன்றென நான்கென ஐந்தென ஆறென ஏழென எட்டெனத் தொண்டென"** (பரிபாடல்,3) என்பது எண்;

**"வெள்ளென விளர்த்தது"** என்பது பண்பு.

இனி என்றென்பது வருமாறு: **'கொள்ளென்று கொண்டான்'** என்பது வினை;

**'ஊரென்று சொல்லப்படுவது உறையூர்'** என்பது பெயர்;

**'விண்ணென்று விசைத்தது'** என்பது குறிப்பு;

**'ஒல்லென் றொலித்தது'** என்பது இசை; **'கடலென்று காற்றென்று கடுங்கட்கூற்றென்று'** என்பது எண்;

**'வெள்ளென்று விளர்த்தது'** என்பது பண்பு. (வெள் – வெண்மை யென்றறிக.)

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** என எனவும், என்று எனவும் வரும் இடைச் சொல்லிலக்கணம் **உணர்—ற்று.**

**இ—ள்.:—** வினைப்பொருள் முதலிய ஆறுபொருளினும், என என்னும் இடைச்சொல் வரும்; என்று என்னும் இடைச்சொல்லும் அவ்வாறு வரும், **எ—று.**

வ—று.:—

'கொள்ளெனக் கொண்டான்', 'மைந்தன் பிறந்தான் எனத் தந்தை உவந்தான்' என்பது வினை. ஊரெனப்படுவது உறையூர், [1]**"அழுக்காறென ஒரு பாவி"** என்பது பெயர். **'விண்ணென விசைத்தது'**, [2]**"பொள்ளென ஆங்கே புறம்வேரார்"** என்பது குறிப்பு. ஒல்லென ஒலித்தது, [3]**"நிலையருங் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து"** என்பது இசை. **'நிலன்என நீர் எனத்**

**தீஎன வளிஎன வரும் பூத நான்கும் உருவம்'** என்பது எண். **'வெள்ளென விளர்த்தது', 'மெல்லென நடந்தது'** என்பது பண்பு. இங்ஙனம் எண்ணுப்பொருட்குக் காட்டிய பெயர்கள் தனித்து நில்லாது எண்ணி அளவைப் பண்புப்பொருள் உணர்த் தலின் அப்பொருள் முதற்கண் நிறீஇய பெயர்ப்பொருள் அன்று என்க. என்று என்பதனையும் **'கொள்ளென்று கொண்டான்'** என முறையே இயையுமாறு ஒட்டுக.

சுட்டுப்பெயர் வினாப்பெயர்கட்குத் தமக்கு என ஒருபொருள் இன்றிச் சுட்டவும் வினவவும்படும் பொருளாதி ஆறு பெயர்ப் பொருளே பொருளாக வருதல்போல இவ்விரண்டு இடைச் சொற்கும் தமக்கு என ஒருபொருளின்றி வினை முதலியவாய் இங்ஙனம் விதந்தவற்றின் பொருளே பொருளாக வரும் என்பார் 'ஆறுபொருளையும் தரும்' என்னாது, **'ஆறினும் வரும்'** என்றார்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், எனவெனவும் என்றெனவும் வரும் இடைச்சொற்களது இயல்பு கூறுகின்றது.

**இ–ள்.:– வினைபெயர்** – வினைப் பொருண்மைக்கண்ணும் பெயர்ப் பொருண்மைக்கண்ணும், **குறிப்பிசை** – குறிப்புப் பொருண்மைக் கண்ணும் இசைப் பொருண்மைக்கண்ணும், **எண்** – பலவற்றை அடுக்கி எண்ணுதற்கண்ணும், **பண்பாறினும்** – பண்புப் பொருண்மைக் கண்ணும் இவ்வாறு பொருண்மைக் கண்ணும், **எனவெனு மொழிவரும்** – எனவென்னும் இடைச்சொல் வரும்; **என்று மற்றே** – என்றென்னும் இடைச்சொல்லும் அவ்வாறு பொருளினும் வரும், எ–று.

உ–ம்.:–

**'கொள்ளெனக் கொண்டான்'** என்பதுவினை.

**'ஊர் எனப்படுவது உறையூர்'** என்பது பெயர்.

**'விண்ணென விசைத்தது'** என்பது, குறிப்பு. **'ஒல்லென வொலித்தது'** என்பது **இசை.**

**"கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென, உடலென உருமென ஊழித் தீயென"** (சீவக. 973) என்பது, **எண்.** '

**வெள்ளென விளர்த்தது'** என்பது **பண்பு.** இனி, என்று என்பதையும் இவ்வாறே வருவிக்க. இவை பெயரினிடத்தினும் வினையிடத்தும் உவமை உருபாகி இடைச்சொல்லாகி வரும்.

**'காரென யார்க்கும் பொழிந்தான்', 'புலி பாய்ந்தெனப் பாய்ந்தான்'** என வரும்.

## விசாகப் பெருமாளையர்

**இது,** என. என்று என்கிற இடைச்சொற்களினிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.:– வினை** – வினையும், **பெயர்**–பெயரும், **குறிப்பு** –குறிப்பும், **இசை**–

இசையும், **எண்** – எண்ணும், **பண்பு**–பண்பும் ஆகிய, **ஆறினும்** – ஆறு பொருளிலும், **எனவெனுமொழி** – என வென்னு மிடைச்சொல், **வரும்** – சேர்ந்து வரும், **என்றும்** – என்றென்னுமிடைச் சொல்லும், **அற்று** – அப்படியே ஆறு பொருளிலும் வரும், **எ–று.**

**வ–று.:–**

'மைந்தன் பிறந்தானெனத் தந்தை யுவந்தான்', வினை. 'ஊரெனப்படுவதுறையூர்' பெயர். 'பொள்ளென வாங்கே புறம் வேரார்'– குறிப்பு. 'குட்டத்துத் துடுமெனப் பாய்ந்தது'– இசை. 'நிலனென நீரெனத் தீயென வளியென வானெனப் பூதங் களைந்து'– எண். 'வெள்ளென விளர்த்ததுப்' – பண்பு. என்றென்பதையும், 'மைந்தன் பிறந்தானென்று தந்தையு வந்தனன்' என அவ்வாறனோடுங் கூட்டுக.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

எனவென்னு மிடைச்சொல்லும் என்றென்னு மிடைச்சொல்லும் எத்தனை பொருண்மையில் வரும்?

**வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்**

**எனவெனு மொழிவரு மென்று மற்றே.**

(வினை பெயர் குறிப்பு இசை எண் பண்பு ஆறினும் என எனும் மொழி வரும் என்றும் அற்றே.)

**இ–ள்.:** வினையும் பெயரும் குறிப்பும் இசையும் எண்ணும் பண்புமாகிய ஆறுபொருண்மையிலும் எனவென்னுமிடைச் சொல்வரும்; என்றென்னு மிடைச் சொல்லும் அப்படியே ஆறுபொருண்மையிலும் வரும். **எ–று.**

**வ–று.:–**

(1) மைந்தன் பிறந்தானெனத் தந்தை யுவந்தான். இங்கே வினைப்பொருண்மை குறித்து வந்தது.

(2)"அழுக்கா றெனவொரு பாவி". இங்கே பெயர்ப்பொருண்மை குறித்து வந்தது.

(3)"பொள்ளென வாங்கே புறம் வேரார்." இங்கே குறிப்புப் பொருண்மை குறித்து வந்தது.

(4)"பொம்மென்ன வண்டலம்பும் புரிகுழலை." இங்கே குசைப் பொருண்மை குறித்து வந்தது.

(5)நிலமென நீரெனத் தீயென வளியென வானெனப் பூதங் களைந்து. இங்கே எண்ணுப்பொருண்மை குறித்து வந்தது.

(6) வெள்ளென விளர்த்தது. இங்கே பண்புப்பொருண்மை குறித்துவந்தது.

இனி என்று என்பதும்,–

(1) ரைவருமென்றெண்ணி"......................வினைப்பொருண்மை

(2)"பாரியென்றொருவனுளன்"........................... பெயர்ப் பொருண்மை

(3)"விண்ணென்றுவிகைத்தது"...................... குறிப்புப் பொருண்மை.

(4)"ஒல்லென்றொலிக்கும்"................................... இசைப் பொருண்மை

(5)"நிலனென்று நீரென்று தீயென்று" எண்ணுப்பொருண்மை

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** என, என்று என்னுமிவ்விரண்டு இடைச்சொல் லிலக்கண முணர்த்திற்று.

**இ–ள்.:–** வினைப்பொருள் முதலிய அறுவகைப்பொருளினும் என என்னும் இடைச்சொல் வரும்; என்று என்னும் இடைச்சொல்லும் அவ்வாறே வரு மென்றவாறு,

**வ–று.:–**

'கொள்ளெனக் கொண்டான்' 'மைந்தன் பிறந்தானெனத் தந்தை மகிழ்ந்தான்' என்பது வினை. 'ஊரெனப்படுவது உறையூர்' 'அழுக்காறென வொருபாவி' என்பது பெயர், 'தலைவிண்ணென விசைத்தது', 'பொள்ளென வாங்கே புறம் வேரார்' என்பது குறிப்பு, குறிப்பாவது–சிறிதுபொழுது நிகழ்வதோர் தோற்றம்; அது மானத்தாலுணரப்படுவது; இதனை மெய்ப்பாடு எனவும் வழங்குவர்; இது விரைவு முதலிய பொருள் பற்றியும்வரும். ஒல்லென வொலித்தது, 'நிலையருங் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்தது' என்பது இசை, இசையாவது இங்கே ஒலியை நோக்கிநின்றது, 'நிலனென நீரெனத் தீயென வளியெனப் பூதம்நான்கு', 'சேரனெனச் சோழனெனப் பாண்டியனென மூவருந் தமிழ்நாட்டரசர், என்பது–எண், வெள்ளென விளர்த்தது மெல்லென நடந்தது, காரெனக்கறுத்தது என்பது பண்பு, என வரும். என் றென்பதனையும் கொள்ளென்று கொண்டான், மைந்தன் பிறந்தானென்று தந்தை மகிழ்ந்தான் என முறையே யிவற்றோடு ஒட்டுக.

சுட்டுப்பெயரும் வினாப் பெயருந் தமக்கெனவோர் பொரு ளின்றிப் பொருளாதி யாறையுஞ் சுட்டியும் வினாவியும் நிற்றல் போல என, என்று என்னு மிவ்விரண்டு இடைச் சொல்லும் தமக்கெனவோர் பொருளின்றி வினைமுதலாக இங்கே சொல்லப்பட்டவற்றின் பொருளே பொருளாக வருமென்று சொல்ல வந்தவர் ஆறுபொருளையுந் தருமென்னாது ஆறு பொருளினும் வருமென்றார்.

**"வினையே குறிப்பே யிசையே பண்பே**

**யெண்ணே பெயரோ டவ்வேறு கிளவியுங்**

**கண்ணிய நிலைத் தே யெனவென் கிளவி"**

எனவும் 'என்றென் கிளவியு மதனோ ரற்றே' எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :-** **என எனும் மொழி** – 'என' என்னும் இடைச்சொல், **வினை** – வினையும், **பெயர்** – பெயரும், **குறிப்பு** – குறிப்பும், **இசை** – இசையும், **எண்** – எண்ணும், **பண்பு** – பண்பும் (ஆகிய), **ஆறினும்** – ஆறுபொருளிலும், **வரும்** – சேர்ந்து வரும்; **என்று** – 'என்று' என்னும் இடைச்சொல்லும், **அற்று** – அப்படியே (ஆறுபொருளிலும் வரும்.)

உதாரணம் :

(1) மகன் பிறந்தானெனத் தந்தை மகிழ்ந்தான் – இதில் வினையோடு இயைந்தது.

(2) "அழுக்காறென ஒருபாவி" – இதில் பெயரோடு இயைந்தது.

(3) "பொள்ளென வாங்கே புறம்வேரார்" – இதில் குறிப்போடு இயைந்தது. (இது – விரைவுக்குறிப்புமொழி.)

(4) ஒல்லென ஒலித்தது – இதில் இசையோடு இயைந்தது. (இசை – ஒலி).

(5) நிலமென நீரென நெருப்பென – இதில் எண்ணோடு இயைந்தது.

(6) வெள்ளென விளர்த்தது – இதில் பண்போடு இயைந்தது. இனி, 'புலி பாய்ந்தெனப் பாய்ந்தான்? என உவமையோடு இயைதலுங் கொள்க. ('என்று' என்பதையும் இவ்வாறே இவற்றோடு ஒட்டிக்கொள்க.)

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:** **வினை** – வினையும், **பெயர்** – பெயரும், **குறிப்பு**–குறிப்பும், **இசை**–இசையும், **எண்**–எண்ணும், **பண்பு ஆறினும்**– பண்புமாகிய ஆறுபொருளிலும், **என எனும் மொழி வரும்** – என வென்னு மிடைச்சொற் சேர்ந்து வரும், **என்றும் அற்று** – என்றென்னு மிடைச்சொல்லும் அப்படியே ஆறு பொருளிலும் வரும், எ–று.

வ–று.:–

(1) **'மைந்தன் பிறந்தானெனத் தந்தை யுவந்தான்'**. இங்கே, வினையோடியைந்து.

(2) **"அழுக்கா றெனவொரு பாவி"** இங்கே, பெயரோடியைந்தது.

(3) **"பொன்னென வாங்கே புறம் வேரார்"** இங்கே, குறிப்போடியைந்தது.

(4) **"பொம்மென வண்டலம்பும் புரிகுழலை"** இங்கே, இசை யோடியைந்தது.

(5) **'நிலமென நீரெனத் தீயென வளியென வானெனப் பூதங்களைந்து'** இங்கே, எண்ணோடியைந்தது.

(6) **'வெள்ளென விளர்த்தது'** இங்கே, பண்போடியைந்தது என்று என்பதையும் இப்படியே இவைகளோடும் ஒட்டிக் கொள்க.

## வ. குமாரசாமிப்புலவர்

**இ—ள். வினை** – வினையும், – **பெயர்** – பெயரும், – **குறிப்பு** – குறிப்பும், – **இசை** – இசையும், – **எண்** – எண்ணும், – **பண்பு ஆறினும்** – பண்புமாகிய ஆறுபொருளிலும், – **என எனும் மொழி வரும்.** எனவென்னுமிடைச்சொற் சேர்ந்து வரும், – **என்றும் அற்று** – என்று என்னுமிடைச் சொல்லும் அப்படியே ஆறுபொருளிலும் வரும். **எ—று.**

**வ—று.:—**

(1) மைந்தன் பிறந்தானெனத் தந்தையுவந்தான். இங்கே வினையோடியைந்தது.

(2) "அழுக்காறெனவொருபாவி" இங்கே பெயரோடியைந்தது.

(3) "பொள்ளெனவாங்கேபுறம்வேரார்" இங்கே குறிப்போடியைந்தது.

(4) "பொம்மென வண்டலம்பும் புரிகுழலை" இங்கே இசையோடியைந்தது.

(5) நிலமென நீரெனத் தீயென வளியென
வானெனப் பூதங்களைந்து, இங்கே
எண்ணோடியைந்தது.

(6) வெள்ளெனவிளர்த்தது. இங்கே பண்போடியைந்தது. என்று என்பதையும் இப்படியே இவைகளோடும் ஒட்டிக்கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.:— என எனும் மொழி** – என என்னும் இடைச்சொல், **வினை**— வினையும், **பெயர்** – பெயரும், **குறிப்பு** – குறிப்பும், **இசை** – இசையும், **எண்** – எண்ணும், **பண்பு** – பண்பும், (ஆகிய), **ஆறினும்** – ஆறுபொருளிலும், **வரும்** – சேர்ந்து வரும்; **என்றும்** – என்று என்னும் இடைச்சொல்லும், **அற்று** – அப்படியே (ஆறுபொருளிலும் வரும்;) எ—று.

(1) **'மகன் பிறந்தா னெனத் தந்தை மகிழ்ந்தான்'** – இதில், வினையோடு இயைந்தது.

(2) **"அழுக்கா றென ஒருபாவி"** –இதில் பெயரோடு இயைந்தது.

(3) "பொள்ளென வாங்கே புறம் வேரார்" – இதில் குறிப்போடு இயைந்தது; இது – விரைவுக்குறிப்புமொழி.

(4) **'ஒல்லென ஒலித்தது'** – இதில், இசையோடு இயைந்தது. (இசை—ஒலி)

(5) **'நிலமென நீரென நெருப்பென'** – இதில், எண்ணோடு இயைந்தது.

(6) **'வெள்ளென விளர்த்தது'** – இதில், பண்போடு இயைந்தது.

**'என்று'** என்பதையும், இவ்வாறே இவற்றோடு ஒட்டிக் கொள்க. இனி, **'புலி பாய்ந்தெனப் பாய்ந்தான்'** என உவமையோடு இயைதலும் கொள்க.

## பவானந்தம் பிள்ளை.

**இ—ள்.:–** **வினை** – வினையும், **பெயர்** – பெயரும், **குறிப்பு** – குறிப்பும், **இசை** – இசையும், **எண்** – எண்ணும், **பண்பு** – பண்பு மாகிய, **ஆறினும்** – ஆறுபொருளிலும், **என எனும் மொழி வரும்** – என என்னுமிடைச்சொற் சேர்ந்து வரும். **என்றும் அற்று** – என்றென்னு மிடைச்சொல்லும் அப்படியே ஆறு பொருளிலும் வரும். எ—று.

(1) மைந்தன் பிறந்தானெனத் தந்தை யுவந்தான் – இங்கே வினையோடியைந்தது.

(2) "அழுக்கா றெனவொரு பாவி" – இங்கே பெயரோடியைந்தது.

(3) "பொள்ளென வாங்கே புறம் வேரார்" – இங்கே குறிப்போடியைந்தது.

(4) "பொம்மென வண்டலம்பும் புரிகுழலை" – இங்கே இசையோடியைந்தது.

(5) நிலமென நீரெனத் தீயென வளியென வானெனப் பூதங்களைந்து – இங்கே எண்ணோடியைந்தது.

(6) வெள்ளென விளர்த்தது – இங்கே பண்போடியைந்தது. என்று என்பதையும் இப்படியே இவைகளோடும் ஒட்டிக்கொள்க.

குறிப்பாவது சிறிதுபொழுது கிழ்வதோர் தோற்றம். இது மனத்தால் உணரப்படுவது. இதனை மெய்ப்பாடு எனவும் வழங்குவர். இது விரைவு முதலிய பொருள்பற்றியும் வரும்.

(உ—ம்.) பொள்ளென, பொருக்கென, கதுமென, ஞெரேலென, சரேலென – எனறாற் போல்வன விரைவுக்குறிப்பு.

துண்ணென, துணுக்கென, திட்கென, திடுக்கென – என்றாற் போல்வன அச்சக்குறிப்பு.

இசையாவது இங்கே ஒலிக்குறிப்பை உணர்த்தி நின்றது.

## கா. நமச்சிவாய முதலியார்

**வினை** – வினையும், **பெயர்** – பெயரும், **குறிப்பு** – குறிப்பும், **இசை** – இசையும், **எண்** – எண்ணும், **பண்பு**– பண்பும், (ஆகிய) **ஆறினும்** – ஆறுபொருளிலும், **என எனும் மொழி** – என என்னும் இடைச்சொல், **வரும்** – சேர்ந்துவரும்; **என்றும்** – என்று என்னும் இடைச்சொலும், **அற்றே** – அப்படியே (ஆறு பொருளிலும்) வரும்.

**உதாரணம்**

1. மைந்தன் பிறந்தான் **எனத்** தந்தை உவந்தான்–வினை.
2. அழுக்கா**றென** ஒரு பாவி–பெயர்.
3. விண்**ணென** விசைத்தது–குறிப்பு
4. குட்டத்துத்துடு**மெனப்** பாய்ந்து–இசை.
5. நில**னென** நீ**ரெனத்** தீ**யென** வளி**யென** வா**னெனப்** பூதங்கள் ஐந்து எண்.
6. காரெனக் கறுத்தது.–பண்பு.

**என்று** என்பதையும், மேற்குறித்த உதாரணங்களில் ஒட்டிக்காண்க.

## மோசசு பொன்னையா

வினை, பெயர், குறிப்பு, இசை, எண், பண்பு, என்னும் ஆறு பொருட்களிலும் என, என்று என்னும் இரண்டு இடைச் சொற்களும் வரும் **எ–று.**

**எ–டு.:-**

1.மகன் பிறந்தான் எனத் தந்தை மகிழ்ந்தான்–வினை
2.அழுக்கா றென வொரு பாவி–பெயர்
3.பொள்ளென வாங்கே புறம்வேரார்–குறிப்பு
4.ஒல்லென வொலிப்ப வோடி–இசை
5.கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென
வுடல்சின வுருமென வூழித் தீயென–எண்
6.வெள்ளென விளர்த்தது–பண்பு
இவ்வாறு என்று என்னும் இடைச்சொல்லையும் ஒட்டிக் காண்க.

ஆறினும் வரும் என்றதனால், சுட்டு, வினாப் பெயர்கள் தமக்கெனத் தனிப் பொருளின்றி அவற்றால் சுட்டவும், வினாவவும்
படும் பொருட்களின் பொருளையே தத்தம் பொருளாகக் கொள்வதே போல், இவ்விரு இடைச் சொற்களும் பொருள் கொள்ளும் எனக் கொள்க.

தொல்காப்பியரும்,

**வினையே குறிப்பே யிசையே பண்பே**
**யெண்ணே பெயரோ டவ்வறு கிளவியுங்**
**கண்ணிய நிலைத்தே யெனவென் கிளவி,**

எனவும்,

**என்றென் கிளவியு மதனே ரற்றே,**
எனவும் அவற்றின் பொருள்கோள் மரபை ஓதினார்.
நேமிநாதத்திலும்,
**வினைபெயரும் எண்ணும் இசைக்குறிப்பும் பண்பும்**
**எனஎன் றிரண்டும் இயலும்,**
என்றே காணப்படுகின்றது.

**(5)**

## 424. எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே.

**எதிர்மறை சிறப்பு ஐயம் எச்சம் முற்று அளவை**
**தெரிநிலை ஆக்கம்ஒடு உம்மை எட்டே..**

eṭirmaṟai siṟappu aiyam essam muṟṟu aḻavai
ṭerinilai ākkamōtu ummai ettē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### The particle 'um'

(The particle) 'um' has eight meanings: Negation, speciality, uncertanity, totality, enumeration, certanity and change of state.

## ஒப்புமைப் பகுதி

**எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை**
**முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம் என்று**
**அப்பால் எட்டே உம்மைச் சொல்லே**

**(தொல். சொல்.: 255)**

**தெரிநிலை யாக்கஞ் சிறப்பெச்ச முற்றெண்**
**அரிதா மெதிர்மறையே யையந் -- தருமும்மை**

**(நெமி.: 76: 1–2)**

**எதிர்மறை சிறப்பெண் ணெச்சமுற் றையம்**
**தெரிநிலை யாக்கம் எனஎட்டு உம்மே**

**(இ.வி.: 256)**

**உம்மையே எதிர்மறை எச்சம் முற்றளவை**
**சிறப்பையம் ஆக்கம் தெளிவு என எட்டே**

**(தொ.வி.: 134)**

**எதிர்மறை யெச்சமுற்று எண்ணே தெரிநிலை**
**ஐயஞ்சிறப்பு ஆக்கம் அளிக்கும் உம்மை**

**(மு.வீ.: 648)**

**தெரிவுமறை யாக்கம் எச்சம் ஐயம்முற்று எண்ணுடனே**
**சிறப்பொடு உம்மை எட்டாம்...**

**(சுவாமி.: 54: 4)**

## மயிலை நாதர்

எ–ன், உம்மை இடைச்சொல்லினது இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– இவ்வெட்டுப் பொருளிலும் வரும் உம்மென்னு மிடைச் சொல், எ–று.

வ–று.:–

'**கொற்றன் வருதற்குமுரியன்**' என்பது எதிர்மறை; வாரா னென்ப தற்கு முரித்தாகலின், "**குறவரு மருளுங் குன்றம்**" (மலைபடு.275) என்பது சிறப்பு. '**பத்தானும் எட் டானுங்கொடு**' என்பது ஐயம்; ஒன்று துணியாமையின். '**சாத்தனும் வந்தான்**' என்பது எச்சம்; அவனையே யன்றிப் பிறரையும் வரவு விளக்கலின். '**தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்**' என்பது முற்று. 'ஒன்று மிரண்டும்', '**ஒருகழஞ்சும் இருகழஞ்சும்**', '**உழக்கும் ஆழாக்கும்**', '**ஒருகோலும் அரைக் கோலு**'மென்பன அளவை. '**சாத்தனும் கொற்றனு**' மென்பது எண். '**நன்றுமன்று தீதுமன்று**' என்பது தெரிநிலை; இடை நிகர்த்த தென்பதைத் தெரித்தமையின். '**நெடியனுமாயினான்**' என்பது ஆக்கம்.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், உம்மையிடைச்சொல் இலக்கணம் உணர்–ற்று.

இ–ள்.:– எதிர்மறை முதலிய எட்டுப்பொருளையும் தரும் உம்மையிடைச்சொல், எ–று.

வ–று.:–

கொற்றன் வருதற்கும் உரியன் என்பது எதிர்மறை. [1]"**குறவரும் மருளும் குன்று**" '**இவ்வூர்ப்பூசையும் புலால் தின்னாது**' என்பது உயர்வுசிறப்பு. '**பார்ப்பானும் கள்ளுண்டான்**', [2]"**புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை**" என்பது இழிவு சிறப்பு என்பாரும் உளர். அங்ஙனமாயின் ஒரு பொருளினது உயர்வைச் சிறப்பித்தல் இழிவைச் சிறப்பித்தல் எனப் பொருள்படாது உயர்ந்த பொருளான் மற்றொன்றைச் சிறப்பித்தல், இழிந்த பொருளான் மற்றொன்றைச் சிறப்பித்தல் எனப் பொருள்படும். அவ்வாறு பொருள்படின் ஒகாரப் பொருளாய் வரும் உயர்வு சிறப்பிற்கும் இழிவு சிறப்பிற்கும் ஆகாமையின் அது

பொருந்தாது என்க. இனி இவ்வும்மைப் பொருளை குன்று முதலியவற்றிற் கொள்ளாது குறவர் முதலியவற்றிற் கொண்டு பூசையும் என்பதனை இழிவுசிறப்பு உம்மை எனக் கோடலும் ஒன்று. இங்ஙனம் இழிவுசிறப்பு என்பதற்கு இழிவினுள் சிறந்த இழிவு எனப் பொருள் கூறுக. உயர்வு சிறப்பும் அது. பூசைக்குப் புலால் தின்னுதல் இழிபும் தின்னாமை சிறப்புமாகப் பொருள் கொளின், குறவர்க்கு மருளுதல் சிறப்பாக வேண்டுமாதலின் அது bghUªj hU v‹ f. **'பத்தானும் எட்டானும் கொடு'** என்பது ஐயம். **'சாத்தனும் வந்தான்'** என்பது கொற்றன் வந்ததன்றி எனப் பொருள்படின் இறந்தது தழீஇய எச்சவும்மை. **'தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்'**, **'எல்லாரும் வந்தார்'** என்பது முற்றும்மை. **'சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தார்'** என்பது எண்ணும்மை. **'ஆணும் அன்று பெண்ணும் அன்று'** என்பது தெரிநிலையும்மை; தெரிநிலை ஒகாரம்போல் பொருளுரைத்துக் கொள்க. 'நெடியனும் ஆயினான்', 'பாலும் ஆயிற்று' என்புழி அவனே வலியனும் ஆயினான் அதுவே மருந்தும் ஆயிற்று எனப் பொருள்படின் ஆக்கவும்மை.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** உம்மை இடைச்சொல்லினது இயல்பு கூறுகின்றது.

**இ—ள்.:— எதிர்மறை** — எதிர்மறைப் பொருண்மைக்கண்ணும், **சிறப்பையும்** — சிறப்புப் பொருண்மைக்கண்ணும் ஐயப் பொருண்மைக் கண்ணும், **எச்சமுற்று** — எச்சப் பொருண்மைக்கண்ணும் முற்றுப் பொருண்மைக்கண்ணும், **அளவை** — பலவற்றை அடுக்கி எண்ணுதற் கண்ணும், **தெரிநிலை** — தெளிவு படுத்த வரும் தெரிநிலைப் பொருண்மைக்கண்ணும், **ஆக்கமோடு** — ஆக்கப் பொருண்மைக் கண்ணொடும், **உம்மையெட்டே** — இவ்வெட்டுப் பொருண்மைக் கண்ணும் வரும் உம் என்னும் இடைச்சொல், **எ—று.**

**உ—ம்.:—**

**'கொற்றன் வருதற்கும் உரியன்'** என்பது, எதிர்மறை; வாரான் என்பதற்கும் உரித்தாகலின். **"குறவரு மருளுங் குன்றம்"** (மலைபடு.125) என்பது சிறப்பு; யாவரும் செல்லக்கூடாது என்பது பட நிற்றலின். **'பத்தேனும் எட்டேனும் கொடு'** என்பது ஐயம்; ஒன்று துணியாமையின். **'சாத்தனும் வந்தான்'** என்பது, **எச்சம்;** அவனேயன்றி, பிறனையும் வரவு விளக்கலின். **'தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார்'** என்பது, **முற்று;** மூவரன்றி வேறில்லை யெனக் காட்டலின். **'ஒன்றும் இரண்டும்'**, **'பொன்னும் மணியும்'** என்பது எண்ணின் **அளவை;** **'பலமும் கஃசும்'** என்பது, **நிறை அளவை;** **'உழக்கும் ஆழாக்கும்'** என்பது **முகத்தல் அளவை;** 'ஒரு கோலும் அரைக்கோலும்' என்பது **நீட்டல் அளவை.** 'நன்றுமன்று தீது மன்று' என்பது தெரிநிலை; இடை நிகர்த்தது என்பது தெரித்தமையின். 'நெடியனும் வலியனும்' என்பது **ஆக்கம்.**

## விசாகப் பெருமாளையர்

இது, உம்மென்னு மிடைசொல் லிலக்கணம் உணர்த்துகின்றது.

**இ–ள்.:– எதிர்மறை**–எதிர்மறையும், **சிறப்பு** – சிறப்பும், **ஐயம்**–ஐயமும், **எச்சமும்**–எச்சமும், **முற்று** – முற்றும், **அளவை**–அளவையும், **தெரிநிலை**–தெரிநிலையும், **ஆக்கம்**–ஆக்கமுமாகிய, **எட்டு** – எட்டுப்பொருளைத் தரும், **உம்மை**–உம்மையிடைச்சொல், **எ–று.**

**வ–று.:–**

'கொற்றன் வருதற்கு முரியன்', என்பது–எதிர்மறை. சிறப்பு, உயர்வுசிறப்பும் இழிவுசிறப்பும் என இருவகைப்படும். 'குறவரு மருளுங் குன்று'. என்பது குன்றினுயர்வைச் சிறப்பித்தலால் உயர்வுசிறப்பாம். 'புலையனும் விரும்பாப் புன்புலா லியாக்கை' என்பது உடம்பினிழிவைச் சிறப்பித்தலால் இழிவு சிறப்பாம். 'பத்தாயினு மெட்டாயினுங்கொடு' என்பவை ஐயம். எச்சவும்மை இறந்தது தழீஇயதும், எதிரது தழீஇயதும் என இருவகைப்படும். 'சாத்தனும் வந்தான்' என்பது கொற்றன் வந்ததன்றி எனப்பொருள்படின் இறந்து தழீஇய வெச்சவும்மையாம்; இனிக் 'கொற்றனும் வருவானெனப்' பொருள்படின் எதிரது தழீஇய வெச்சவும்மையாம். 'தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்' என்பது முற்றும்மை. 'சாத்தனுங் கொற்றனும் வந்தார்' என்பவை எண்ணும்மை. 'ஆணுமன்று பெண்ணுமன்று' என்பவை தெரிநிலை யும்மை. 'பாலுமாயிற்று' என்பது அதுவே, 'மருந்துமாயிற்று' எனப் பொருள்படின் ஆக்கவும்மை.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

உம்மையிடைச்சொல் பொருள்வகையால் எத்தனை?

எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே.

(எதிர்மறை சிறப்பு ஐயும் எச்சம் முற்று அளவை தெரிநிலை ஆக்கம ஒடு உம்மை எட்டே.)

**இ–ள்.:** எதிர்மறை சிறப்பு ஐயம் எச்சம் முற்று எண் தெரிநிலை ஆக்கம் என உம்மைச்சொல் எட்டாம். **எ–று.**

எச்சவும்மை எத்தனைவகைப்படும்?

எச்சவும்மை இறந்ததுதழீ இயவெச்சமும், எதிரதுழீஇய வெச்சமும் என இருவகைப்படும்.

. எதிர்மறையும்மைக்கும் எச்சவும்மைக்கும் வேற்றுமை யாது?

எதிர்மறையும்மை எச்சத்தின்பாற் படுமாயினும் பிறிதொரு பொருளைத் தழுவாது ஒருபொருளின வினையை மீறுத்தலின் அதனின் வேறாம்.

சிறப்பும்மை எத்தனை?

உயர்வுசிறப்பும்மை இழிவுசிறப்பும்மை என இரண்டு.

வ—று.:—

(1) "சாத்தன் வருதற்குமுரியன்" என்புழி, வராமைக்கு முரியன் என்னும்பொருளைத்தருதலால் எதிர்மறையும்மை.

(2) "குறவரு மருளுங் குன்றம்"குன்றத்து மயங்காது செல்லு தலிற் குறவர் சிறந்தமையாற் சிறப்பும்மை.

"புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை". இங்கே உடம்பி னிழிவைச் சிறப்பித்தலால் குழிவுசிறப்பும்மை.

(3) சாத்தனும் வந்தான். இங்கே கொற்றன் வந்ததன்றி என்னும் பொருளைத் தந்தால் குறந்ததுதழீகுயவெச்சம்; இனிக் கொற்றனும் வருவான் என்னும் பொருளைத் தந்தால், எதிரது தழிகுயவெச்சவும்மை.

(4)இன்னும் இவ்வெச்சந்தானே, யான் கருவூர்க்குச் செல்வல் என்றார்க்கு யானும் அவ்வூர்க்குப் போதுவல் என முழுதுந் தழுவுவதும் அவ்வாறு கூறினார்க்கு யானும் உறையூர்க்குப் போதுவல் என ஒருபுடைதழுவுவதுமென இருவகைத்தாம்.

(5) எல்லாரும் வந்தார். இங்கே எஞ்சாப்பொருளைத் தருதலால் முற்றும்மை.

(6) இராவும் பகலும். இங்கே எண்ணுதற்கண் வருதலால் எண்ணும்மை.

(7) ஆணுமன்று பெண்ணுமன்று. இங்கே இன்னதெனத் தெரிவித்துநிற்றலால் தெரிநிலையும்மை.

(8) பாலுமாயிற்று. இங்கே அதுவே மருந்துமாயிற்று என்னும் பொருளைத் தருதலால் ஆக்கவும்மை.

## முகவை இராமனுச கவிராயர்

இது, உம் என்னும் இடைச்சொல் லிலக்கண முணர்த்திற்று.

இ—ள்.: எதிர்மறை முதலிய எட்டுப்பொருளையுந் தரும் உம்மையிடைச்சொல் லென்றவாறு,

வ—று.:—

கொற்றன் வருதற்குமுரியன் என்பது, வாராமைக்கும் உரியனென நிற்றலால், எதிர்மறை. சிறப்பு—உயர்வுசிறப்பு, இழிவுசிறப்பு என இருவகைப்படும், குறவரும் மருளுங் குன்று, இவ்வூர்ப்பூசையும் புலால்தின்னாது என்பன, குன்றி னுயர்வையும், புலால் தின்னாத அவ்வூரினுயர்வையுஞ் சிறப்பித் தலால், உயர்வுசிறப்பு. புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை, என்பது உடம்பினது இழிவைச் சிறப்பித்தலால் இழிவுசிறப்பு. பார்ப்பானுங் கள்ளுண்டான் என்பதுமது. இது கள்ளுண்டலாகிய இழிவு பார்ப்பானுண்ணப்படு தலாலிழிவு சிறப்பாயிற்று. இவ்வூர் என்பதை நீக்கிப் பூசையும் புலால் தின்னாதெனின்,

புலால்தின்னு மிழிவிலே பூசை தின்னாது சிறத்தலின், இழிவு சிறப்பும்மை யெனினும் அமையும். 'பத்தாயினும் எட்டாயினுங்கொடு' என்பது–ஐயம். எச்சவும்மை, இறந்தது, தழுவியதும் எதிரது தழுவியதுமென இருவகைப்படும், சாத்தனும் வந்தான் என்பது கொற்றன் வந்ததன்றி எனப் பொருள்படின் இறந்த துதழுவிய எச்சவும்மை; கொற்றனும் வருவானெனப் பொருள்படின் எதிரது தழுவிய எச்சவும்மை. இன்னும் இவ்வெச்சவும்மை முழுவதுந் தழுவியதும் ஒருபுடை தழுவியதும் என இரு வகைப்படும். யான் கருவூர்க்குச் செல்வேன் என்றார்க்கு 'யானுமவ் வூர்க்குச்செல்வேன்' எனவும் அவ்வாறு கூறினார்க்கு 'யானும் உறையூர்க்குச் செல்வன்' எனவும் வரும். தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், 'எல்லாரும் வந்தார்' என்பது முற்றும்மை, சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும் வந்தார் என்பது எண்ணும்மை, 'இருநிலமடி தோய்தலால் திருமகளுமல்லள் அரமகளுமல்லள் இவள் யாராகும்' என்பது, ஆராய்தற்கண் வருதலால், தெரிநிலை. 'நெடியனும் வலியனுமா யினானவன்' 'பாலும் மருந்துமது வாயிற்று' என்பன ஆக்கம். இதனை, 'நெடியனுமாயினான்' 'பாலு மாயிற்று' எனக்கூறி– அவனே வலியனுமாயினா னதுவே மருந்து மாயிற்று எனப் பொருள்படி னாக்கவும்மை யென்பாருமுளர். 'செப்பே வழீஇ யினும் வரைநிலை யின்றே' என்றவும்மை வழுவி வரினும் இலக்கணமாமென அமைத்துக்கோடலால், ஆக்க வும்மை யெனக் கூறுதல் ஆசிரியர் கருத்தாதலால்; நெடியனுமாயினான் என நிற்பினும் அவ்வும்மை ஆக்கவும்மை யெனக் கூறவேண்டுதலால் அது பொருந்தாதென்க.

**"எச்சஞ் சிறப்பே யையமெதிர்மறை**
**முற்றே யென்ணே தெரிநிலை யாக்கமென்**
**றப்பா லெட்டே யும்மைச் சொல்லே"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **உம்மை** – 'உம்' என்னும் இடைச்சொல், **எதிர்மறை** – எதிர்மறையும், **சிறப்பு** – (இருவகைச்) சிறப்பும், **ஐயம்** – சந்தேகமும், **எச்சம்** – எச்சமும், **முற்று** – முற்றும், **அளவை** – எண்ணும், **தெரிநிலை** தெரிநிலையும், **ஆக்கமோடு** – ஆக்கமும் ஆகிய, **எட்டு** – எட்டுப் பொருளைத் தரும்.

**குறிப்பு :–** எச்சம் – இறந்தது தழுவிய எச்சமும், எதிரது தழுவிய எச்சமும் என இருவகைப்படும். (எச்சம் – குறைந்துநின்ற பொருளைக் காட்டுவது).

உதாரணம் :

(1)சாத்தன் வருதற்கும் உரியன் – இதில் வாராமைக்கும் உரியன் எனப் பெருள்படுதலால், எதிர்மறை.

(2)a. குறவரும் அஞ்சுங்குன்று – இதில் குறவர் முகமாகக் குன்றின் உயர்வை விளக்குதலால், உயர்வு சிறப்பு.

b. 'புலையனும் விரும்பாத யாக்கை' இதில், புலையன் முகமாக உடம்பின் இழிவை விளக்குதலால், இழிவு சிறப்பு.

(3)பத்தாயினும் எட்டாயினும் கொடு – இதில் ஒன்றைத் துணிந்து சொல்லாமையால், ஐயம்.

(4)a. சாத்தனும் வந்தான் – இதில் முன் கொற்றன் வந்த தல்லாமல் என்னும் பொருளைத் தந்தால், இறந்தது தழுவிய எச்சம்.

b. இனிக் கொற்றனும் வருவான் என்னும் பொருளைத் தந்தால், எதிரது தழுவிய எச்சம்.

(5)தமிழ்நாட்டு மூவரசரும் வந்தார் – இதில் குறைவில்லாத பொருளைத் தருதலால், முற்று.

(6)சேரனும் பாண்டியனும் – இதில் எண்ணிநிற்றலால், எண்.

(7)அலியைநோக்கி 'ஆணுமன்று பெண்ணுமன்று' என்பதில் – இன்னதெனத் தெரிவித்து நிற்றலால், தெரிநிலை.

(8)பாலும் ஆயிற்று – இதில், அதுவே மருந்துமாயிற்று என்னும் பொருளைத் தருமிடத்து, ஆக்கம்.

இனிச் சிலவிடத்து இசைநிறை அசைநிலைகளில் வருதலுங் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ –ள்.: எதிர்மறை** – எதிர்மறையும், **சிறப்பு** – சிறப்பும், **ஐயம்** – ஐயமும், **எச்சம்** – எச்சமும் , **முற்று** – முற்றும் , **அளவை** – எண்ணும்,, **தெரிநிலை** – தெரிநிலையும் , **ஆக்கம்** – ஆக்கமுமாகிய, எட்டு **உம்மை** – எட்டுப்பொருளையுந் தரும் உம்மையிடைச் சொல். எ–று.

**எச்சம்** இறந்தது தழீஇய வெச்சமும், எதிரது தழீஇய வெச்சமும் என இருவகைப்படும்.

வ–று.:–

(1) "**மறப்பினு மோத்துக் கொளலாகும்**" இங்கே, மறக்க லாகாது என்னும் பொருளைத் தருதலால் எதிர்மறை.

(2) "**குறவரு மருளுங் குன்றம்**" இங்கே குன்றினுயர்வைச் சிறப்பித்தலால் உயர்வுசிறப்பு.

"**புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை**" இங்கே, உடம்பினிழிவைச் சிறப்பித்தலால் இழிவு சிறப்பு.

(3) '**அவன் வெல்லினும் வெல்லும்**'. இங்கே, துணியாமையை உணர்த்தலால் ஐயம்.

(4) **'சாத்தனும் வந்தான்'.** இங்கே, கொற்றன் வந்ததன்றி என்னும் பொருளைத் தந்ததால் இறந்தது தழீஇய வெச்சம்; இனிக்கொற்றனும் வருவான் என்னும் பொருளைத் தந்தால் எதிரது தழீஇயவெச்சம்.

(5) **'எல்லாரும் வந்தார்'.** இங்கே, எஞ்சாப்பொருளைத் தருதலால் முற்று.

(6) **'இரவும் பகலும்'.** இங்கே, எண்ணுதற்கண் வருதலால் எண்.

(7) **'ஆணுமன்று பெண்ணுமன்று'.** இங்கே, இன்னதெனத் தெரிவித்து நிற்றலாற் றெரிநிலை.

(8) **'பாலுமாயிற்று'.** இங்கே, அதுவே மருந்துமாயிற்று என்னும் பொருளைத் தருதலால் ஆக்கம்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ – ள்.:– எதிர்மறை – எதிர்மறையும் – சிறப்பு** – சிறப்பும், – **ஐயம்** – ஐயமும், – **எச்சம்,** – எச்சமும், – **முற்று** – முற்றும், – **அளவை** – எண்ணும், – **தெரிநிலை** – தெரிநிலையும், **ஆக்கம்** – ஆக்கமுமாகிய, – **எட்டு உம்மை** – எட்டுப் பொருளையும் தரும் உம்மையிடைச்சொல். எ–று.

எச்சம் இறந்ததுதழீஇயவெச்சமும், எதிரதுதழீஇயவெச்சமும் என இருவகைப்படும்.

**வ–று.:–**

(1) "மறப்பினுமோத்துக் கொளலாகும்" இங்கே மறக்கலாகாது என்னும் பொருளைத் தருதலால் எதிர்மறை.

(2) "குறவருமருளுங்குன்றத்துப்படினே" என்பது குன்றத்துமயங்காதியங்குதற்கட் குறவர் சிறந்தமையாற் சிறப்பும்மை. இவ்வுதாரணத்திற் குன்றினுயர்வைச் சிறப்பித்தலாற் சிறப்பும்மையென்றுரைத்தார் சிலர். உம்மை குறவரைச் சிறப்பிக்க அவருமருளுங் குன்றென்று குன்று அவர்முகத்தாற் சிறப்பிக்கப் பட்டதன்றி உம்மை சிறப்பித்தவாறன்றென்பதும், (மந்திரியோ டரசன்வந்தான் என்னுமிடத்து ஒடு என்னுமுருபிடைச் சொற்கூடி நின்ற மந்திரியே உடனிகழ்ச்சிப் பொருளாயினவாறு போல) உம்மையிடைச்சொல் தான் மருவிநின்றகுறவரைச் சிறப்பித்த தென்பதுமுணர்க. மேலும், "மந்தியுமறியா" என்பதற்கு மரமேறுந் தொழிலிற் சிறந்த மந்தியும் என்று நச்சினார்க் கினியருரைத்ததாலும், தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் "எச்சஞ்சிறப்பே" என்னும் 255ம் சூத்திரத்திற்குச் சேனாவரையரெழுதிய உதாரண விளக்கத்தானும் எது கொள்ளற்பாற்றென்பது தெளிக.

"புலையனும்விரும்பாப் புன்புலால்யாக்கை" இங்கே புலையனதிழிவைச் சிறப்பித்தலால் இழிவுசிறப்பு. இவ்வுதாரணத் திலும்

யாக்கையினிழிவைச் சிறப்பித்து நின்ற தென்றார்சிலர். இதற்கும் முன்னுதாரணவிளக்கத்தி லேற்பனகொண்டுணர்ந்து முடிபுசெய்க. சிறப்பு என்பதற்கு அதிகத்தன்மையென்பது ஈண்டுப்பொருளாம். எனவே அச்சிறப்பு, உயர்வு சிறப்பு இழிவு சிறப்பென இருவகையா மென்பது மேலுதாரணங்களிரண்டானு முணர்க.

(3) அவன்வெல்லினும் வெல்லும், இங்கே துணியாமையை உணர்த்தலால் ஐயம்.

(4) சாத்தனும் வந்தான். இங்கே கொற்றன்வந்ததன்றி என்னும் பொருளைத் தரும்போது இறந்ததுதழீஇயவெச்சம்; இனிக் கொற்றனும் வருவான் என்னும் பொருளைத் தரும்போது எதிரது தழீஇயவெச்சம்.

(5) எல்லாரும் வந்தார். இங்கே எஞ்சாப்பொருளைத் தருதலால் முற்று. (எஞ்சா – மிஞ்சாத)

(6) இரவும் பகலும். இங்கே எண்ணுதற்கண் வருதலால் எண்.

(7) ஆணுமன்று பெண்ணுமன்று. இங்கே இன்னதெனத் தெரிவித்து நிற்றலாற் றெரிநிலை. (அலியென்று தெரிவித்தது)

(8) பாலுமாயிற்று. இங்கே அதுவே மருந்துமாயிற்று என்னும் பொருளைத் தருதலால் ஆக்கம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– உம்மை** – உம் என்னும் இடைச்சொல், **எதிர்மறை** – எதிர் மறையும், **சிறப்பு**–(இருவகைச்) சிறப்பும், **ஐயம்** – சந்தேகமும், **எச்சம்** – எச்சமும், **முற்று**–முற்றும், **அளவை** – எண்ணும், **தெரிநிலை** – தெரிநிலையும், **ஆக்கமோடு** – ஆக்கமும் ஆகிய, **எட்டு**–எட்டுப் பொருளைத் தரும்; **எ–று.**

எச்சம் – இறந்தது தழுவிய எச்சமும், எதிரது தழுவிய எச்சமும் என இருவகைப்படும். எச்சம் – குறைந்துநின்ற பொருளைக் காட்டுவது.

**உ.–ம்.:–**

(1) **'சாத்தன் வருதற்கும் உரியன்'** – இதில், வாராமைக்கும் உரியன் எனப் பொருள் படுதரால், எதிர்மறை.

(2) **'குறவரும் அஞ்சும் குன்று'** – இதில், குறவர் முகமாகக் குன்றின் உயர்வை விளக்குதலால், உயர்வுசிறப்பு.

**'புலையனும் விரும்பாத யாக்கை'**–இதில், புலையன் முகமாக உடம்பின் இழிவை விளக்குதலால், இழிவுசிறப்பு.

(3) **'பத்தாயினும் எட்டாயினும் கொடு'**–இதில், ஒன்றைத் துணிந்து சொல்லாமையால், ஐயம்.

(4) **'சாத்தனும் வந்தான்'** – இதில், முன் கொற்றன் வந்ததல்லாமல் என்னும் பொருளைத் தந்தால், இறந்தது தழுவிய எச்சம். இனிக் கொற்றனும் வருவான் என்னும் பொருளைத் தந்தால், எதிரது தழுவியஎச்சம்.

(5) **'தமிழ்நாட்டு மூவரசரும் வந்தார்'**–இதில், குறை வில்லாமைப் பொருளைத் தருதலால், முற்று.

(6) **சேரனும் பாண்டியனும்** – இதில், எண்ணிநிற்றலால், எண்.

(7) அலியை நோக்கி **'ஆணுமன்று, பெண்ணுமன்று'** என்றால்– இதில், இன்னதெனத் தெரிவித்து நிற்றலால், தெரிநிலை.

(8) **'பாலும் ஆயிற்று'** என்றால்–இதில், அதுவே மருந்தும் ஆயிற்று என்னும் பொருளைத் தருமிடத்து, ஆக்கம்.

இனி, சிலவிடத்து இசைநிறை அசைநிலைகளில் வருதலும் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– எதிர்மறை** – எதிர்மறையும், **சிறப்பு** – சிறப்பும், **ஐயம்** – ஐயமும், **எச்சம்** – எச்சமும், **முற்று** – முற்றும், **அறவை** – எண்ணும், **தெரிநிலை** – தெரிநிலையும், **ஆக்கம்** – ஆக்கமுமாகிய, **எட்டு உம்மை** – எட்டுப் பொருளையுந் தரும் உம்மையிடச்சொல். **எ–று.**

எச்சம் இறந்தது தழீஇய வெச்சமும், எதிரதுதழீஇய வெச்சமும் என இருவகைப்படும்.

**உ–ம்.:–**

(1) "மறப்பினும் ஒத்துக் கொளலாகும்" – இங்கே மறக்கலாகாது என்னும் பொருளைத் தருதலால் எதிர்மறை.

(2) ய. "குறவரும் மருளுங் குன்றம்" – இங்கே குன்றினுயர்வைச் சிறப்பித்தலால் உயர்வுசிறப்பு.

ெ. "புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை" – இங்கே உடம்பினிழிவைச் சிறப்பித்தலால் இழிவுசிறப்பு.

(3) அவன் வெல்லினும் வெல்லும் – இங்கே துணியாமையை உணர்த்தலால் ஐயம்.

(4) சாத்தனும் வந்தான் – இங்கே கொற்றன் வந்ததன்றி என்னும் பொருளைத் தந்தால் இறந்தது தழீஇயவெச்சம்; இனிக் கொற்றனும் வருவான் என்னும் பொருளைத் தந்தால் எதிரதுதழீஇய வெச்சம்.

(5) எல்லாரும் வந்தார் – இங்கே எஞ்சாப்பொருளைத் தருதலால் முற்று.

(6) இரவும் பகலும் – இங்கே எணுதற்கண் வருதலால் எண்.

(7) ஆணுமன்று பெண்ணுமன்று – இங்கே இன்னதென்த தெரிவித்து நிற்றலால் தெரிநிலை.

(8) பாலுமாயிற்று – இங்கே அதுவே மருந்துமாயிற்று என்னும் பொருளைத் தருதலால் ஆக்கம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– எதிர்மறை** – எதிர்மறையும், **சிறப்பு** – சிறப்பும், **ஐயம்** – சந்தேகமும், **எச்சம்**– எச்சமும், **முற்று** – முற்றும், **அளவை**–அளவையும், **தெரிநிலை** – தெரிநிலையும், **ஆக்கம்** – ஆக்கமுமாகிய, **எட்டு** – எட்டுப் பொருளைத் தரும், **உம்மை** – உம்மை இடைச் சொல்,**எ–று**

**பொ–ரை.:–**

எதிர்மறை முதலிய எட்டுப் பொருளையும் தரும் உம்மை இடைச்சொல்.

(எச்சவும்மை – இறந்தது தழீஇயதும், எதிரது தழீ இயதும் என இருவகைப்படும்.)

(உ–ம்)

1. கொற்றன் வருதற்கு முரியன்.

வாராமைக்கும் உரியன் எனப் பொருள் படுதலால், எதிர்மறை.

2. குறவரு மருளும் குன்று.

குன்றினுயர்வைச் சிறப்பித்தலால், உயர்வு சிறப்பாம்.

“புலையனும் விரும்பாப் புன் புலால் யாக்கை”

உடம்பின் இழிவைச் சிற்பபித்தலால், இழிவு சிறப்பாம்.

3. பத்தாயினு மெட்டாயினும் கொடு.

ஒன்றைத் துணிந்து சொல்லாமையால், ஐயம்

4. சாத்தனும் வந்தான்.

முன் கொற்றன் வந்ததன்றி எனப் பொருள்படின், இறந்ததுதழீஇய எச்சவும்மையாம்.

சாத்தனும் வந்தான்.

இனிக் கொற்றனும் வருவானெனப் பொருள்படின், எதிரது தழீஇய எச்சவும்மையாம்.

5. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்.

குறைவில்லாமைப் பொருளைத் தருதலால், முற்றும்மை.

6. சாத்தனும் கொற்றனும் வந்தார்.

எண்ணி நிற்றலால் எண்ணும்மை

7. “அலியை நோக்கி, ஆணுமன்று; பெண்ணுமன்று.”

இன்னதெனத் தெரிவித்து நிற்றலால், தெரிநிலையும்மை.

8. பாலும் ஆயிற்று.

அதுவே மருந்துமாயிற்று எனப் பொருள்படின், ஆக்கவும்மை.

## கா. நமச்சிவாய முதலியார்

**உம்மை** – உம்மை இடைச்சொல், **எதிர்மறை** – எதிர்மறையும், **சிறப்பு** – சிறப்பும், **ஐயம்** – ஐயமும், **எச்சம்** – எச்சமும், **முற்று** – முற்றும், **அளவை** – அளவையும், **தெரிநிலை** – தெரிநிலையும், **ஆக்கம்** – ஆக்கமும் ஆகிய, **எட்டு** – எட்டுப் பொருளைத் தரும்.

சிறப்பும்மை, உயர்வு சிறப்பும் இழிவு சிறப்பும் என இரு வகைப்படும். எச்சவும்மை – இறந்தது தழீ இயதும், எதிரது தழீ இயதும் என இருவகைப்படும்.

**உதாரணம்**

| | |
|---|---|
| 1 கொற்றன் வருதற்**கும்** உரியன் – | வாராமையும் குறிக்குமா தலின் எதிர்மறை. |
| 2. குறவ**ரும்** மருளும் குன்று – | குன்றின் உயர்வைச் சிறப்பித்தலால் உயர்வு சிறப்பு. |
| புலைய**னும்** விரும்பாப் புன் புலால் யாக்கை | உடம்பின் இழிவைச் சிறப்பித்தலால் இழிவு சிறப்பு. |
| 3. பத்தாயி**னும்** எட்டாயி**னும்** கொடு – | ஐயம். |
| 4. சாத்த**னும்** வந்தான் | கொற்றன் வந்த தன்றி எனப் பொருள்படின், இறந்ததுதழீ இய எச்சவும்மை |
| சாத்த**னும்** வந்தான் | இனி, கொற்றனும் வரு வான் எனப்பொருள் படின், எதிரது தழீ இய எச்சவும்மை. |
| 5. தமிழ்நட்டு மூவேந்த**ரும்** வந்தார் – | முற்றுமை. |
| 6. சாத்தனும் கொற்றனும் வந்தார் – | எண்ணும்மை. |
| 7. ஆணும் அன்று பெண்ணும் அன்று – | தெரிநிலையும்மை. |
| 8. **பாலும்** ஆயிற்று | அதுவே மருந்தும் ஆயிற்று எனப்பொருள் படின், ஆக்கவும்மை. |

## மோசகூ பொன்னையா

எதிர்மறை, சிறப்பு, ஐயம், எச்சம், முற்று, அளவை, தெரிநிலை, ஆக்கம், என்னும் எட்டுப் பொருட்களிலும் உம் என்னும் இடைச்சொல் வரும், எ—று.

எ—டு

1. மறப்பினும் ஒத்துக் கொளலாகும் எதிர்மறை
2. (அ) குறவரும் மருளும் குன்று
   (ஆ) புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை6 உயர்வு சிறப்பு
   இழிவு சிறப்பு
3. அவன் வரினும் வரும் ஐயம்
4 (அ) கொற்றனும் வந்தான்
   (ஆ) சாத்தனும் வரும் இறந்தது தழீஇயஎச்சம்
   எதிரது தழீஇய எச்சம்
5. தமிழ்நாட்டு மூவேந்தரும் தமிழ் வளர்த்தனர் முற்று
6. (அ) சேரனும், சோழனும், பாண்டியனும் தமிழ்மன்னர்
   (ஆ) கழஞ்சும் அரைக்கழஞ்சும்
   (இ) நாழியும் உழக்கும் ஆழக்கும்
   (ஈ) ஒரு முழமும் அரைச்சாணும்எண்ணல் அளவை
   எடுத்தல் அளவை
   முகத்தல் அளவை
   நீட்டல் அளவை
7. ஐதேய்ந் தன்று பிறையு மன்று
   மைதீர்ந் தன்று மதியு மன்று
   வேயமன் றன்று மலையு மன்று
   பூவமன் றன்று சுனையு மன்று.1 தெரிநிலை
8. கற்றுத்தேர்ந்து கணித மேதையு மாயினான் ஆக்கம்

தொல்காப்பியர்,

**எச்சஞ் சிறப்பே மைய மெதிர்மறை**
**முற்றே யெண்ணே தெரிநிலை யாக்கமென்**
**றப்பா லெட்டே யும்மைச் சொல்லே,**

எனவும், நேமிநாத ஆசிரியர்,

**தெரிநிலை யாக்கஞ் சிறப்பெச்ச முற்றெண்**
**அரிதா மெதிர்மறையே யையந்—தருமும்மை,**

என உம்மைக்கு இவ்வெட்டுப் பொருளையுமே ஓதினர். அவ்விரு வரும் எண்ணும்மை எனக் கொண்டதை இவ்வாசிரியர், அளவை எனக் கூறி, நால்வகை அளவைக்கும் உரிமை காட்டினார்.

நேமிநாத உரைகாரர், "உம்மை அசைநிலையாகவும் பெறும். அவன் மிகவும் நல்லன், அறவும் தீயன், 'அவருள்ளும் பொன்னோடை நன்றொன்றாள் நல்லாளே' என்பன அசைநிலை" எனக் கூறியுள்ளமை இவண் அறியத்தக்கது.

சிறப்பும்மையால் உயர்விற் சிறந்தது உயர்வாகவும், இழிவிற் சிறந்தது இழிவாகவும் சிறப்பித்துக் கூறப்படும் எனக் கொள்க.

தெய்வச்சிலையார், பெயரெச்ச வினைச்சொல்லின் இறுதி உம் எண்ணும்மையாகவரின், அஃது உந்து எனத்திரியும் எனவும், அவ்வும்மை உருபு வினைநிற்பத் தொகின், வினைத் தொகையாகின்றது எனவும், அதுவும் வேற்றுமை உருபே போல் மற்றொரு பொருளைக் கருதி நிற்கின்றது எனவும், செய்யும் என்னும் முற்றின்கண் உள்ள உம் என்னும் இடைச்சொல் அதனினும் வேறுபட்டது எனவும், பின்னது முற்றி நிற்றலின் அதை முற்றும்மை எனல் தகும் எனவும் கருதுகின்றார். இவ்வாசிரியர் காலத்தில் உந்தீற்றுச் சொற்கள் வழக்கிழந்தன ஆதலின், இடையியலில் உந்து பற்றி ஏதுங் கூறாது விடுத்தார் எனக்கொள்ளலும் ஒன்று.

(6)

## 425. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.

**முற்று உம்மை ஒரோ வழி எச்சமும் ஆகும்.**

murṟu ummai orō vaḻi essamum ākum.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The 'um' of totality**

The um of 'completeness' may sometimes indicate even the opposite meaning.

### ஒப்புமைப் பகுதி

**முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்**
**எச்சக் கிளவி யுரித்தும் ஆகும்**

(தொல். சொல்.: 285)

**முற்றும்மை யொரோவழி எச்சமும் ஆகும்**

(இ.வி.: 257)

### மயிலை நாதர்

இதுவுமது.

**இ—ள்.:—** முற்றும்மை ஒரோவிடத்து எச்சவும்மைப்பொருட்டுமாம், **எ—று.**

**வ—று.:—**

**'பத்துங்கொடால்'** என்றால். 'அனைத்தும் கொடால்' என்றுமாம்; 'அவற்றுட்சிலகொடு' என்றுமாம். **'எல்லாரும் வந்திலர்'**[1] என்றால் 'அனைவரும் வந்திலர்' என்றுமாம்; 'சிலர் வந்தார்' என்றுமாம்.

## சங்கர நமச்சிவாயர்

எ— **னின்,** முற்றும்மைக்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி **உணர்—ற்று.**

**இ — ள்.:** முற்றும்மை ஒரோவிடங்களின் எச்சவும்மையுமாம், **எ—று.**

**வ—று.:—**

**'ஆறும் தருவது வினையே'** என்புழி ஐந்தும் தருவது வினையே என்றும், **'எல்லாரும் இதுசெய்யார்'** என்புழிச் சிலர் இது செய்வார் என்றும் முற்றும்மைப் பொருளும் எச்சவும்மைப் பொருளும் ஒருங்கு தருதல் காண்க. இங்ஙனம் தருதலின் **'எச்சமும்'** என இறந்ததுதழீஇய எச்சவும்மையால் கூறினார்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** இன்னும் முற்றும்மை இடைச்சொற்கு ஓர் இயல்பு கூறுகின்றது.

**இ—ள்.:— முற்றும்மை** — தன் பொருண் முழுதுங்கொண்டு நிறைவாய் இருந்த முற்றும்மை, **ஒரோவழி** — ஒரோ ஓரிடத்து, **எச்சமு மாகும்** — குறைவாகிய எச்ச உம்மைக் குறிப்புமாம், **எ—று.**

**உ—ம்.:—**

'பத்தும் கொடுக்க வேண்டாம்' என்றால் அனைத்தும் கொடுக்க வேண்டாம் என்றுமாம்; அவற்றுட் சில கொடு என்றுமாம். 'எல்லாரும் வந்திலர்' என்றால் அனைவரும் வந்திலர் என்றுமாம்; சிலர் வந்தார், **என்றுமாம்.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முற்றும்மைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ—ள்.:— முற்றும்மை** — முற்றும்மையானது, **ஒரோவழி**—ஒரோவிடத்தே, *எச்சமுமாகும்*—எச்சவும்மையுமாகும், **எ—று.**

---

பாட **வேறுபாடு.:—**

1. **வாராரென்றால் அனைவரும் வாராரென்றுமாம் சிலர் வருவாரென்றுமாம்**

வ—று.:—

'எல்லாரு மிதுசெய்யார்' என்கிறவிடத்தே, சிலரிது செய்வா ரெனவும் பொருள்படுதல் காண்க.

## ஆ- முத்துத்தம்பிப் பிள்ளை

முற்றும்மை வேறுபொருண்மையிலும் வருமெனக்கூறுஞ் சூத்திரம் யாது?

முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.

(முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்.)

**இ—ள்.:** மேற்கூறிய முற்றும்மை ஒரோவிடத்து எச்சவும்மையாம். **எ—று.**

**வ—று.** எல்லாரும் வந்திலர்; அவர் பத்துங் கொடார். இங்கே சிலர் வந்தார்; சிலகொடுப்பார் எனவும் பொருள்படுதலால், எச்சவும்மையாயிற்று.

எச்சப்படுவது எதிர்மறைவினைக்கண்ணேயாம்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** முற்றும்மைக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதியுணர்த்திற்று.

**இ—ள்.:—** மேற்கூறிய முற்றும்மை ஓரோரிடங்களில் எச்சவும்மையுமா மென்றவாறு.

**ஏற்புழிக்கோடலால் எச்சப்பொருள்ப** நிற்பது, பெரும்பாலும் எதிர்மறைக் கண்ணே யெனக் கொள்க.

வ—று.:—

'பத்துங்கொடேல்', 'அனைத்துங்கொடேல்' 'எல்லாருமிதுசெய்யார்' என்னும் முற்றும்மைகள் சிலகுறையக்கொடு எனவும், சிலரிது செய்வார் எனவும் எச்சப்பொருள்பட நின்றவாறு காண்க. 'ஆறுந் தருவது வினை' என்பது ஐந்துந் தருவது வினையெனச் சிறுபான்மை யுடன்பாட்டிலும் வந்தது. இதுவும் எதிர்மறைக் கண்வந்ததேயாம்; ஆறுந் தாராது ஐந்துந் தருவதெனப் பொருள்படுதலாலென்க.

**"முற்றிய வும்மை தொகைச்சொன் மருங்கி,**

**னெச்சக் கிளவி யுரித்து மாகும்"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :—** **முற்று உம்மை** – (மேற்சொன்ன பொருள்களில்) முற்றுப் பொருளில் வரும் உம்மை, **ஒரோவழி** – சிலவிடங்களில், **எச்சமுமாகும்** – எச்சப்பொருள் தருவதுமாம்.

குறிப்பு :—

**ஏற்புழிக்கோடலால்,** எச்சப் பொருள்பட நிற்பது பெரும்பாலும் எதிர் மறையில் எனக் கொள்க.

உ—ம் :–

'எல்லாரும்வந்திலர்' என்பதில் சிலர் வந்தாரென்றும், 'அவர் பத்துங்கொடார்' என்பதில், சில கொடுப்பாரென்றும் பொருள் படுதல் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:– முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்** – மேற்கூறிய முற்றும்மை யொரோவிடத்து எச்சவும்மையுமாம், **எ—று.**

**வ—று.:–**

'எல்லாரும் வந்திலர்', 'அவர் பத்துங்கொடார்'. இங்கே, சிலர் வந்தார், சில கொடுப்பார் எனவும் பொருள் படுதலால், எச்சவும்மையுமாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ – ள்.:– முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்** – மேற்கூறிய முற்றும்மை யொரோவிடத்து எச்சவும்மையுமாம். **எ – று.**

**வ – று.:–**

எல்லோரும் வந்திலர்; அவர் பத்துங்கொடார் இங்கே சிலர் வந்தார்; பத்திற் சிலகொடுப்பார் எனவும் பொருள்படுதலால், எச்சவும்மையுமாயிற்று. எதிர்மறைவினையான் முடிக்கப்படு மிடங்களில் முற்றும்மை எச்சப்பொருள் பயத்தலுமுண் டென்றறிக.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.:– முற்று உம்மை** – (மேற்சொன்ன பொருள்களில்) முற்றுப் பொருளில் வரும் உம்மை, **ஒரோவழி** – சில இடங்களில், **எச்சமும் ஆகும்** – எச்சப்பொருளைத் தருவதுமாம்; **எ—று.**

**ஏற்புழிக்கோடலால்,** எச்சப்பொருள்பட நிற்பது பெரும்பாலும் எதிர் *மறையில் எனக் கொள்க.*

**உ—ம்.:**

**'எல்லோரும் வந்திலர்'** என்பதில், சிலர் வந்தாரென்றும்; **'அவர் பத்தும் கொடார்'** என்பதில், சில கொடுப்பா ரென்றும், **'முழுவதும் அறிந்திலன்'** என்பதில், சில அறிந்துள னென்றும் பொருள் படுதல் காண்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்** – மேற்கூயி முற்றும்மை யொரோவிடத்து எச்சவும்மையுமாம். எ–று.

**உ–ம்.:–**

எல்லாரும் வந்திலர், அவர் பத்துங் கொடார் – இங்கே சிலர்வந்தார், சில கொடுப்பார் எனவும் பொருள் படுதலால் எச்சவும்மையுமாயிற்று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– முற்று உம்மை** – முற்றும்மையானது, **ஒரோவழி** – ஒரோவிடத்தே, **எச்சமும் ஆகும்** – எச்சவும்மையுமாகும். எ–று

**பொ–ரை.:–** முற்றும்மை ஒரோ விடங்களில் எச்ச உம்மையும் ஆகும்.

**உ–ம்.:–**

எல்லாரும் இது செய்யார் – இங்கு, சிலர் இது செய்வார் எனவும் பொருள்படுதலால், எச்சவும்மையாயிற்று.

'ஆறுந்தருவது வினையே' என்பதும் அது.

## கா. நமச்சிவாய முதலியார்

**முற்று உம்மை** – முற்றும்மையானது, **ஒரோவழி** – ஒரோவிடத்தில், **எச்சமும் ஆகும்** – எச்சவும்மையுமாகும்.

**உதாரணம்**

எல்லாரும் இதுசெய்யார்; அவர் முழுவதும் கொடார் – இங்குச் **சிலர் இது செய்வார்** எனவும், அவர் **சிறிது கொடுப்பார்** எனவும் பொருள் படுதலால், முற்றும்மை எச்சவும்மை ஆயிற்று.

## மோசசு பொன்னையா

உம்மைக்குரிய எண்வகைப் பொருள்களுள் ஒன்றான முற்றும்மைப் பொருள் எச்சப்பொருள் தருதலும் ஆகும் எ–று.

**ஏற்புழிக்கோடலால், எச்சப்பொருள் தருதல் பெரும்பாலும்**
**எதிர்மறைக் கண்ணேயென்க. சிறுபான்மை உடன்பாட்டிலும்**
**வருதல் வரும் நூற்பாவாற் றெளிவுறும்.**

**எ–டு.:–**

பத்துங்கொடேல் (சில குறையைக் கொடு)
எல்லாரும் இது செய்யார் (சிலர் இது செய்வர்)
தொல்காப்பியரும்,

**முற்றிய வும்மைத் தொகைச்சொன் மருங்கி**
**னெச்சங் கிளவி யுரித்து மாகும்,3**

எனக் கூறி மரபுவழுக் காத்தமை காண்க.

(8)

## 426. செவ்வெ ணீற்றதா மெச்ச வும்மை

செவ்வெண் ஈற்றது ஆம் எச்ச உம்மை

sevveṇ īṟṟatu ām essa ummai

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The um of ellipsis**

In a series of person or things with the connective particle omitted, *the um of ellipsis may be affixed to the last word.*

### ஒப்புமைப் பகுதி

**எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் ஆயின்**
**பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்**

(தொல். சொல்.: 284)

**எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் ஆயின்**
**பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்**

(இ.வி.: 258)

### மயிலை நாதர்

இதுவுமது.

இ—ள்.:— செவ்வெணின்கண் எச்சவும்மை கொடுக்கின் ஈற்றிலே கொடுக்க, எ — று.

வ—று.:—

"அடகு புலால்பாகு பாளிதமு முண்ணான், கடல்போலுங் கல்வி யவன்" (தொல்.இடை.சூ 36, இளம்.சே.ந) என வரும்; அடகும் புலாலும் பாகும் பாளிதமு முண்ணானென்றறிக.

### சங்கர நமச்சிவாயர்

**எ—னின், எச்சவும்மைக்கு ஆவதோர் விதி உணர் — ற்று.**

இ—ள்.:— எச்சவும்மை செவ்வெண்ணின்கண் வருமாயின் ஈற்றின்கண் வரும், எ — று.

வ—று.:—

**'செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்**
**செய்பொரு ளும்தரும் திறத்தது வினையே'**

என்புழி இவற்றுள் சிலவும் தரும் திறந்தது வினையே எனவும், **'கல்வி செல்வம் ஒழுக்கம் குடிப்பிறப்பும் பெறுவாரும் உளர்'** என்புழி இவற்றுள் சில பெறுவாரும் உளர் எனவும் பொருள் படுதல் காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், என்னும்மை இடைச்சொற்கு ஆவதோர் இயல்பு கூறுகின்றது.

**இ—ள்.:— செவ்வெண்**—செவ்வெண்ணின்கண்ணே, **ஈற்றதா மெச்ச வும்மை** – எச்சவும்மை கொடுக்கில் ஈற்றிலே கொடுக்க, எ—று.

உ—ம்.:—

**"அடகு புலால்பாகு பாளிதமு முண்ணான், கடல்போலுங் கல்வி யவன்"** என வரும். அடகும் புலாலும் பாகும் பாளிதமும் உண்ணான் என அறிக.

## விசாகப் பெருமாளையர்

இது, எச்சவும்மைக்கு ஆவதோர் விதி யுணர்த்துகின்றது.

**இ—ள்.:— எச்சவும்மை**—எச்சவும்மையானது, **செவ்வெண்**— செவ் வெண்ணிலே வருமாயின், **ஈற்றதாம்**—ஈற்றிலே வரும், எ—று.

வ—று.:—

கல்வி செல்வ மொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர் என்கிறவிடத்தே இவற்றுட்சில பெறுவாரு முளரெனப் பொருள் படுதல் காண்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

எச்சவும்மை யீற்றில் வருமாயின் என்னபொருளல் வரும்?

செவ்வெண் ணீற்றதா மெச்ச வும்மை.

(செவ்வெண் ஈற்றது ஆம் எச்சவும்மை.)

இ—ள்.: எச்சவும்மை செவ்வெண்ணில் வருமாயின் ஈற்றில் வரும். எ—று.

செவ்வெண்ணாவது எண்ணிடைச்சொற் றொக்குநிற்ப வருவது.

வ—று.:—

கல்வி செல்வ மொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர் என்புழி, இவற்றுட்சில பெறுவாருமுளர் எனப் பொருள்படுதல் காண்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** எச்சவும்மைக் காவதோர் விதி யுணர்த்திற்று,

**இ—ள்.:** எச்சவும்மை செவ்வெண்ணிலே வருமாயின் ஈற்றிலே வரும், எ—று.

செவ்வெண் என்பது எண்ணிடைச்சொல் இன்றி, எண்ணி நிற்பது.

வ—று.:—

'செய்பவன் கருவி நிலஞ் செயல் காலஞ் செய்பொருளாறுந் தருவது வினை' எனவும், 'கல்விசெல்வ மொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர்' எனவும் வரும். இவற்றுட் சிலவுந் தருந் திறந்தது வினை யெனவும், இவற்றுட் சில பெறுவாருமுளரெனவும் முறையே எச்சப்பொருள்படுதலும் எச்சவும்மை யீற்றிலே நிற்றலுங் காண்க. இனி **மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின் மொழியாத தனையு முட்டின்றி முடித்தலென்னும்** உத்தியால், எச்சவும்மையும் எதிர்மறையும்மையும், எச்சவும்மையும் முற்றும்மையும் எதிர்மறையும் மையுந் தம்முள் மயங்கி நிற்கு மெனவுங் கொள்க. அவை வருமாறு.: 'சாத்தனும் வந்தான் இனிக் கொற்றன் வரினும் வரும்' எனின் சாத்தனுங் கொற்றனுமென்ற எச்சவும்மைகள் வரினுமென்ற எதிர்மறை யும்மையோடும், 'வடுகரசரும் வந்தார் இனித் தமிழ்நாட்டு மூவேந்தரும் வரினும் வருவர்' எனின், வடுகரசரும் என்ற எச்சவும்மையோடு மூவேந்தருமென்ற முற்றும்மை தொடர்ந்து வரினுமென்ற எதிர்மறை யும்மையோடு மயங்கி நிற்றலுங் காண்க. பிறவுமென்ன.

**"எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்**
**பிற படக் கிளவார் முற்படக் கிளத்தல்"**

எனவும்,

**"எச்ச வும்மையு மெதிர் மறை யும்மையுந்**
**தத்தமுண் மயங்கு முடனிலை யிலவே"**

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :— எச்ச உம்மை** — எச்சப்பொருளில் வருகிற உம்மை, **செவ்வெண்** — செவ்வெண்ணிலே வருமாயின், **ஈற்றது ஆம்** — ஈற்றிலே வரும்.

**குறிப்பு** :— செவ்வெண்ணாவது — எண்ணிடைச்சொல் தொக்கு நிற்க எண்ணி நிற்பது.

**உ—ம் :—**

கல்வி செல்வம் ஒழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர் – இங்கு, 'இவற்றுட் சில பெறுவாருமுளர்' எனப் பொருள்படுகிற எச்சவும்மை செவ்வெண்ணின் ஈற்றில் வந்தமை காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– எச்சவும்மை செவ்வெண் ஈற்றது ஆம்** – எச்சவும்மை செவ்வெண்ணில் வருமாயின் ஈற்றில் வரும், எ – று.

செவ்வெண்ணாவது எண்ணிடைச் சொற்றொக்கு நிற்ப வருவது.

வ–று.:–

**'கல்வி செல்வ மொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர்'** என்புழி, இவற்றுட் சில பெறுவாருமுளர் எனப் பொருள்படுதல் காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ – ள்.:– எச்சவும்மை செவ்வெண் ஈற்றது ஆம்** – எச்சவும்மை செவ்வெண்ணில் வருமாயின் ஈற்றில் வரும். எ– று.

செவ்வெண்ணாவது எண்ணிடைச்சொற் றொக்குநிற்ப வருவது.

வ – று.:–

கல்வி செல்வ மொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர் என்புழி, இவற்றுட் சில பெறுவாருமுளர் எனப் பொருள்படுதல் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– எச்ச உம்மை** – எச்சப்பொருளில் வருகிற உம்மை, **செவ்வெண்**– செவ்வெண்ணிலே வருமாயின், **ஈற்றது ஆம்**–ஈற்றிலே வரும்; எ–று.

செவ்வெண்ணாவது – பெயர் வினைகளிலே எண்ணிடைச்சொல் தொக்கு நிற்க எண்ணி நிற்பது.

உ–ம்.:–

**'கல்வி செல்வம் ஒழுக்கம் குடிப்பிறப்பும் பெறுவாரு முளர்'** – இங்கு, இவற்றுள் சில பெறுவாருமுளர் எனப் பொருள்படுகிற எச்சவும்மை, செவ்வெண்ணின் ஈற்றில் வந்தமை காண்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– எச்சவும்மை செவ்வெண் ஈற்றது ஆம்** – எச்சவும்மை செவ்வெண்ணில் வருமாயின் ஈற்றில் வரும். எ–று.

செவ்வெண்ணாவது எண்ணிடைச்சொல் தொக்கு நிற்ப வருவது.

உ–ம்.:–

கல்வி செல்வ மொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர் – என்புழி, இவற்றுட் சில பெறுவாருமுளர் எனப் பொருள்படுதலும் எச்சவும்மை ஈற்றிலே நிற்றலுங் காண்க

## கா. நமச்சிவாய முதலியார்

**எச்ச உம்மை** –எச்சவும்மையானது, **செவ்வெண்** – செவ்வெண்ணிலே வருமாயின், **ஈற்றது ஆம்** – ஈற்றிலே வரும்.

செவ்வெண்ணாவது, உம்மை முதலான யாதோ ரெண்ணிடைச் சொல்லும் வாராது, தொக்கு எண்ணி நிற்பது.

**உதாரணம்**

கல்வி செல்வம் ஒழுக்கம் குடிப்பிறப்பும் பெறுவாரும் உளர் – இங்கு, இவற்றுள், **சில பெறுவாரும் உளர்** எனப் பொருள் படுதல் காண்க.

இத்தொடரில், 'கல்வி செல்வம் ஒழுக்கம் குடிப்பிறப்பு' என்பது வரையில் செவ்வெண்; அதன்மேல் எச்சவும்மை வந்துநின்றது.

## மோசகு பொன்னையா

இவை சிறுபான்மை தொகை பெறாமல் வரின், வழக்காயின் இசையெச்சம் எனவும், செய்யுளாயின் தொகுத்தல் விகாரம் எனவும் அமைத்தல் மரபாம் என அறிக.

சாத்தனும் கொற்றனும் இருவரும் வந்தார்

சாத்தனும் கொற்றனும் வந்தார்

சாத்தனென்று கொற்றனென்று இருவர் உளர்

சாத்னென்று கொற்றனென்று உளர்

சாத்னென கொற்றனென இருவர் உளர்

சாத்தனென கொற்றனென உளர்

சாத்தனோடு கொற்றனோடு இருவர் உளர்

சாத்தனோடு கொற்றனோடு உளர் பின்னைய நான்கும் தொகை பெற்றும் தொகை பெறாமலும் வந்தன.

பெயர்ச் செவ்வெண் விட்டிசைத்து நிற்றலும், உம்மைத் தொகை விட்டிசையாது நிற்றலுமாகிய வேற்றுமையை நுணித்துணர்ந்து கொள்க.

தொல்காப்பியர்,

**உம்மை யெண்ணு மெனவே னெண்ணுந்**
**தம்வயிற் றொகுதி கடம்பாடிலவே**
**எண்ணே கார மிடையிட்டுக் கொளினு**
**மெண்ணுக்குறித் தியலு மென்மனார்** புலவர்.

உம்மை தொக்க வெனவென் கிளவியு
மாவி றாகிய வென்றொன் கிளவியு
மாயிரு கிளவியு மெண்ணுவழிப் பட்டன.
அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்
பெயர்க்குரி மரபிற் செவ்வெ ணிறுதியு
மேயி னாகிய வெண்ணி னிறுதியும்
யாவயின் வரினுந் தொகையின் றியலா.[1]
என்னும் நான்கு நூற்பாக்களிற் கூறியவற்றை இவ்வாசிரியர் இவ்வொரு நூற்பாவிற் றொகுத்துக் கூறினார்.

(9)

**427. பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண்
நான்குந் தொகைபெறு மும்மையென் [2]றெனவொ
டிந்நான் கெண்ணுமஃ தின்றியு மியலும்.**

**பெயர்ச் செவ்வெண்ணே என்றா எனும் எண்
நான்கும் தொகை பெறும் உம்மை என்று என ஒடு
இந் நான்கு எண்ணும் அஃது இன்றியும் இயலும்.**

peyarssevveṇ ē enṟā enā eṇ
nāṉkum ṭokaipeṟum ummai eṉṟu eṉaōtu
innāṉkum eṇṇum akhṭu iṉṟiyum iyalum.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### The particles of enumeration

In a series of Nouns unconnected by a conjunctive particle or in a series connected by the particles ênra, or ena the total number must be expressed (at the end); but if it is connected by (the particles) um, enru, ena, or otu, the total may or may not be expressed.

## ஒப்புமைப் பகுதி

**உம்மை தொக்க எனவென் கிளவியும்
ஆவி றாகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன**

**(தொல். சொல்.: 289)**

**அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்குரி மரபிற் செவ்வெண் இறுதியும்
ஏயி னாகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினுந் தொகையின் றியலா**

**(தொல். சொல்.: 290)**

**உம்மை எண்ணும் எனவென் எண்ணும்**
**தம்வயின் தொகுதி கடப்பா டிலவே**

**(தொல். சொல்.: 287)**

**பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண்**
**நான்கும் தொகைபெறும் உம்மை யென்றெனவொடு**
**இந் நான்கு எண்ணும் அஃதன்றியும் இயலும்**

**(இ.வி.: 260)**

## மயிலை நாதர்

**எ—ன்,**[1]பெயரும் இடைச்சொல்லும் விராவுழி நிகழ்வதோர் விதி யுணர்த்துதல் நுதலிற்று.

**இ—ள்.:—** பெயரிடத்து வருஞ் செவ்வெண்ணும் ஏகாரவெண்ணும் என்றாவெண்ணும் எனாவெண்ணும் ஆகிய நான்கும் இறுதித் தொகை பெற்று நடக்கும்; உம்மையெண்ணும் என்றெனெண்ணும் எனவெனெண்ணும் ஒடு வெனெண்ணும் ஆகிய [2]நான்கும் தொகைபெறாது நடக்கும், **எ—று.**

வ—று.:—

**'சாத்தன் கொற்றன் இருவரும் வந்தார்', 'சாத்தனே கொற்றனே தேவனே மூவரும் வந்தார்', 'சாத்தனென்றா கொற்னென்றா இருவரும் வந்தார்', 'சாத்தனெனாக் கொற்றனெனா இருவரும் வந்தாரென'** முறையே நான் கெண்ணும் தொகை பெற்றவாறு காண்க.

இனி, **'நிலனும் நீரும் தியும் நல்ல', 'சாத்தனென்று கொற்ற னென்று தேவனென்று சொன்னவர் வந்திலர்', 'நிலனென நீரெனத் தீயென வளியென', [3]'வளவில் காய மெனவறி பூதம்', "பொன்னொடுந் தேரொடுந் தானையிற் பொலிந்தே"** என முறையே நான்கும் தொகையின்றி வந்தவாறு காண்க.

உம்மையால், நிலனும் நீருமிரண்டும் வேண்டுமெனத் தொகை பெறலுமாமென்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** முன்னர் எடுத்து விதந்தும் விதவாதும் வரும் சில எண்ணிடைச் சொற்கட்கு ஆவதோர் இலக்கணம் **உணர்—ற்று.**

---

பாட **வேறுபாடு.:—**

**1. எனவொடு விந்நான்கு**

**2. எண்பெயரும்**

**3. அளவிலா காயமென வறிபூதம்**

**இ–ள்.:–** பெயர்களிடையே எண்ணிடைச்சொல் தொக்கு நிற்ப வரும் செவ்வெண்ணும், பெயரோடு தொகாது வரும் ஏகார எண்ணும், என்றா எண்ணும், எனா எண்ணும் ஆகிய நான்கும் தொகைபெற்று நடக்கும்; உம்மை எண்ணும், என்று எண்ணும், என எண்ணும், ஒடு எண்ணும் ஆகிய இந்நான்கு எண்ணும் தொகை பெற்றும் பெறாதும் நடக்கும், எ–று.

'பெயரெண்' என்னாது 'செவ்வெண்' என்றதனால், அஃது எண்ணிடைச் சொல் தொக்க தொகைநிலை என்பதூஉம், அங்ஙனமாதலின் அதனையும் ஏகார முதலிய எண்ணிடைச் சொற்களோடு உடன் கூறப்பட்டது என்பதூஉம் பெற்றாம்.

**வ–று.:–**

'சாத்தன் கொற்றன் தேவன் பூதன் நால்வரும் வந்தார்', 'சாத்தனே கொற்றனே தேவனே பூதனே நால்வரும் வந்தார்', 'சாத்தனென்றா கொற்றனென்றா தேவனென்றா பூதனென்றா நால்வரும் வந்தார்', 'சாத்தனெனாக் கொற்றனெனாத் தேவ னெனாப் பூதனெனா நால்வரும் வந்தார்:' இவை தொகை பெற்றே வந்தன. பெயர்ச்செவ்வெண் தொகை பெறுதற்கு இச்சூத்திரத்தைக் காட்டினும் அமையும். இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகை பெறாது வரின் இசையெச்சமாகவும், செய்யுட்கண் தொகைபெறாது வரின் தொகுக்கும்வழித் தொகுத்தலாய் அமையின் அவ்விகாரமாகவும், அன்றேல் இசையெச்சமாகவும் கொள்க. 'சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் நால்வரும் வந்தார்', 'சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வர் உளர்', 'சாத்தனெனக் கொற்றனெனத் தேவனெனப் பூதனென நால்வர் உளர்', 'சாத்தனோடு கொற்றனோடு தேவனோடு பூதனோடு நால்வர் இவன் மைந்தர்' எனவும்; 'சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தார்', 'நிலனென்று நீரென்று தீயென்று காற்றென்று அளவறுகாயமென்று ஆகிய உலகம்', 'நிலனென நீரெனத் தீயெனக் காற்றென அளவறுகாயமென ஆகிய உலகம்', 'நிலனோடு நீரோடு தீயோடு காற்றோடு அளவறுகாயமோடு ஆகிய பூதம்' எனவும் இவைதொகை பெற்றும் பெறாதும் வந்தன.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், எண்பெயரும் இடைச்சொல்லும் விரவுவழி நிகழ்வதோர் இயல்பு கூறுகின்றது.

**இ–ள்.:–** பெயர்செவ் வெண்... ... ... ... ஏகாரவெண்ணும் என்றாவெண்ணும் எனாவெண்ணும், **நான்குந் தொகைபெறும்** – இந்நான்கெண்ணும் இறுதித் தொகை பெற்று நடக்கும்; ... ... ... என்றென் எண்ணும் எனவென் எண்ணும் ஒடுவென் எண்ணும், **இந்நான் கெண்ணும்** – ஆகிய இந்நான்கெண்ணும், **அஃதின்றியு மியலும்** – தொகை பெறாமலும் நடக்கும், எ–று.

உம்மையாற் றொகை பெறுதலுமாம் என்றவாறு.

உ—ம்.:—

'சாத்தன் கொற்றன் தேவன் பூதன் நால்வரும்' வந்தார் எனவும்; 'சாத்தனே கொற்றனே தேவனே மூவரும் வந்தார்' எனவும்; 'சாத்தனென்றா கொற்றனென்றா தேவனென்றா மூவரும் வந்தார்' எனவும்; 'சாத்தனெனா கொற்றனெனா இருவரும் வந்தார்' எனவும் நான்கெண்ணும் முறையே தொகை பெற்றன.

இனி 'நிலனும் நீரும் தீயும் நல்லவாம்' எனவும்; 'சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று சொல்லப்பட்டவர் வந்தார்'; 'நிலனென நீரெனத் தீயென வளியென ஆகாயமென அறிகுதும்'; 'பொன்னொடும் தேரொடும் தானையிற் பொலிந் தேன்' எனவும் முறையே நான்கும் தொகையின்றி வந்தன.

**'நிலனும் நீரும் இரண்டும் வேண்டு'**மெனத் தொகை பெறலுமாம்.

## விசாகப் பெருமாளையர்

**இது**, சிலவெண்ணிடைச் சொற்களுக்காவதோ ரிலக்கண முணர்த்து கின்றது.

**இ—ள்.:— பெயர்ச்செவ்வெண்** — பெயர்களிடத்தே யெண்ணிடைச் சொல் தொக்குவருகிற செவ்வெண்ணும், **ஏ (யெண்)** — ஏகாரவெண்ணு, **என்றா (வெண்)** — என்றாவெண்ணும், **எனா(வெண்)**—எனாவெண்ணுமாகிய, **நான்கும்** — நான்கெண்களும், **தொகை** — தொகையை, **பெறும்** — பெற்றுநடக்கும், **உம்மை (யெண்)** — உம்மையெண்ணும், **என் (றெண்)** — என்றெண்ணும், **என (வெண்)** — என வெண்ணும், **ஒ (டெண்)** — ஒடெண்ணும் ஆகிய, **இந்நான்கெண்ணும்** — இந்த நான்கெண்களும், **அன்றியும்** — தொகைபெறாமலும், **இயலும்**—நடக்கும், **எ—று.**

வ—று.:—

சாத்தன் கொற்ற னிருவரும்வந்தார் எனவும், சாத்தனே கொற்றனே யிருவரும் வந்தார் எனவும், சாத்தனென்றா கொற்றனென்றா விரும் வரும்வந்தார் எனவும், சாத்தனெனா கொற்றனெனா விருவரும் வந்தார் எனவும், தொகைபெற்று வந்தன, சாத்தனுங் கொற்றனு மிருவரும் வந்தார் எனவும், சாத்தனென்று கொற்றனென னிருவருளர் எனவும், சாத்த னெனக் கொற்றனென விருவருளர் எனவும், சாத்தனோடு கொற்றனோடிருவருளர் எனவும், தொகை பெற்றும், சாத்தனுங் கொற்றனும்வந்தார் எனவும், நிலனென்று நீரென்று தீயென்று காற்றென்றளவறு காயமென்றாகிய வுலகம் எனவும், நிலனென, நீரெனத் தீயெனக் காற்றெனவளளவறு காயமெனவாகிய வுலகம் எனவும், நிலனோடு—நீரோடு தீயோடு காற்றோடளவறு காய மொடாகிய பூதம் எனவும், தொகைபெறாமலும் வந்தன.

முன்னைய நான்குந் தொகை பெறாது வரின் விகாரத்தாலே தொக்கன வென்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

எண்ணிடைச்சொற்கள் தொகைபெற்றும் பெறாதும் வருமெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

*பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண்*

*ணான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ*

*டிந்நான் கெண்ணுமஃ கின்றியு மியலும்.*

(பெயர்ச்செவ்வெண் ஏ என்றா எனா எண் நான்கும் தொகை பெறும்; உம்மை என்று என ஒடு இந்நான்கு எண்ணும் அஃது இன்றியும் இயலும்.)

**இ—ள்.:–** பெயர்களினிடையே யெண்ணிடைச்சொற் றொக்குநிற்பவருஞ் செவ்வெண்ணும் பெயரோடு தொகாதுவரும் ஏகாரவெண்ணும் என்றா வெண்ணும் எனாவெண்ணுமாகிய நான் கெண்களுந் தொகையைப் பெற்று நடக்கும்; உம்மையெண்ணும் என்றெண்ணும் எனவெண்ணும் ஒடெண்ணுமாகிய இந்த நான்கெண்களும் அத்தொகை பெறாதும் நடக்கும். எ—று.

**(வரலாறு)**

(1) *சாத்தன் கொற்றனிருவரும் வந்தார்*
பெயர்ச்செவ்வெண்.

சாத்தனே கொற்றனே யிருவரும் வந்தார்
ஏகாரவெண்.

சாத்தனென்றா கொற்றனென்றா விருவரும்வந்தார்
என்றாவெண்.

சாத்தனெனாக் கொற்றனெனா விருவரும்வந்தார்
எனாவெண்.

இவை தொகைபெற்றேவந்தன. இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகை பெறாதுவரின, இசையெச்சமாகவும். செய்யுளிலே தொகைபெறாது வரிற் றொகுத்தல் விகாரமாகவுங் கொள்க.

(2) சாத்தனுங் கொற்றனு மிருவரும்வந்தார்
உம்மையெண்.

சாத்தனென்று கொற்றனென் றிருவருளர்
என்றெண்.

சாத்தனெனக் கொற்றனென விருவருளர்
எனவெண்.

சாத்தனோடு கொற்றனோடிருவருளர் – ஒடெண்.

இவை தொகைபெற்று வந்தன. காததனுங் கொள்ளனும் வந்தார்;
நிலனென்று நீரென்று தீயென்று காற்றென் றளவறு காயமென்

றாகிய வுலகம்; நிலனென நீரெனத் தீயெனக் காற்றென வளவறு காயமென வாகிய வுலகம்; நிலனோ நீரோடு தீயோடு காற்றோ டளவறு காயமோ டாகிய பூதம். இவை தொகைபெறாது வந்தன.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மேலொடுத் தோதப்பட்டும் படாதும் வருஞ்சில எண்ணிடைச்சொற்கு ஆவதோரிலக்கணமுணர்த்திற்று.

**இ—ள்.:— பெயர்ச்செவ்வெண்** — பெயர்களிடையே எண்ணிடைச்சொல் தொக்கு நிற்க வருஞ் செவ்வெண்ணும், **ஏஎண்**—(பெயரொடு தொகாது வரும்) ஏகாரவெண்ணும், **என்றா வெனா வெண்**—என்றாவெண்ணும் எனா வெண்ணும், **நான்குந் தொகை பெறும்** — ஆகிய இந்நான்கெண்ணுந் தொகை பெற்று நடக்கும், **உம்மை யென்றெனவோடு** — உம்மையெண்ணும் என்றெண்ணும் என வெண்ணும் ஒடெண்ணும், **இந்நான்கெண்ணும்**—ஆகிய இந்த நான்கெண்ணும், **அஃதின்றியு மியலும்** — அத்தொகை பெறாமலும் நடக்கும், உம்மையாற் பெற்றும் நடக்கும் மென்றவாறு,

பெயரெண் என்று கூறாது 'செவ்வெண்' என்றதினாலே, அது எண் ணிடைச்சொல் தொக்க தொகைநிலை யென்பது பெறப்பட்டது. இப் பெயர்ச் செவ்வெண்ணை இடைச்சொற்களோடு கூட்டியுரைத்த தென்னெனின், இதனிடை எண்ணிடைச்சொல் தொக்கு நிற்றலினென்க.

வ —று.:—

'சாத்தன் கொற்றன் தேவன் பூதனால் வரும் வந்தார்'—இது, **பெயர்ச்செவ்வெண்**. சாத்தனே கொற்றனே தேவனே பூதனே நால்வரும் வந்தார்—இது, **ஏகாரவெண்**. சாத்தனென்றா கொற்றனென்றா தேவனென்றா பூதனென்றா நால்வரும் வந்தார். இது, **என்றாவெண்**. சாத்தனெனாக் கொற்ற னெனாத் தேவனெனாப் பூதனெனா நால்வரும் வந்தார். இது, **எனாவெண்**. இவை, தொகை பெற்றே வந்தன; இவை வழக்கிடத்தோரோரிடங்களிலே தொகைபெறாது வரின், இசையெச்சமாகவும், செய்யுளிலே தொகை பெறாதுவரின் தொகுத்தல் விகாரமாகவாவது இசையெச்சமாகவாவது கொள்க. சாத்தனுங்கொற்றனுந் தேவனும் பூதனுமாகிய நால் வரும் வந்தார், சாத்தனென்று கொற்றனென்று தேவ னென்று பூதனென்று நால்வருளர், சாத்தனெனக் கொற்றா னெனத் தேவனெனப் பூதமென நால்வருளர், சாத்தனோடு கொற்றனோடு தேவனோடு பூதனோடு நால்வருளர், என விவை தொகை பெற்றன. சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும் வந்தார், நிலனென்று நீரென்று தீயென்று வளியென்று அளவறு காயமென்றாகிய வுலகம், 'நிலனென நீரெனத் தீயென வளியென வளவறு காய மெனஆகிய வுலகம்', 'நிலனோடு நீரோடு தீயோடு

வளி யோடளவறு காயமோடாகிய வுலகம்', என விவை தொகை பெறாது வந்தன.

**இனி ஒன்றின் முடித்தலென்பதினால்,** இவ்வெட்டு வகை யெண்களுள் ஏகார வெண் மற்றை யெண்ணகளினிடை நிற்பினும், பிற நிற்பினும் பலவெண் வந்தன வென்று குற்ற மெனல் கூடவாம், அவை பலவு மெண்ணுப் பொருளொன்றையே குறித்து நிற்றலினெனக் கொள்க. அவை வருமாறு:–

**'மலைநிலம் பூவே துலாக்கோ லென்றின்னர்'**

எனவும்;

**'தோற்ற மிசையே நாற்றஞ் சுவையே**
**யுறலோ டாங்கைம் புலனென மொழிப'**

இவை பெயர்ச் செவ்வெண் நின்று ஏகாரவெண்ணை யிடை யிலே கொண்டன. 'மாத்திரை யெழுத்திய லசை வகை யெனா' என்பது, செவ்வெண் நின்று எனாவெண்ணை யிடையிலே கொண்டது, 'யாத்த சீரேயடி யாப்பெனா அ' என்பது–ஏகாரவெண் செவ்வெண்ணையும் எனா வெண்ணையு மிடையிலே கொண்டது. ஒழிந்த வெண்களு மிவ்வாறு வருதல் காண்க. இவ்வெண்ணிடைச் சொற்களுள் ஒடு ஒடுவெனக் குறுகி வருமெனவுமதற்கு இச் சூத்திரமும் வருஞ் சூத்திரமுமே யுதாரண மெனவும் காண்க.

**"உம்மை யெண்ணு மெனவெ னெண்ணுந்**
**தம் வயிற் றொகுதி கடப்பா டிலவே"**

எனவும்

**"உம்மை தொக்க வெனாவென் கிளவியு**
**மாவீ றாகிய வென்றென் கிளவியு**
**மாயிரு கிளவியு மெண்ணுவழிப் பட்டன"**

எனவும்

**"அவற்றின் வருஉ மெண்ணி னிறுதியும்**
**பெயர்குறி மரபிற் செவ்வெண்ணிறுதியும்**
**ஏயி னாகிய வெண்ணி னிறுதியும்**
**யாவையின்வரினுந் தொகையின் றியலா**

எனவும்

**"எண்ணே காரமிடையிட்டுக் கொளினு–மெண்ணுக் குறித்தியலு மென்மனார் புலவர்"**

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க. இந்த இறுதிச் சூத்திரத்துள் எண்ணேகாரமென்பதை ஒரு தொடராக்காது, எண்களுள் ஏகாரமெனப் பகுத்துப் பொரு ளுணர்ந்து கொள்க. இச் சூத்திரமிருமுடிபாக முடிந்து நின்றது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– பெயர் செவ்வெண்** – பெயர்களிடத்தே எண்ணிடைச் சொல் தொக்குவருகிற செவ்வெண்ணும், **ஏ என்றா எனா எண்** – (தொகாமல் வருகிற) இம்மூன்று எண்ணிடைச் சொற்களும், **நான்கும்** – ஆகிய இந்நான்கு எண்களும், **தொகை** – (இத்தனை யென்றுகணக்கிடுந்) தொகைச் சொல்லை, **பெறும்** – பெற்றுவரும்; **உம்மை என்று என ஒடு – இந்நான்கு எண்ணும்** – உம் முதலிய இந்த நான்கு எண்ணிடைச் சொற்களும், **அஃது இன்றியும்** – அத்தொகை பெறாமலும், **இயலும்** – வரும்.

குறிப்பு :–

'இன்றியும்' என்ற உம்மையால் பிற்கூறிய நான்குந் தொகை பெற்றும் வரும் என்க.

உ–ம்.:–

சாத்தன் கொற்றன் இருவரும் வந்தார்
சாத்தனே கொற்றனே இருவரும் வந்தார் தொகை
சாத்தனென்றா கொற்றனென்றா இருவரும் வந்தார் பெற்று
சாத்தனெனாக் கொற்றனெனா இருவரும் வந்தார் வந்தன.

இவை *வழக்கில் சிறுபான்மை* தொகை பெறாதுவரின் இசை யெச்சமாகவும், செய்யுளில் தொகை பெறாதுவரின் தொகுத்தல் விகாரமாகவுங் கொள்க.

உ–ம்.:–

சாத்தனுங் கொற்றனும் இருவரும் வந்தார்
சாத்தனென்று கொற்றனென்று இருவர் உளர் இவை
சாத்தனெனக் கொற்றனென இருவர் உளர் தொகை பெற்று
சாத்தனோடு கொற்றனோடு இருவர் உளர் வந்தன.

சாத்தனுங் கொற்றனும் வந்தார்
சாத்தனென்று கொற்றனென்று உளர் இவை
சாத்தனெனக் கொற்றனெனஉளர் தொகைபெறாமல்
சாத்தனோடு கொற்றனோடு உளர் வந்தன

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– பெயர்ச்செவ்வெண் ஏ என்றா எனா எண் நான்கும் தொகை பெறும்** – பெயர்களினிடையே யெண்ணிடைச் சொற்றொக்கு நிற்ப வருஞ் செவ்வெண்ணும் பெயரோடு தொகாது வரும் ஏகாரவெண்ணும் என்றாவெண்ணும் எனாவெண்ணுமாகிய நான்கெண்களுந் தொகையைப் பெற்று நடக்கும், **உம்மை என்று என ஒடு இந்நான்கு எண்ணும்** – உம்மையெண்ணும் என்றெண்ணும் எனவெண்ணும் ஒடெண்ணுமாகிய இந்த நான்கெண்களும், **அஃது இன்றியும் இயலும்** – அத்தொகை பெறாதும் நடக்கும், எ–று.

வ—று.:—

(1) **'சாத்தன் கொற்றனிருவரும் வந்தார்'; 'சாத்தனே கொற்றனே யிருவரும் வந்தார்'; 'சாத்தனென்றா கொற்றனென்றா விருவரும் வந்தார்'; 'சாத்தனெனாக் கொற்றனெனா விருவரும் வந்தார்'.** இவை தொகைபெற்றே வந்தன. இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகை பெறாது வரின், இசையெச்சமாகவும், செய்யுளிலே தொகை பெறாது வரிற் றொகுத்தல் விகாரமாகவுங் கொள்க.

(2) **'சாத்தனுங் கொற்றனு மிருவரும் வந்தார்'; 'சாத்த னென்று கொற்றனென் றிருவருளர்', 'சாத்த னெனக் கொற்றனென விருவருளர்'; 'சாத்தனோடு கொற்றனோ டிருவருளர்'.** இவை தொகை பெற்று வந்தன. **'சாத்தனுங் கொற்றனும் வந்தார்'; 'நிலனென்று நீரென்று தீயென்று காற்றென் றளவறு காயமென்றாகிய வுலகம்'; 'நிலனென நீரெனத் தீயெனக் காற்றென வளவறு காயமென வாகிய வுலகம்'; 'நிலனோடு நீரோடு தீயோடு காற்றோடளவறு காயமோ டாகிய பூதம்'.** இவை தொகை பெறாது வந்தன.

## வ. குமாரசாமிப் புலவர்

இ – ள்.;– **பெயர்ச்செவ்வெண் ஏ என்றா எனா எண் நான்கும் தொகை பெறும்** – பெயர்களினிடையே யெண்ணிடைச்சொற் றொக்குநிற்ப வருஞ் செவ்வெண்ணும் பெயரோடு தொகாது வரும் ஏகாரவெண்ணும் என்றாவெண்ணும் எனாவெண்ணுமாகிய நான்கெண்களுந் தொகையைப் பெற்று நடக்கும், – **உம்மை என்று என ஒடு இந்நான்கு எண்ணும்** – உம்மை யெண்ணும் என்றெண்ணும் எனவெண்ணும் ஒடெண்ணுமாகிய இந்த நான்கெண்களும், – **அஃது இன்றியும் இயலும்** – அத்தொகை பெறாதும் நடக்கும். **எ – று.**

வ—று.:—

(1) சாத்தன் கொற்றனிருவரும் வந்தார்; சாத்தனே கொற்றனே யிருவரும் வந்தார்; சாத்தனென்றா கொற்றனென்றாவிருவரும் வந்தார்; சாத்தனெனாக் கொற்றனெனா விருவரும் வந்தார். இவை தொகைபெற்றே வந்தன. இவை வழக்கிடத்து ஒரோ வழித்தொகை பெறாது வரின், இசையெச்சமாகவும், செய்யுளிலே தொகைபெறாது வரிற் றொகுத்தல் விகாரமாகவுங் கொள்க.

(2) சாத்தனுங் கொற்றனு மிருவரும் வந்தார், சாத்தனென்று கொற்றனென்றிருவருளர்; சாத்தனெனக் கொற்றனென விருவருளர்; சாத்தனோடு கொற்றனோடிருவருளர், இவை தொகை பெற்று வந்தன. சாத்தனுங்கொற்றனும் வந்தார்; நிலனென்று நீரென்று தீயென்று காற்றென் றளவறு

காயமென்றாகியவுலகம்; நிலனென நீரெனத், தீயெனக் காற்றென வளவறு காயமென வாகிய வுலகம்; நிலனோடு நீரோடு தீயோடு காற்றோடளவறு காயமோடாகிய பூதம். இவை தொகை பெறாது வந்தன.

## வை. மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– பெயர் செவ்வெண்** – பெயர்களிடத்தே எண்ணிடைச்சொல் தொக்கு வருகிற செவ்வெண்ணும், **ஏ என்றா எனா எண்** – (தொகாமல் வருகிற) இம்மூன்று எண்ணிடைச் சொற்களும், **நான்கும்** – ஆகிய இந்நான்கு எண்களும், **தொகை** – (இத்தனை என்று கணக்கிடுந்) தொகைச்சொல்லை, **பெறும்**– பெற்றுவரும்; **உம்மை என்று என ஓடு இந் நான்கு எண்ணும்** – உம் முதலிய இந்த நான்கு எண்ணிடைச் சொற்களும், **அஃது இன்றியும்** – அத்தொகை பெறாமலும், **இயலும்** – வரும்; எ – று. ('இன்றியும்' என்ற உம்மையால், பின்கூறிய நான்கும் தொகைபெற்றும் வரும்.)

**உ–ம்.:–**

'சாத்தன் கொற்றன் இருவரும் வந்தார்', 'சாத்தனே கொற்றனே இருவரும் வந்தார்', 'சாத்தனென்றா கொற்றனென்றா இருவரும் வந்தார்', 'சாத்தனெனாக் கொற்றனெனா இருவரும் வந்தார்' தொகை பெற்றுவந்தன.

இவை வழக்கில் சிறுபான்மை தொகை பெறாமல் வந்தால் அதனை இசையெச்சமாகவும், செய்யுளில் தொகைபெறாமல் வந்தால் அதனைத் தொகுத்தல் விகாரமாகவும் கொள்க.

**உ–ம்.:–**

'சாத்தனும், கொற்றனும் இருவரும் வந்தார்', 'சாத்தனென்று கொற்றனென்று இருவர் உளர்', 'சாத்தனெனக் கொற்றனென இருவர் உளர்', 'சாத்தனோடு கொற்றனோடு இருவர் உளர்', 'சாத்தனும் கொற்றனும் வந்தார்', 'சாத்தனென்று கொற்றனென்று உளர்', 'சாத்தனெனக் கொற்றனென உளர்', 'சாத்தனோடு கொற்றனோடு உளர்' தொகைபெற்றும், பெறாமலும் வந்தன.

பெயர்ச்செவ்வெண்ணுக்கும் உம்மைத்தொகைக்கும் வேறுபாடு

இவ்விரண்டும் பெயர்ச்சொற்களில் எண்ணிடைச்சொல் தொக்கு நிற்பனவாயினும், செவ்வெண் – தொடர் மொழிபோல விட்டிசைத்தும், உம்மைத் தொகை – ஒருமொழிபோல விட்டிசையாமலும் வருமெனக் காண்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– பெயர்ச்செவ்வெண்** – பெயர்களினிடையே யெண்ணிடைச் சொற்றொக்குநிற்ப வருஞ் செவ்வெண்ணும், **ஏ என்றா எனா எண் நான்கும் தொகை பெறும்** – பெயரொடு தொகாது வரும் ஏகார வெண்ணும என்றா வெண்ணும் எனாவெண்ணுமாகிய நான்கெண்களுந் தொகையைப் பெற்று நடக்கும் : **உம்மை என்று என ஒடு இந்நான்கு எண்ணும்** – உம்மையெண்ணும் என்றெண்ணும் எனவெண்ணும் ஒடெண்ணுமாகிய இந்த நான்கெண்களும், **அஃது இன்றியும் இயலும்** – அத் தொகை பெறாதும் நடக்கும். எ–று.

உ–ம்.;–

(1) சாத்தன் கொற்ற னிருவரும் வந்தார்; சாத்தனே கொற்றனே யிருவரும் வந்தார், சாத்தனென்றா கொற்றனென்றா விருவரும் வந்தார்; சாத்தனெனாக் கொற்றனெனா விருவரும் வந்தார் – இவை தொகைபெற்றே வந்தன. இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகை பெறாதுவரின் இசையெச்சமாகவும், செய்யுளிலே தொகை பெறாது வரிற் றொகுத்தல் விகாரமாகவுங் கொள்க.

(2) சாத்தனுங் கொற்றனு மிருவரும் வந்தார்; சாத்தனென்று கொற்றனென் றிருவருளர்; சாத்தனெனக் கொற்றனென விருவருளர்; சாத்தனோடு கொற்றனோ டிருவருளர் – இவை தொகை பெற்றுவந்தன.

சாந்தனுங் கொற்றனும் வந்தார்; நிலனென்று நீரென்று தீயென்று காற்றென் றளவறு காயமென்றாகிய வுலகம்; நிலலெனன நீரெனத் தீயெனக் காற்றென வளவறு காயமென வாகியவுலகம்; நிலனோடு நீரோடு தீயோடு காற்றோடளவறு காயமோடாகிய பூதம் – இவை தொகைபெறாது வந்தன. (காயம் = ஆகாயம்.)

ஒன்றின முடித்தல் என்பதனால் இவ்வெண்ணிடைச் சொற்கள் விரவி நிற்பினும் ஆம் என்பது கொள்க.

(உ–ம்.) 'மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்னர்' – இதில் பெயர்ச் செவ் வெண்ணிடையே ஏகார எண் விரவிநின்றது. 'யாத்தசீரே அடியாப் பெனாஅ' – இதில் ஏகாரவெண்ணும் செவ்வெண்ணும் எனாவெண்ணும் விரவிநின்றன.

இவ்வெண்ணிடைச் சொற்களுள், ஒடு என்பது ஒடு எனக் குறுகியும் வரும் எனக் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**பெயர்ச் செவ்வெண்** – பெயர்களிடத்தே எண்ணிடைச் சொல் தொக்கு வருகின்ற செவ்வெண்ணும், **ஏ** (எண்) – ஏகார எண்ணும், **என்றா** (எண்) – என்றா எண்ணும், **எனா** எண் –எனா எண்ணும் ஆகிய, **நான்கும்** – நான்கு எண்களும், **தொகை** – தொகையை, **பெறும்** – பெற்று நடக்கம். II. **உம்மை (எண்)** –

உம்மையெண்ணும், **என்று** (எண்) – என்று எண்ணும், **என** (எண்) – என எண்ணும், **ஒடு** (எண்) – ஒடு எண்ணும் ஆகிய, **இந் நான்கு எண்ணும்** – இந்த நான்கு எண்களும், **அஃது இன்றியும்** – தொகை பெறுதலேயன்றிப் பெறாமலும், **இயலும்** – நடக்கும்.

**உதாரணம்**

சாத்தன் கொற்றன் **இருவரும்** வந்தார் – செவ்வெண்
சாத்தனேன் கொற்றனே **இருவரும்** வந்தார் – ஏ எண்
சாத்தனென்றா கொற்றனென்றா **இருவரும்** வந்தார் – என்றா எண்
சாத்தனெனாக் கொற்றனெனா **இருவரும்** வந்தார் – எனா எண்
தொகை பெற்று வந்தன.

இவை, வழக்கின்கண் ஒரோவிடத்துத் தொகை பெறாது வரின், இசையெச்சமாகக் கொள்க. செய்யுளின்கண் தொகை பெறாது வரின், தொகுத்தல் விகாரமாகவாவது இசையெச்சமாகவாவது கொள்க.

II.சாத்தனும் கொற்றனும் **இருவரும்** வந்தார் – உம்மை எண்
சாத்தனென்று கொற்றனென்று **இருவருளர்** – என்று எண்
சாத்தனெனக் கொற்றனென **இருவருளர்** – என எண்
சாத்தனொடு கொற்றனொடு **இருவருளர்** – ஒடு எண்

இங்கு, தொகைபெற்று வந்தன.

சாத்தனும் கொற்றனும் வந்தார் – உம்மை எண்
நிலனென்று நீரென்று தீயென்று காற்றென்று
அளவறு காயமென்றாகிய வுலகம் – என்று எண்
நிலனென நீரெனத் தீயெனக் காற்றென
அளவறு காயமென ஆகிய வுலகம் – என எண்
நிலனொடு நீரொடு தீயொடு காற்றொ
டளவறு காயமொடாகிய வுலகம் – ஒடு எண்

இங்கு, தொகைபெறாது வந்தன.

## மோசகு பொன்னையா

பெயர்களின் இடையில் எண்ணிடைச்சொல் தொக்கு வருகின்ற செவ்வெண்ணும், பெயரோடு தொகாது வரும் ஏ, என்றா, எனா என்னும் எண்ணிடைச் சொற்களுமாகிய நான்கும் தொகை பெறும்; உம், என்று, என, ஒடு ஆகிய எண்ணிடைச் சொற்கள் நான்கும் தொகை பெறாமலும் வரும் எ–று.

எ–டு:–

சாத்தன் கொற்றன் இருவரும் வந்தார்
சாத்தனே கொற்றனே இருவரும் வந்தார்

சாத்தனொன்றா கொற்றனொன்றா இருவரும் வந்தார்
சாத்தனெனா கொற்னெனா இருவரும் வந்தார்
முன்னைய நான்கும் தொகை பெற்று வந்தன
இவை சிறுபான்மை தொகை பெறாமல் வரின், வழக்காயின் இசையெச்சம் எனவும், செய்யுளாயின் தொகுத்தல் விகாரம் எனவும் அமைத்தல் மரபாம் என அறிக.
சாத்தனும் கொற்றனும் இருவரும் வந்தார்
சாத்தனும் கொற்றனும் வந்தார்
சாத்தனென்று கொற்றனென்று இருவர் உளர்
சாத்னென்று கொற்றனென்று உளர்
சாத்னென கொற்றனென இருவர் உளர்
சாத்தனென கொற்றனென உளர்
சாத்தனோடு கொற்றனோடு இருவர் உளர்
சாத்தனோடு கொற்றனோடு உளர்
பின்னைய நான்கும் தொகை பெற்றும் தொகை பெறாமலும் வந்தன.
பெயர்ச் செவ்வெண் விட்டிசைத்து நிற்றலும், உம்மைத் தொகை விட்டிசையாது நிற்றலுமாகிய வேற்றுமையை நுணித்துணர்ந்து கொள்க.

தொல்காப்பியர்,

உம்மை யெண்ணு மெனவே னெண்ணுந்
தம்வயிற் றொகுதி கடம்பாடிலவே
எண்ணே கார மிடையிட்டுக் கொளினு
மெண்ணுக்குறித் தியலு மென்மனார் புலவர்.
உம்மை தொக்க வெனவென் கிளவியு
மாவீ றாகிய வென்றொன் கிளவியு
மாயிரு கிளவியு மெண்ணுவழிப் பட்டன.
அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்
பெயர்க்குரி மரபிற் செவ்வெ ணிறுதியு
மேயி னாகிய வெண்ணி னிறுதியும்
யாவயின் வரினுந் தொகையின் றியலா.

.என்னும் நான்கு நூற்பாக்களிற் கூறியவற்றை இவ்வாசிரியர் இவ்வொரு நூற்பாவிற் றொகுத்துக் கூறினார்.

(9)

**428. என்று மெனவு மொடுவு மொரோவழி**
**நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.**

**என்றும் எனவும் ஒடுவும் ஒரோ வழி**
**நின்றும் பிரிந்து எண் பொருள் தொறு நேரும்..**

enṟum eṉavum otuvum orōvaḷi
niṉṟum pirintu eṇ poruḷ toṟum nērum.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### Special rules

The (three particles) enru, ena, and out instead of being repeated after each word in the series may also remain in a certain place and agree with each enumerated word.

## ஒப்புமைப் பகுதி

**என்றும் னளவும் ஒடுவும் தோன்றி**
**ஒன்றுவழி உடைய எண்ணினுட் பிரிந்தே**

(தொல். சொல்.: 294)

**என்று மெனவும் ஒடுவும் தோன்றி**
**ஒன்றுவழி உடைய எண்ணினுள் பிரிந்தே**

(இ.வி.: 261)

## மயிலை நாதர்

எ—ன், இம்மூன்றெண்ணிற்கும் ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.: இம்மூன்றிடைச்சொல்லும் எண்ணின்கண் ஒரிடத்தே நின்றன வேனும் எண்ணும் பொருள்தொறும் பிரிந்துசெல்லும், எ—று.

வ—று.:—

**"வினைபகை யென்றிரண்டி னெச்சம்"** (குறள். 674) என்ற வழி, என்றென்பது ஏனை வினையிடத்தும் செல்லும். **" பகைபாவ மச்சம் பழியென நான்கும்"** (குறள்.146) என்றவழி எனவென்பது ஏனை மூன்றிடத்துஞ் செல்லும். **"பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்"** (குறள்.675) என்றவழி ஒடுவென்பது ஏனை நாலிடத்தும் செல்லும்.

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், எண்ணிடைச் சொல்லுள் சிலவற்றிற்கு எய்திய தன்மேல் சிறப்புவிதி **உணர்—ற்று.**

இ—ள்.:— இம்மூன்று எண்ணும் எண்ணும்பொருடோறும் நிற்றலேயன்றி ஒரிடத்து நின்றும் பிரிந்தும் எண்ணும்பொருள் தோறும் பொருந்தும், **எ—று.**

வ—று:

**"வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்**
**தீயெச்சம் போலத் தெறும்"**

**"பகைபாவம் அச்சம் பழியென நான்கும்**
**இகவாவாம் இல்லிறப்பான் கண்"**
[3]**"பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்**
**இருள்தீர எண்ணிச் செயல்"**

என வரும்.

எண்ணும்பொருள்தோறும் தனித்தனி நிற்றலினும் ஒரோவழி நின்று பிரிதல் இம்மூன்று எண்ணிற்கும் அமைந்து கிடந்தன ஆதலின் ஈண்டும் கூறப்பட்டன; எனவே ஏனை எண்கட்கு எண்ணும்பொருள்தோறும் நிற்கும் நிலையே சிறந்தன எனப தூஉம், ஒரோவழி நின்றுபிரிதல் வலிந்துகொளற்பாலன என்ப தூஉம், அவை ஈண்டு அமையாது **தீவகம்** என்னும் அணியிலக் கணத்தின்பாற்படும் என்பதூஉம் பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** என்று என ஒடு என்னும் இம் மூன்று எண்ணிற்கும் ஆவதோர் இயல்பு கூறியது.

**இ–ள்.:– என்று மெனவு மொடுவும்** – என்றும், எனவும், ஒடு ... ... இம் மூன்று இடைச்சொல்லும், **ஒரோவழி நின்றும்** – எண்ணின்கண் ஓரிடத்தே நின்றனவேனும், **பிரிந்தெண் பொருடொறு நேரும்**– அது பிரிந்து எண்ணும் பொருடொறுஞ் செல்லும், **எ–று.**

**உ–ம்.:–**

**"வினைபகை யென்றிரண்டி னெச்சம்"** (குறள்.675)
**"பகைபாவ மச்சம் பழியென நான்கு**
**மிகவாவா மில்லிறப்பான் கண்"** (குறள்.146),
**"பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து**
**மிருடீர எண்ணிச் செயல்"** (குறள்.674)

என இரண்டிடத்தும் மூன்றிடத்தும் நான்கிடத்தும் என்றும், எனவும் ஒடுவும் எண்ணி வந்தன. பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** சிலவெண்ணிடைச் சொற்களுக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது,

**இ–ள்.:– என்றும்**–என்றென்பதும், **எனவும்** – எனவென்பதும், **ஒடுவும்** – ஒடுவென்பதும், **ஒரோவழிநின்றும்** – பொருடோறு நிற்றலேயன்றி ஓரிடத்திலே நின்றும், **பிரிந்து** – பிரிந்து, **எண்** – எண்ணப்படுகின்ற, **பொருடோறும்**– பொருள்தோறும், **நேரும்** – பொருந்தும், **எ–று.**

**வ–று.:–**

வினைபகை யென்றிரண்டு, பகைபாவமச்சம் பழியென நான்கும், பொருள்கருவிகாலம் வினையிடனொடைந்தும், எனவரும் இவற்றுள், 'வினை யென்று பகையென்று' **எனக்கூட்டியெண்ணுக,**

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

என்றும் எனவும் ஒடுவும் ஒரோவிடத்து நின்று எண்ணுப் பொருண்மைக்கட் பிரிந்து சென்று ஒன்றுதலு முண்டெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

என்று மெனவு மொடுவு மொரோவழி

நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.

(என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி நின்றும் பிரிந்து எண பொருள்தொறும் நேரும்.)

**இ—ள்.:—** என்று என ஒடுவென்னும் இம்மூன்றிடைச்சொற்களும் ஓரிடத்து நின்றும் பிரிந்து எண்ணப்படும் பொருடோறுஞ் சென்று பொருந்தும். **எ—று.**

**வ—று.;—**

(1) "வினைபகை யென்றிரண்டி னெச்சநினையுங்காற்—றீயெச்சம் போலத்தெறும்." இங்கே என்றென்பது, வினை யென்று பகையென்று என நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(2) "பகைபாவ மச்சம் பழியென நான்கு—மிகலாவா மில்லிறப்பான் கண்." இங்கே எனவென்பது, பகையெனப் பாவமென அச்ச மெனப் பழியென, என்றுநின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(3) "பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து—மிருடீர வெண்ணிச் செயல்". இங்கே ஒடுவென்பதுமூ பொருளொடு கருலியொடு காலத்தொடு வினையொடு இடனொடு என நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

இச்சூத்திரக்கருத்து யாது?

எனையவெண்ணிடைச்சொற்கள் எண்ணும் பொருள்தோறு நிற்கும். இவை மூன்றும் ஒரோவழி நின்றும் எண்ணும் பொருடோறுஞ் சென்று பொருள் தரும் என்பது கருத்து.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** எண்ணிடைச் சொற்களுட் சிலவற்றிற்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி யுணர்த்திற்று.

**இ—ள்.:—** (இந்த மூன்றெண்ணிடைச் சொற்களும் பொருள்தோறும் நிற்பதுமன்றி) ஓரிடத்து நின்றும் பிரிந்து எண்ணப்படும் பொருள்தோறும் போய்ப் பொருந்து மென்றவாறு,

**வ—று.:—**

'வினைபகை யென்றிரண்டி னெச்சம்' எனவும், 'பகைபாவ மச்சம் பழியென நான்கும்' எனவும், 'பொருள்கருவி காலம்

வினையிடனோ டைந்தும்' எனவும் வரும். இவை யொரோரிடத்து நின்று பொருள்தோறும் நேர்தலாவது, 'முறையே வினையென்று பகையென்றிரண்டினெச்சம்' எனவும் 'பகையெனப் பாவமென அச்சமெனப் பழியென' எனவும் 'பொருளோடு கருவியோடு காலத்தோடு வினையோடு இடத்தோடு' எனவும் போய்ப் பொருந்துதல்.

இந்த மூன்றெண்ணிற்கும் இவ்வாறெடுத் தோதவே மற்றை யெண்ணிடைச் சொற்களுக்கு எண்ணும் பொருள் தோறு நிற்றலே சிறந்தன வென்பதும் ஓரிடத்து நின்று பிரித்தல் வலிந்து பற்றி பிரித்தலென்பதும், அது தீவகமென்னும் அணியிலக்கண மாதலால் இங்கே பொருந்தா தென்பதுமாயிற்று.

**"என்று மெனவு மொடுவுந் தோன்றி**
**யொன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே என"**

ஆசிரியர் தொல்காப்பியனார் கூறினார் என்க என்று மெனவு மொடுவு நேரும் என முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– என்றும் எனவும் ஒடுவும்** – என்று என ஒடு என்னும் இம்மூன்று எண்ணிடைச் சொற்களும், **ஓரோ வழி நின்றும்** – (எண்ணப்படும் பொருள் தோறும் நில்லாமல்) ஓரிடத்தில் நின்றும், **பிரிந்து** – (தான் நின்ற விடத்தினின்றும்) பிரிந்து, **எண் பொருள்தோறும்** – எண்ணப்படுகின்ற பொருள்கள்தோறும், **நேரும்** – போய்ப் பொருந்தும்.

**உ–ம் :–**

(1) "வினைபகை யென்றிரண்டு"
(2) "பகை பாவ மச்சம் பழியென நான்கு"
(3) "பொருள் கருவி காலம் வினை யிடனோ டைந்தும்"

குறிப்பு :–

இவற்றுள் வினையென்று பகையென்று எனவும், பகையெனப் பாவமென அச்சமெனப் பழியென எனவும், பொருளொடு கருவியொடு காலமொடு வினையொடு இடனொடு எனவும் எண்ணிடைச் சொல் நின்றவிடத்துப் பிரிந்து பிறவிடத்துஞ் சென்று பொருந்துதல் காண்க.

இம்மூன்றெண்ணிற்கும் இவ்வாறெடுத்தோதவே, மற்றை எண்ணிடைச் சொற்களுக்கு எண்ணும் பொருள்தோறும் நிற்றலே சிறப்பென்பதும், ஓரிடத்தினின்று பிரித்தல் வலிந்தது பற்றியீர்த்த லென்பதும், அது "தீவகம்' என்னும் அணியிலக்கணமாதலால் இங்குப் பொருந்தா தென்பதும் பெற்றாம்.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:— என்றும் எனவும் ஒடுவும்** — என்று என ஒடுவென்னும் இம் மூன்றிடைச்சொற்களும், **ஒரோவழி நின்றும் பிரிந்து எண்பொருடொறும் நேரும்** — எண்ணப்படும் பொருடோறு நிற்றலே யன்றி ஓரிடத்து நின்றும் பிரிந்து எண்ணப்படும் பொருடோறுஞ் சென்று பொருந்தும், எ — று.

வ—று.:—

(1) **"வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்—றீயெச்சம் போலத் தெறும்."** இங்கே என்றென்பது, வினையென்று பகையென்று என நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(2) **"பகைபாவ மச்சம் பழியென நான்கு—மிகவாவா மில்லிறப்பான் கண்."** இங்கே எனவென்பது, பகையெனப் பாவமென அச்சமெனப் பழியென, என்று நின்றவிடத்துப் பிரிந்து பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(3) **"பொருள் கருவி காலம் வினையிடனொ டைந்து—மிருடீர வெண்ணிச் செயல்."** இங்கே ஒடுவென்பது, பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடனொடு என நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ — ள்.;— என்றும் எனவும் ஒடுவும்** — என்று என ஒடுவென்னும் இம்மூன்றிடைச் சொற்களும், — **ஒரே வழி நின்றும் பிரிந்து எண் பொருடொறும் நேரும்** — எண்ணப்படும் பொருடோறு நிற்றலேயன்றி ஓரிடத்து நின்றும் பிரிந்து எண்ணப்படும் பொருடோறுஞ் சென்று பொருந்தும். எ — று.

வ—று.;—

(1) "வினை பகையென்றி ரண்டினெச்ச நினையுங்காற் — றீயெச்சம் போலத்தெறும்." இங்கே என்றென்பது, வினையென்று பகையென்று என நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(2) 'பகைபாவமச்சம் பழியென நான்கு — மிகவா மில்லிறப்பான்கண்' இங்கே எனவென்பது, பகையெனப் பாவமென அச்சமெனப் பழியென, என்று நின்றவிடத்துப் பிரிந்து, பிற வழியுஞ்சென்று பொருந்தியது.

(3) "பொருள்கருவி காலம்வினை யிடனொடைந்து — மிருடீரவெண்ணிச் செயல்." இங்கே ஒடுவென்பது, பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடனொடு என நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ்சென்று பொருந்தியது.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– என்றும் எனவும் ஒடுவும்** – என்று என ஒடு என்னும் இம்மூன்று எண்ணிடைச் சொற்களும், **ஓரோவழி நின்றும்**–(எண்ணப்படும் பொருள்தோறும் நில்லாமல்) ஓரிடத்தில் நின்றும், **பிரிந்து** – (தான் நின்ற இடத்தினின்றும்) பிரிந்து, **எண்பொருள் தொறும்** – எண்ணப்படுகின்ற பொருள்கள் தோறும், **நேரும்** – போய்ப்பொருந்தும்; எ–று.

உ–ம்.:

**1. "வினை பகை யென்று இரண்டு"**

**2. "பகை பாவ மச்சம் பழி யென நான்கும்"**

**3. "பொருள் கருவி காலம் வினை யிடனொடு ஐந்தும்"**

இவற்றுள் – '**வினையென்று, பகையென்று**' எனவும்; '**பகை யென, பாவமென, அச்சமென, பழியென**' யெனவும்; '**பொரு ளொடு, கருவியொடு, காலமொடு, வினையொடு இடனொடு**' எனவும் எண்ணிடைச்சொல் நின்றவிடத்துப் பிரிந்து பிறவிடத்தும் சென்று பொருந்துதல் காண்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.;– என்றும் எனவும் ஒடுவும்** – என்று என ஒடுவென்னும் இம் மூன்றிடைச்சொற்களும், **ஓரோவழி நின்றும் பிரிந்து எண்பொருடொறும் நேரும்** – எண்ணப்படும் பொருடோறு நிற்றலேயன்றி ஓரிடத்து நின்றும் பிரிந்து எண்ணப்படும் பொருடோறுஞ் சென்று பொருந்தும். எ–று.

உ–ம்.:–

(1) "வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால் – தீயெச்சம் போலத் தெறும" – இங்கே என்றென்பது, வினையென்று பகையென்று என நின்றவிடத்துப் பிரிந்து பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(2) "பகைபாவ மச்சம் பழியென நான்கு – மிகவாவா மில் லிறப்பான் கண்" – இங்கே எனவென்பது, பகையெனப் பாவமென அச்சமெனப் பழியென, என்று நின்றவிடத்துப் பிரிந்து பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(3) "பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து —மிருடீர வெண்ணிச் செயல்" – இங்கே ஒடுவென்பது, பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடனொடு என, நின்றவிடத்துப் பிரிந்து பிறவிழயுஞ் சென்று பொருந்தியது.

## கா. நமச்சிவாய முதலியார்

**என்றும்** – என்று என்பதும், **எனவும்**– என என்பதும், **ஒடுவும்** – ஒடு என்பதும், **ஒரோவழி நின்றும்** – (பொருள்தோறும் நிற்றலேயன்றி) ஒரிடத்திலே நின்றும், **பிரிந்து** – பிரிந்து, **எண்** – எண்ணப்படுகின்ற, **பொருள் தொறும்** – பொருள்தோறும், **நேரும்** – பொருந்தும்.

**உதாரணம்**

வினைபகை **யென்**றிரண்டின் எச்சம் – என்று
பகைபாவம் அச்சம் பழி**யென** நான்கும் – என
பொருள்கருவி காலம் வினையிட**னொ** டைந்தும் – ஒடு

இவற்றுள், வினையென்று பயையென்று எனவும்; பகையென பாவமென, அச்சமென, பழியென எனவும்; பொருளோடு, கருவியொடு, காலமொடு, வினையொடு, இடனொடு எனவும் கூட்டி எண்ணுக.

## மோசகு பொன்னையா

என்று, என, ஒடு என்னும் இம்மூன்று எண்ணிடைச் சொற்களும் எண்ணப்படும் பொருள்கள் தோறும் நில்லாமல் ஒரிடத்தில் நிற்பினும், நின்ற இடத்தில் நின்றே, எண்ணப்படும் பொருட்கள்தோறும் சென்று பொருந்தும் **எ–று.**

**எ–டு;–**

*.வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால்*
*தீயெச்சம் போலத் தெறும்,*

*2.பகைபாவ மச்சம் பழியென நான்கும்*
*இகவாவா மில்லிறப்பான் கண்.*

*3.பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும்*
*இருடீர வெண்ணிச் செயல்.*

இம்மூன்றையும் இவர் அமைத்தது போன்றே தொல்காப்பியரும்,

**என்று மெனவு மொடுவுந் தோன்றி**

**யொன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே,**

என்ற அதிகாரப் புறனடை நூற்பாவால் அமைத்து, ஏனைய பற்றி ஏதுங் கூறாராயினர் ஆதலின், ஏனைய எண்ணும் பொருள் தோறும் நிற்பதே விதியெனவும், இவ்வாறு அவைவரின், அணிநலங்கருதிச் செய்யுட்கண் புலவர் அமைத்தார் எனக் கொண்டு அவற்றைத் தீவகம் என அடக்குதல் மரபு எனவுங் கொள்க.

## 429. வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன.

**வினையொடு வரினும் எண் இனைய ஏற்பன.**

vinaiyotu varinum en inaiya ērpana.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The conjunctive particles**

The conjunctive particles follow the same rules when used with verbs as when used with nouns.

### ஒப்புமைப் பகுதி

**வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா**
**நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே**

**(தொல். சொல்.: 293)**

***வினையொடு வரினுமெண் ணினைய ஏற்பன***

**(இ.வி.: 262)**

### மயிலை நாதர்

எ—ன், எண்வகை யெண்கட்கும் ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.:– வினையொடு கூடி வருமிடத்தும் எண்கள் மேற்சொன்னவாறே தொகைபெற்றும் பெறாதும் வருவனவாம், எ—று.

'ஏற்பன' எனவே என்றும் எனவும் ஒடுவும் அருகியல்லது வாராவெனக் கொள்க.

வ—று.:–

'அறுத்தும் குறைத்தும் சுகிர்ந்தும் வகிர்ந்துமிட்டா'ரென உம்மையெண் வினையொடு வந்தது. 'அறுத்தெனக் குறைத்தெனச் சுகிர்ந்தென வகிர்ந்தெனத் தந்தா'ரென எனவெண் வினையொடு வந்தது. "மண்டில மழுங்க மலைநிறங் கிளர, வண்டின [1]மலர்பரந் தூத மிசையே, கண்டற் [2]கானற் குருகின மொலிப்ப" (அகநா. 260) என வினைச்செவ்வெண் வந்தவாறு. 'சாத்தன்வந்தான், கொற்றன் வந்தான்; இருவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்த'தென அது தொகைபெற்று வந்தவாறு காண்க. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

### சங்கர நமச்சிவாயர்

எ—னின், மேல் பெயரோடு வந்த எண்ணிடைச்சொற்கள் வினையோடு வருமாறு உணர் –ற்று.

**இ—ள்.:**— எண்ணிடைச் சொற்கள் வினையோடு வரினும் மேல் பெயரோடு வந்தாற்போலும் ஏற்பன, **எ—று.**

**'ஏற்பன'** எனவே வினையோடு ஏலா எண் வருதலும் தொகை பெறுதலும் இல்லை என்க.

**வ—று.:**

**"மண்டில மழுங்க மலைநிறம் கிளர**
**வண்டின மலர்பரந் தூத மிசையே**
**கண்டற் கானம் குருகினம் ஒலிப்ப"**
என்பது செவ்வெண்.

**'கற்றும் கேட்டும் கற்பனை கடந்தான்'** என்பது உம்மையெண்.

**'உண்ண என்று உடுக்க என்று பூச**
**என்று முடிக்க என்று வந்தான்'** என்பது என்றெண்.

**'உண்ண என உடுக்க எனப் பூச என முடிக்க என வந்தான்'** என்பது எனவெண்.

**'உண்ண உடுக்கப் பூச முடிக்க என்று வந்தான்',**

**'உண்ண உடுக்கப் பூச முடிக்க என வந்தான்',**

**"நன்னிதி பெறுக நாடொறும் வாழ்கவென்**
**றுன்னுமிவ் வேட்கை ஒழிந்தனர் இலரே"**

என்பன, என்றும் எனவும் ஒரோவழி நின்றும் பிரிந்தன. பிறவற்றுள்ளும் ஏற்பன வந்தவழிக் காண்க.

சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான் இருவரும் வந்தமையால் கலியாணம் பொலிந்தது என வினைச்செவ்வெண் தொகை பெற்றது என்பாரும் உளர். தொகைச்சொல் பெயராதலின் அறுவகைப் பெயர்களோடு பொருந்தி இருபெயரொட்டாம் அன்றி வினையோடு பொருந்தாமையானும், இங்ஙனம் இருவர் என்னும் தொகை சாத்தன் கொற்றனாகிய இருவர் எனப் பெயர்த்தொகை யாதலானும் அது பொருந்தாது என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** எண் வகை எண்கட்கும் ஆவதோர் இயல்பு கூறுகின்றது.

**இ—ள்.:— வினையொடு வரினும்** — எண் வகை எண்களும் வினையொடு கூடி வருமிடத்து, **எண்ணினைய** — மேற் சொன்னவாறே பெற்றும் பெறாதும் வருவனவாம், **ஏற்பன** — அவ்வினைகள் ஏற்பன, **எ—று.**

'... ... ... **தெனத் தந்தாரென'** எனவென் எண் வினையொடு வந்தது.

**"மண்டில மழுங்க ... ... வண்டின மலர்பரந் தூத ... ... கண்டற்கானற் குருகின மொலிப்ப"** எனச் செவ்வெண் வந்தவாறு.

**சாத்தன் வந்தான்; கொற்றன் வந்தான்; இருவரும் வந்ததாற் கலியாணம் பொலிந்தது** எனத் தொகை பெற்றவாறு காண்க.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது**, முன்பெயரோடு வந்த வெண்ணிடைச் சொற்கள் வினையோடு வருமாறு உணர்த்துகின்றது,

**இ–ள்.:– எண்**–எண்ணிடைச்சொற்கள், **வினையொடுவரினும்**–வினையோடு வந்தாலும், **இனைய** – பெயரோடுவரும்போது சொல்லப்பட்ட இவ்விலக் கணங்களையெல்லாம், **ஏற்பன**–ஏற்கும், **எ–று.**

**வ–று.:–**

'மயிலாடக் குயில்வாட மாமுகிலெழுந்தது' – செவ்வெண். 'கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தார்', உம்மையெண். 'உண்ண வென்றுடுக்க வென்றுவந்தான்' என்றெண். 'உண்ண வுடுக்க வென்று வந்தான்', பிரிந்து கூடுமெண்; என வரும். மற்றைவையு மிப்படியே வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

எண்ணிடைச்சொற்கள் வினைச்சொற்கண்ணும் வருமெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

வினையொடு வரி னுமெண் ணினைய வேற்பன.
(வினையொடு வரினும் எண் இனைய ஏற்பன.)

**இ–ள்.:–** வினையொடு வந்துநிற்பினும் எண்ணிடைச்சொற்கள் முற்கூறிய இயல்பினவாய்த் தொகைபெற்றும் பெறாதும் வருவனவாம் பொருந்துவன. **எ–று.**

**வ–று.:–**

மயிலாடக் குயில்வாட மாமுதிலெழுந்தது. இது செவ்வெண்.
கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தார். இது உம்மையெண்.
உண்ணவென் றுடுக்கவென்று வந்தான். இது எனவேண்.
உண்ணவுடுக்கவென்றுவந்தான். இது பிரிந்து கூடுமெண்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, எண்ணிடைச்சொற்கள் வினையகத்தும் வருமென **மாட்டெறிந்தது,** மாட்டெறிந்தொழுகற்குப் பதப்பொருளோடு உதாரண மேற்கூறப்பட்டது,

**இ–ள்.: ஏற்பனவெண்**–பொருந்துவனவாகிய எண்ணிடைச் சொற்கள், **வினையொடு வரினும் இனைய** – மேற் பெயரொடு வந்த அவைபோலு மென்றவாறு.

**'ஏற்பன'** வெனவே பெயரெச்சங்க ளெண்ணிடைச் சொற்களை யேலாவென்பதும், வினேயோடு பொருந்தாத எண்ணிடைச்சொல் வருதலுங் தொகை பெறுதலும் இல்லை யென்பது மாயிற்று.

வ—று.:

**"மண்டில மழுங்க மலைநிறங் கிளர**
**வண்டின மலர்பரந் தூத மிசையே**
**கண்டலங் கானங் குருகின மொலிப்ப"**

என்பது வினையொடு வந்த செவ்வெண். மழுங்கவுங் கிளரவும் ஊதவுங் குருகினம் ஒலிப்பவும் என உம்மை யிடைச்சொல் தொக்கு நின்றது, 'கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தான்' என்பது உம்மைஎண். 'உண்ணவென் றுடுக்க வென்று பூசவென்று முடிக்கவென்று வந்தான்', என்பது என்று எண். 'உண்ணவென உடுக்கவென' என்பது என எண், 'உண்ண உடுக்கப் பூச முடிக்கவென்று வந்தான்', 'உண்ண உடுக்கப் பூசமுடிக்கவென வந்தான்',

**"நன்னிதி பெருக நாடொறும்**
**வாழ்க வென் றுன்னுமிவ்**
**வேட்கை யொழிந்தன ரிலரே"**

என்பன என்றும், எனவும் ஒரோவழி நின்று பிரிந்து எண் பொருள்தோறும் பொருந்தின. பிறவற்றுள் ஏற்பனவும், ஆடல்பாடலொடு வந்தான் எனவும், 'ஆதரித்தவன் பயந்தீர்த்தவ னுதவி செய்தவனொடு பகைத்தான்' எனவும் தொழிற் பெயர் வினையாலணையும் பெயரொடு, **ஒடு** எண் பிரிந்தொன்றுதலுங் கொள்க.

**வினையொடு நிலையினு மெண்ணு நிலை திரியா**
**நினையல் வேண்டு மவற்றவற் றியல்பே**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :—** **ஏற்பன** — பொருந்துவனவாகிய, **எண்** — சில எண்ணிடைச் சொற்கள், **வினையொடுவரினும்** — வினைச்சொல்லோடு வந்தாலும், **இனைய** — (பெயரோடு வந்த) இவை போல்வனவாம்.

**உதாரணம் :**

| | | |
|---|---|---|
| மயிலாடக் குயில்வாட மாமுகி லெழுந்தது | — செவ்வெண் | |
| கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தார் — | உம்மை எண் | |
| உண்ணவென்று உடுக்கவென்று வந்தான் | — என்றெண் | வினையொடு வந்தன. |
| உண்ணவென உடுக்கவென வந்தான் | — என வெண் | |
| உண்ண உடுக்கவென்று வந்தான் | — பிரிந்து கூடும் எண். | |

**குறிப்பு :—**

'ஏற்பன' எனவே, பெயரெச்சங்கள் எண்ணிடைச் சொற்களை யேலாவென்பதும், வினையொடு பொருந்த எண்ணிடைச் சொல் வருதலும், தொகை பெறுதுலும்இல்லையென்பதும் பெறப்படும்.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **ஏற்பன எண்** – பொருந்துவனவாகிய எண்ணிடைச் சொற்கள், **வினையொடு வரினும் இனைய** – வினையோடு வரினும் மேற்பெயரோடு வந்தாற்போலும், எ – று.

வ–று.:–

**'மயிலாடக் குயில் வாடமாமுகிலெழுந்தது'**, இது செவ்வெண்.
**'கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தார்'**, இது உம்மையெண்.
**'உண்ணவென்றுடுக்கவென்று வந்தான்'**, இது என்றெண்.
**'உண்ணவெனவுடுக்கவென வந்தான்'**, இது எனவெண்.
**'உண்ணவுடுக்கவென்று வந்தான்'**, இது பிரிந்து கூடுமெண்.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். **ஏற்பன எண்** – பொருந்துவனவாகிய எண்ணிடைச் சொற்கள், – **வினையொடு வரினும் இனைய** – வினையொடு வரினும் மேற்பெயரோடு வந்தாற்போலும். எ–று.

வ–று.:–

மயிலாடக் குயில்வாட மாமுகிலெழுந்தது. இது செவ்வெண்,
கற்றுங்கேட்டுங் கற்பனை கடந்தார். இது உம்மை பெண்.
உண்ணவென்றுடுக்கவென்று வந்தான். இது என்றெண்
உண்ணவென உடுக்கவெனவந்தான் இது எனவெண்.
உண்ணவுடுக்கவென்று வந்தான். இது பிரிந்து கூடுமெண்.

## வை. மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– **ஏற்பன** – பொருந்துவனவாகிய, **எண்** – சில எண்ணிடைச் சொற்கள், **வினையொடு வரினும்** – வினைச் சொல்லோடு வந்தாலும், **இனைய** – (பெயரோடு வந்த) இவை போல்வனவாம்; எ–று.

உ–ம்.:–

**'மயிலாடக் குயில்வாட மாமுகில் எழுந்தது'**–செவ்வெண்,
**'கற்றும் கேட்டும் கற்பனை கடந்தார்'** – உம்மை
**'உண்ணவென்று உடுக்க வென்று வந்தான்'** –என்று
**'உண்ணவென உடுக்கவென வந்தான்'** – என

**'உண்ண உடுக்க வென்று வந்தான்'**–பிரிந்து கூடும் எண் – வினையோடு வந்தன.

## பவானந்தம் பிள்ளை

**இ-ள்.:- ஏற்பன எண்** - பொருந்துவனவாகிய எண்ணிடைச்சொட்கள், **வினையொடு வரினும் இனைண** - வினையோடு வரினும் மேற் பெயரோடு வந்தாற்போலும். எ-று.

உ-ம்.:-

மயிலாடக் குயில் வாட மாமுகி லெழுந்தது - இது செவ்வெண்.

கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தார் - இது உம்மையெண்.
உண்ணவென் றுடுக்கவென்று வந்தான் - இது என்றெண்.
உண்ணவென வுடுக்கவென வந்தான் - இது எனவெண்.
உண்ணவுடுக்க வென்று வந்தான் - இது பிரிந்து கூடுமெண்.

## கா. நமச்சிவாய முதலியார்

**எண்** - எண்ணிடைச் சொற்கள், **வினையொடு வரினும்** - வினையோடு வந்தாலும், **இனைய-** (பெயரோடு வரும்போது சொல்லப்பட்ட) இவ்விலக்கணங்களை யெல்லாம்; **ஏற்பன** - ஏற்கத்தக்கனவாம்.

**உதாரணம்**

மயிலாடக் குயில்வாட மாமுகில் எழுந்தது - செவ்வெண்
கற்றும் கேட்கும் கற்பனை கடந்தார் - உம்மையெண்
உண்ணவென்று உடுக்கவென்று வந்தான் - என்றெண்
உண்ணவென உடுக்கவென வந்தான் - எனவெண்
உண்ண உடுக்கவென்று வந்தான் - பிரிந்துகூடுமெண்.

## மோசசு பொன்னையா

பொருந்துவனவாகிய சில எண்ணிடைச் சொற்கள் வினைச்சொல்லோடு வந்தாலும், பெயரோடு வந்தவை போல்வனவாம் எ-று.

ஏற்பன என்றதனால் என, ஒடு என்பன அருகியே வரும் எனக் கொள்க.

எ-டு.

1.மயிலாடக் குயில்பாட மாமுகில் எழுந்தது
செவ்வெண்
கற்றுங் கேட்டுங் கல்வியிற் சிறந்தார் உம்
உண்ணவென்று உடுக்கவென்று வந்தான்
என்று
உண்ணவென உடுக்கவென வந்தான் என
உண்ணவென்றா உடுக்கவென்றா வந்தனர்
இவரே என்றா பொருட்கள் தோறும் நின்றன

*2. உண்ண உடுக்கப் பூச முடிக்க வென வந்தார்–என்று*
*நன்னிதி பெருக நாடொறும் வாழ்கவென்று*
*உன்னுமிவ் வேட்கை யொழிந்தன ரிலரே*
*–ஒரோவழி நின்று பிரிந்தன.*

தொல்காப்பியர்,

**வினையொடு நிலையினு மெண்ணுநிலை திரியா**
**நினையல் வேண்டு மவற்றவற் றியல்பே,**

என்றார், சேனாவரையர் அதன் உரையில், "நினையல் வேண்டு மவற்றவற் றியல்பே' யென்றதனான், எண்ணிடைச் சொல் முற்றுச் சொல்லும் பெயரெச்சமும் பற்றிவாரா தென்பதூஉம், வினையெச்சத்தோடும் ஏற்பன வல்லது வாராவென்பதூஉம், ஆண்டுத் தொகை பெறுதல் சிறுபான்மை யென்பதூஉங் கொள்க' என உரைத்ததையும் அறிக. "

**(11)**

## 430. விழைவே கால மொழியிசை தில்லே

**விழைவே காலம் ஒழியிசை தில்லே**

viḷaivē kālam oḷiyisai ṭillē

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The particle 'til'**

(The particle) til denotes desire, time and ellipsis of counterpart.

### ஒப்புமைப் பகுதி

**விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்று**
**அம்மூன் றென்ப தில்லைச் சொல்லே**

**(தொல். சொல்.: 253)**

**............. தில்லை பருவம் விழைவு**
**நயனி லொழியிசையு நாட்டு**

**(நேமி.: 77: 3–4)**

**விழைவே காலம் ஒழியிசை தில்லே**

**(இ.வி.: 264)**

**விழைவே கால மொழியிசை தில்லே**

**(மு.வீ.டு 646)**

**............ ஒழிவு காலம் விழைவது மூன்றும் தில்லாம்**

**(சுவாமி.: 55:4)**

## மயிலை நாதர்

எ—ன், தில்லென்னும் இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.:— இம்மூன்று பொருட்கண்ணும் வரும், தில்லென்னு மிடைச்ளெசால், எ — று.

வ—று.:—

**"வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப், பெறுகதி லம்ம யானே"** (குறுந். 14) ; பெறுவேனாகவென இது விழைவின்கண் வந்தது. **"பெற்றாங் கறிகதி லம்மவிவ் வூரே"** (குறுந்.14.) இது பெற்றபின் அறிவதாக எனக் காலத்தின்கண் வந்தது. **"வருகதி லம்ம வெஞ் சேரி சேர"** (அகநா. 276); இது வந்தால், இன்னதொன்று செய்வேனென்னும் சொல்லொழிய வந்தமையின் , ஒழியிசைக்கண் வந்தது

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், தில் என்னும் இடைச்சொல் இலக்கணம் **உணர்—ற்று.**

இ—ள்.:— இம்மூன்று பொருளையும் தரும் தில் என்னும் இடைச்சொல், எ—று.

வ—று.:—

**"வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி**
**அரிவையைப்**
**பெறுகதில் அம்ம யானே"**

என்பது பெறுதல் வேட்கையை உணர்த்தலின் விழைவு.

**"பெற்றாங் கறிகதில் அம்மஇவ் வூரே"**

என்பது பெற்றகாலத்து அறிக எனக் காலத்தை உணர்த்தலின் காலம்.

**"வருகதில் லம்மவெஞ் சேரிசேர"**

என்பது வந்தால் ஒன்று செய்வல் என்னும் சொல் ஒழிந்து நிற்றலின் ஒழியிசை.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், தில்லென்னும் இடைச்சொல் வருமிடம் கூறுகின்றது.

**இ—ள்.:— விழைவே காலம்** — விழைவுப் பொருண்மைக் கண்ணும் காலப் பொருண்மைக்கண்ணும், **ஒழியிசை** — ஒழியிசைப் பொருண்மைக் கண்ணும், **தில்லே**—இம்மூன்று பொருண்மைக்கண்ணும் வரும் தில்லென்னும் இடைச்சொல், எ—று.

உ—ம்.:—

**"சின்மொழி யரிவையைப் பெறுகதி லம்ம யானே"** (குறு.14)

எனப் பெறுவேனாகக் கடவது என **விழைவின்கண்** வந்தது.

**"பெற்றாங் கறிகதி லம்மவிவ் வூரே"** (குறு.14) என இது பெற்ற பின் அறிவதாக எனக் **காலத்தின்கண்** வந்தது.

**"வருகதி லம்மவெஞ் சேரி சேர"** (அகம்.276) என வந்தால் இன்னதொான்று செய்வேன் என்னும் சொல்லொழிய வந்தமையால் **ஒழியிசைக்கண்** வந்தது.

## விசாகப் பெருமாளையர்

**இது,** தில்லென்னு மிடைச்சொல் லிலக்கண முணர்த்துகின்றது,

**இ–ள்.:** **விழைவு** – ஆசையும், **காலம்** – காலமும், **ஒழியிசை** – ஒழிந்த சொல்லும் ஆகிய மூன்று பொருளையுந்தரும், **தில்** – தில்லென்னு மிடைச்சொல், **எ–று.**

**வ–று.:–**

'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப் பெறுகதில்லம்ம யானே', என்பது, அரிவையைப் பெறுதல் வேட்கையை யுணர்த்தலால், விழைவு. 'பெற்றாங்கறிக தில்லம்மவிவ்வூரே', என்பது பெற்றகாலத்தறிக எனக் காலத்தை யுணத்தலாற், **காலம். 'வருகதில்லம்ம வெஞ்சேரிசேர'** என்பது வந்தாலொன்று செய்வேனென்னும் ஒழிந்த சொற்பொருளை யுணர்த்தலால், **ஒழியிசை,**

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

தில்லென்னுமிடைச்சொல் எத்தனை பொருண்மைக்கண் வரும்?

விழைவே கால மொழியிசை தில்லே.

(விழைவே காலம் ஒழியிசை தில்லை.)

**இ–ள்.:–** ஆசையுங் காலமும் ஒழிந்த சொல்லுமாகிய மூன்றுபொருளையுந் தருந் தில்லென்னு மிடைச்சொல். **எ–று.**

**வ–று.:–**

(1) "வார்ந்தி லங்குவை யெயிற்றுச் சின்மொழி–யரிவையைப் பெறுகதில் லம்ம யானே" இங்கே அரிவையைப் பெறுதல் ஆசையை யுணர்த்தலால் விழைவு.

(2) "பெற்றாங் கறிகதில் லம்மலிவ் வூரே." இங்கே பெற்றகாலத்தறிக எனக் காலத்தையுணர்த்தலாற் காலம்.

(3) "வருகதில் லம்மவெஞ் சேரி சேர." இங்கே வந்தால் ஒன்று செய்வேன் என்னும் ஒழிந்த சொற்பொருளையுணர்த்தலால் ஒழியிசை.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** தில் என்னுமிடைச்சொல் லிலக்கண முணர்த்திற்று.

**இ—ள்.:—** ஆசையுங் காலமும் ஒழியிசையுமாகிய இம்மூன்று பொருளையுந் தரும், தில்லென்னுமிடைச்சொல், எ—று.

**வ—று.:—**

'அரிவையைப் பெறுகதில் லம்ம யானே', பெறவேண்டு மென்கின்ற ஆசையை யுணர்த்துதலால் – விழைவு; 'பெற்றாங் கறிகதில் லம்மவிவ்வூரே' பெற்ற காலத்தறிக வெனக் காலத்தை யுணர்த்துதலாற் – காலம்; 'வருகதில் லம்ம வெஞ்சேரி சேர' என்பது வந்தால் இன்னது செய்வேனென்னுஞ் சொல் ஒழிந்து நிற்றலால் ஒழியிசை. இனி **யுரையிற்கோடலால்,** இத் தில்லென்னுமிடைச்சொல் பெரும்பாலும் அம்ம வென்னும் உரையசை யிடைச் சொல்லோடு கூடி நின்றே இப்பொருள்களை யுணர்த்து மெனக்கொள்க.

**"விழைவே கால மொழியிசைக் கிளவியென்**
**றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க. இச்சூத்திரத்தில் தரும் என்னும் முற்று வினைச்சொல் குறைந்து நின்றது அதைப் பயனிலையாக்கித்–தில் தருமென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– தில் –** 'தில்' என்னும் இடைச்சொல், **விழைவே –** ஆசையும் **காலம் –** காலமும், **ஒழியிசை –** ஒழிந்த சொல்லுமாகிய மூன்று பொருள்தரும்.

**உதாரணம் :**

1. "அரிவையைப் பெறுகதில் லம்மயானே" இதில், அரிவையைப் (பெண்ணைப்) பெறவேண்டுமென்கிற ஆசையை உணர்த்துதலால், விழைவு.

2. "பெற்றாங் கறிகதில் லம்மவிவ்வூரே" இதில், பெற்ற காலத்தில் அறிக எனக் காலத்தை உணர்த்துதலால், காலம்.

3. "வருக தில்லம்ம எஞ்சேரிசேர" – இதில், வந்தால் இன்னது செய்வேன் என்னும் ஒழிந்தசொல்லை உணர்த்துதலால், ஒழியிசை.

குறிப்பு :–

இனி, **உரையிற்கோடலால்** – இந்தத் 'தில்' என்னும் இடைச்சொல் பெரும்பாலும் 'அம்ம' என்னும் உரையசை

யிடைச்சொல்லோடு கூடிநின்றே இப்பொருள்களை உணர்த்துமெனக் கொள்க

பெற்ற காலத்து அறிக எனக் காலத்தை யுணர்த்தலால், காலம்.

3. வருகதில் வம்மவெஞ் சேரி சேர,

வந்தா லெபன்று, செய்வே னென்னும் ஒழிந்த சொற்பொருளை யுணர்த்தலால், ஒழியிசை.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– விழைவு காலம் ஒழியிசை தில்** – ஆசையுங் காலமும் ஒழிந்த சொல்லுமாகிய மூன்று பொருளையுந் தருந் தில்லென்னு மிடைச்சொல், **எ–று.**

**வ–று.:–**

(1) **“வார்ந்தி லங்குவை யெயிற்றுச் சின்மொழி–யரிவையைப் பெறுகதில் லம்ம யானே”** இங்கே அரிவையைப் பெறுதல் வேட்கையை யுணர்த்தலால்; **விழைவு.**

(2) **“பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே”** இங்கே பெற்ற காலத்தறிக எனக் காலத்தை யுணர்த்தலாற்; **காலம்.**

(3) **“வருகதில் லம்மவெஞ் சேரி சேர”** இங்கே வந்தால் ஒன்று செய்வேன் என்னும் ஒழிந்த சொற்பொருளை யுணர்த்தலால்; ஒழியிசை.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– விழைவு காலம் ஒழியிசை தில்** – ஆசையுங் காலமும் ஒழிந்தசொல்லுமாகிய மூன்று பொருளையுந் தருந் தில்லென்னுமிடைச்சொல்.

விழைவின்கண் வருந் தில் என்னுஞ்சொல் தன்மையிடத்தல்லது வாராது என்பது 'விழைவின்றில்லை தன்னிடத்தியலும்' என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தாலறிக.

**வ–று.:–**

(1)“வார்ந்திலங்குவை யெயிற்றுச் சின்மொழி – யரிவையைப் பெறுகதில் லம்மயானே” இங்கே அரிவையைப் பெறுதல் வேட்கையை யுணர்த்தலால் விழைவு.

(2)“பெற்றாங்கறிக தில்லம்மவிவ்வூரே.” இங்கே பெற்ற காலத்தறிக எனக் காலத்தை யுணர்த்தலாற் காலம்.

(3)“வருகதிலம்மவெஞ்சேரிசேர” இங்கே வந்தால் ஒன்று செய்வேன் என்னும் ஒழிந்த சொற்பொருளை யுணர்த்தலால் ஒழியிசை.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ-ள்.:-** **தில்** – தில் என்னும் இடைச்சொல், **விழைவு** – ஆசையும், **காலம்** – காலமும், **ஒழியிசை** – ஒழிந்தசொல்லும் ஆகிய மூன்று பொருள் தரும்.

**உ-ம்.:-**

(1) **"அரிவையைப் பெறுகதில் லம்ம யானே"**-இதில், அரிவையை (பெண்ணை)ப் பெறவேண்டு மென்கிற ஆசையை உணர்த்துதலால், **விழைவு.**

(2) **"பெற்றாங் கறிகதில் லம்ம இவ்வூரே"**-இதில் பெற்ற காலத்தில் அறிக எனக் காலத்தை உணர்த்துதலால், காலம்.

(3) **"வருகதில் லம்ம எஞ்சேரி சேர"** -இதில் வந்தால் இன்னது செய்வேன் என்னும் ஒழிந்தசொல்லை உணர்த்துதலால், **ஒழியிசை.**

## கா. நமச்சிவாய முதலியார்

**தில்** – தில் என்னும் இடைச்சொல், **விழைவு** – ஆசையும், **காலம்** – காலமும், **ஒழியிசை** – ஒழிந்த சொல்லும் (ஆகிய மூன்று பொருளையும் தரும்)

**உதாரணம்**

| | |
|---|---|
| 1. 'வார்ந்திலக்குவையெயிற்றுச் சின்மொழி அரிவையைப் பெறுகதில் அம்ம யானே' | அறிவையைப் பெறுதல் வேட்கையை உணர்த் தலால் விழைவு. |
| 2. 'பெற்றாங், கறிகதில் லம்மவிவ் வூரே' | பெற்றகாலத்து அறிக எனக் காலத்தை யுணர்த்தலாற் காலம். |
| 3. 'வருகதில் லம்மவெஞ் சேரிசேர' | வந்தால் ஒன்று செய்வேன் என்னும் ஒழிந்த சொற் பொருளை யுணர்த் தலால் ஒழியிசை. |

## மோசசு பொன்னையா

தில் என்னும் இடைச்சொல் ஆசை, காலம், ஒழிந்த சொல் ஆகிய இவை பொருளாக வரும் எ-று.

யாதானும் ஒரு சொல் ஒழிபுபடவரின் அஃது ஒழியிசை என்க.

எ-டு.:-

1. *வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப் பெறுகதில் லம்ம யானே1* ***விழைவு***
2. *பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே*
   (பெற்ற காலமறிக என்றதால்) காலம்

*3. வருகதில் லம்மவெஞ் சேரி சேர*

(வந்தால் இன்னது செய்வேன் என்றதால்) ஒழியிசை

தொல்காப்பியர்,

**விழைவே கால மொழிசைக் கிளவியென்**

**றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே,**

என ஓதி,

**விழைவின் றில்லை தன்னிடத் தியலும்,5**

எனவும் விதந் தோதியதால், மற்றைய இரண்டு பொருளிலும் மூவிடத்திலும் வர, இஃதொன்றே விழைவுப் பொருளில் மட்டும், தன்மை இடத்தில் வரும்; ஏனை இடங்களில் வருதலில்லை எனக் கொள்க.

**(12)**

## 431. மன்னே யசைநிலை யொழியிசை யாக்கம் கழிவு மிகுதி நிலைபே றாகும்.

**மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கம்**
**கழிவு மிகுதி நிலைபேறு ஆகும்.**

mannē asainilai oḷiyisai ākkam
kaḷivu mikuṭi nilaipēṛu ākum.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The particle 'man'**

The following are the meaning of man. Expletive, ellipsis of necessary words, change of state, (sorrow for) what is gone,

### ஒப்புமைப் பகுதி

**கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்று**
**அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே**

**(தொல். சொல்.: 252)**

**காண்டகுமன் னாக்கம் கழிவே ஒழியிசை...**

**(நேமி.: 77:1)**

**கழிவே யாக்க மொழியிசை யசைநிலை**
**யெனநான் கென்ப மன்னைச் சொல்லே**

**(இ.வி.: 263)**

**ஆக்கம் ஒழியிசை கழிவையும் தருமன்**

**(மு.வீ.: 645)**

**ஆக்கம்ஒழிவு அசைகழிவு நான்கு மன்னே யாகும்**

**(சுவாமி.: 55:1)**

## மயிலை நாதர்

**எ—ன்,** மன்னென்னும் இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

**இ—ள்.:—** இவ்வாறு பொருட்கண்ணும் வரும், மன்னென்னு மிடைச்சொல், எ—று.

**வ—று.:—**

"**மாலை யென்மனார் மயங்கி யோரே**" (குறுந்.234; கலி.119.) இஃது அசைநிலைக்கண் வந்தது. "**பண்டு கூரியதோர் வாண்மன்.**" இப்போது கோடிற்றென்றானும், வாய் போயிற் றென்றானும், [1]இளநீர்த்ததாயிற்றென்றானும் ஒருசொல்லொழிய வந்தமையின், இஃது ஒழியிசை. "**பண்டு காடுமன்**" என்பது இப்பொழுது கயல்பிறழும் வயலாயிற்றென ஆக்கப் பொருட்கண் வந்தது. "**சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே**" (புறநா.235) என்பது அஃது இப்பொழுது கழிந்ததெனக் கழிவின்கண் வந்தது. "**மன்னு மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி**" (சிலப். 7 : 3.) இது மிகுதிக்கண் வந்தது. "**மன்னா வுலகத்து மன்னியது புரைமே**" (கலி.54), "**பூமன்னும் பொழில்**" என்பது நிலைபேற்றின்கண் வந்தது.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** மன் என்னும் இடைச்சொல் இலக்கணம் **உணர் — ற்று.**

**இ—ள்.:** இவ் ஆறு பொருளையும் தரும் மன் என்னும் இடைச்சொல், எ — று.

**வ—று.:—**

"**அதுமன் கொண்கன் தேரே**" என்பது, **அசைநிலை.** "**கூரியதோர் வாள்மன்**"என்புழி, அதனாற் கருந்தாது அறத்துணித்தது என்னும் சொல் ஒழிய நின்றமையின், **ஒழியிசை.**

'**நெடியன்மன்**' என்புழி அவனே வலியனும் ஆயினான் எனப் பொருள் தரின், **ஆக்கம்.**

---

பாட வேறுபாடு.:—

1. (1) இந்நீர்த்தாய்தென்றானும்;

(2) இன்னீர்த்தாயிற்றென்றானும்

[1]"**சிறியகட் பெறினும் எமக்கீயு மன்னே**"

என்புழி இப்பொழுது அவன் இறத்தலின் எமக்கீதல் கழிந்தது எனப் பொருள்தருதலின்; கழிதல். "**எந்தை எமக்கருளுமன்**" என்புழி மிகுதியும் அருளும் எனப் பொருள் தருதலின், மிகுதி.

"**மன்னா உலகத்து மன்னியது புரைமே**"

என்புழி இவ்விடைச்சொல்லடியாகப் பிறந்த வினையுள் மன் என்பது நிலையினை உணர்த்தினமையின், **நிலைபேறு.**

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், மன்னென்னும் இடைச்சொல் வருமிடம் கூறுகின்றது.

இ—ள்.:— **மன்னே**—மன்னென்னும் இடைச்சொல்லாவது, **அசைநிலை ஒழியிசை**—அசைநிலைப் பொருண்மைக்கண்ணும் ஒழியிசைப் பொருண்மைக் கண்ணும், **ஆக்கம் கழிவு** – ஆக்கப் பொருண்மைக்கண்ணும், கழிவுப் பொருண்மைக்கண்ணும், **மிகுதி நிலைபேறு** – மிகுதிப் பொருண்மைக்கண்ணும், நிலைபேற்றுப் பொருண்மைக்கண்ணும், **ஆகும்** – இவ்வறுவகைப் பொருண்மைக்கண்ணும் வரும், **எ—று.**

உ—ம்.:—

"**மாலை யென்மனார் மயங்கி யோரே**" (கலி.119) என **அசைநிலைக்கண்** வந்தது.

"**பண்டு கூறியதோர் வாண்மன்**" என்பது வாய் போயிற்று என்றேனும் இந்நீர்த்து ஆயிற்று என்றேனும் சொல்லொழிய வருதலின் **ஒழியிசைக்கண்** வந்தது.

"**பண்டு காடுமன்**" என்பது இப்பொழுது வயல் ஆயிற்று; குளம் ஆயிற்று என **ஆக்கப் பொருண்மைக்கண்** வந்தது.

**சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே** (புறம்.235)

என்பது இப்பொழுது கழிந்ததெனக் கழிவின்கண் வந்தது.

"**மன்னு மாதர் பெருங்கற்பென் றறிந்தேன்**
**வாழி காவேரி**" (சிலம்பு.கானல்.3)

என்பது **மிகுதிக்கண்** வந்தது.

**பூமன்னு பொழில் வாழ்க மன்னே**

என்பது **நிலைபேற்றின்கண்** வந்தது.

## விசாகப் பெருமாளையர்

இது, மன்னென்னு மிடைச்சொல் லிலக்கண முணர்த்துகின்றது.

இ—ள்.: **மன்**—மன்னென்னு மிடைச்சொல், **அசைநிலை** – அசைத்து நிற்றற் பொருளிலும், **ஒழியிசை**—ஒழிந்தசொற் பொருளிலும், **ஆக்கம்** – ஆக்கப்பொருளிலும், **கழிவு**—கழிவுப்பொருளிலும், **மிகுதி**—மிகுதிப்பொருளிலும், **நிலைபேறு** – நிலைபெறுதற்பொருளிலும், **ஆகும்**—வரும், **எ—று.**

**வ—று.:—**

'அதுமற் கொண்கன் றேரே' என்பது அசைநிலை. 'கூரியதோர்

வாண்மன்', என்கிறவிடத்தே அது இரும்பை அறத் துணித்தது என்கிற சொல்லொழிய நின்றதனால், ஒழியிசை. 'நெடியன்மன்', என்கிறவிடத்தே அவனே வலியனு மானானெனப் பொருள் படுதலால், ஆக்கம். 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே', என்கிறவிடத்தே இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்குக் கொடுத்தல் கழிந்ததெனப் பொருள்படுவதினாற், கழிவு. 'எந்தை யெமக்கருளுமன்' என்கிறவிடத்தே மிகுதியும் அருளு மெனப் பொருள்படுதலால், மிகுதி. மன்னா வுலகத்து மன்னியது புரிமே, என்கிறவிடத்தே இவ்விடைச்சொல்லடியாகப் பிறந்த வினையுள் மன்னென்பது நிலையினை யுணர்த்தலால், நிலைபேறு.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

மன்னென்னுமிடைச்சொல் இன்னபொருட்கண்வருமெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

மன்னே யசைநிலை யொழியிசை யாக்கங்

கழிவு மிகுதி நிலைபே றாகும்.

(மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கம் கழிவு மிகுதி நிலைபேறு ஆகும்.)

**இ—ள்.:—** மன்னென்னுமிடைச்சொல் அசைத்துநிற்றற்பொருளிலும் ஒழிந்த சொற்பொருளிலும் ஆக்கப்பொருளிலும் கழிதற்பொருளிலும் மிகுதிப்பொருளிலும் நிலைபெறுதற்பொருளிலும் வரும். **எ—று.**

**வ—று.:—**

(1) "அதுமற் கொண்கன் றேரே." இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(2) "கூரியதோர் வாண்மன்." இங்கே இரும்பை அறத்துணித்தது என்னும் ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

(3) "பண்டு காடுமன்." இங்கே இன்று வயலாயிற்று என்னும் ஆக்கப்பொருளைத் தருதலால் ஆக்கம்.

(4) "சிறியகட்பெறினே யெமக்கீயு மன்னே." இங்கே இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்குக் கொடுத்தல் கழிந்தது என்னும் பொருளைத்தருதலாற் கழிவு. சிறியகட் பெறினே—சிற்றளவினதாகிய தேனைப்பெற்றால், எமக்கீயும்—எங்களுக்குத் தருவன், மன்னே—அது கழிந்தது. இது இறந்துகிடந்த வள்ளலாகிய அதிகமானைக்கண்டு ஔவை பாடிய பாட்டின் முதலடி.

(5) "எந்தை யெமக்கருளுமன்." இங்கே மிகுதியும் அருளுவன் என்னும் பொருளைத் தருதலால் மிகுதி.

(6) "மன்னா வுலகத்து மன்னியது புரிமோ." இங்கே இவ்விடைச்சொல்லடியாகப் பிறந்த வினைகள். நிலைபெறாத வலகத்திலே சிலைத்ததைச் செய் என்னும் பொருள்பட திற்றலால் நிலைபேறு.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மன்னென்னுமிடைச்சொல் லிலக்கண முணர்த்திற்று.

இ–ள்.:– இந்த ஆறுபொருளையுந் தரும் மன் என்னுமிடைச்சொல், எ–று.

வ–று.:–

'அதுமற் கொண்கன் றேரே' என்றதில் அதுமன் என்பது அசைநிலை, 'கூரியதோர் வாண்மன்' என்பது இரும்பை யறத் துணித்தது என்னுஞ் சொல்லொழிந்து நிற்றலால், ஒழியிசை. 'நெடியன்மன்'என்பது வலியனுமாயினானெனப் பொருள்படின் ஆக்கம். 'புதுமல ரணிய வின்று வரின்மன்' என்பதுமது. 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே' என்பது இப்பொழுதவன் இறத்தலால் எமக்கீதல் கழிந்ததெனப் பொருள் படுதலாற், கழிவு. 'எந்தை எமக்கருளுமன்' என்பது மிகுதியும் அருளுமெனப் பொருள்படுதலால், மிகுதி. 'மன்னா வுலகத்து மன்னியது புரிமோ' என இவ்விடைச்சொல்லடியாகப் பிறந்த வினைகள் நிலை பெறாத உலகத்திலே நிலைத்ததைச் செய்யென்னும் பொருள்பட நிற்றலால், நிலைபேறு என வரும்.

இவற்றுள், அசைநிலை பொதுச்சூத்திரத்தாற் பெறுதலாலும், மிகுதி–குறிப்பின்பாற் படுதலாலும், நிலைபேறு வினையின் பாற்படுதலாலு மவற்றை யொழித்து ஆசிரியர் தொல்காப்பியனார்,

**"கழிவே யாக்க மொழியிசைக் கிளவியென்**
**றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே"**

எனச் சூத்திரஞ் செய்தாரெனக் காண்க. மன்–அசைநிலையும் ஒழியிசையும் என எண்ணி ஆகுமெனப் பயனிலைகூட்டி முடித்துக்கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை** :– **மன்** – 'மன்' என்னும் இடைச்சொல், **அசைநிலை** – அசைத்து நிற்றற் பொருளிலும், **ஒழியிசை** – ஒழிந்தசொற்பொருளிலும், **ஆக்கம்** – ஆக்கப்பொருளிலும், **கழிவு** – கழிதற்பொருளிலும், **மிகுதி** – மிகுதிப் பொருளிலும், **நிலைபேறு** – நிலைபெறுதற்பொருளிலும், **ஆகும்** – வரும்.

உதாரணம் :

1. "அது மற்கொண்கன்தேரே" –இதில், வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால், அசைநிலை.

2. "கூரியதோர் வாள்மன்" – இதில், இரும்பை அறத்துணித்த தென்னும் ஒழிந்தசொல்லை உணர்த்துதலால், ஒழியிசை.

3. "பண்டுகாடுமன்" – இதில், இன்று வயலாயிற்று என்னும் பொருளை உணர்த்துதலால், ஆக்கம்.

4. "சிறியகண்பெறினே எமக்கீயுமன்னே" – இதில், இப்பொழுது

அவன் இறந்ததனால் எமக்கு ஈதல் கழிந்தது எனப் பொருள்படுதலால், கழிவு.

5.“எந்தை எமக்கருளுமன்” – இதில், மிகுதியும் அருளுவானெனும் பொருளைத்தருதலால், மிகுதி.

6.“மன்னா உலகத்து மன்னியதுபுரிமோ” – இதில், இவ்விடைச் சொல்லடியாகப் பிறந்த வினைகள் நிலைபெறாத உலகத்தில் நிலைபெற்றதைச் செய் என்னும் பொருளைத் தருதலால் நிலைபேறு.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:–** **மன்** – மன்னென்னுமிடைச்சொல், **அசைநிலை** – அசைத்து நிற்றற் பொருளிலும், **ஒழியிசை** – ஒழிந்த சொற்பொருளிலும், **ஆக்கம்** – ஆக்கப்பொருளிலும், **கழிவு** –கழிதற்பொருளிலும், **மிகுதி** – மிகுதிப்பொருளிலும், **நிலைபேறு ஆகும்** – நிலைபெறுதற் பொருளிலும் வரும், **எ – று.**

**வ–று.:–**

(1) **“அதுமற் கொண்கன் றேரே”** இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால், **அசைநிலை.**

(2) “கூறியதோர் வாண்மன்” இங்கே இரும்பை அறத்துணித்தது என்னும் ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

(3) **“பண்டு காடுமன்”** இங்கே இன்று வயலாயிற்று என்னும் ஆக்கப்பொருளைத் தருதலால், ஆக்கம்.

(4) “சிறியகட்பெறினே யெமக்கீயு மன்னே” இங்கே இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்குக் கொடுத்தல் கழிந்தது என்னும் பொருளைத் தருதலாற் கழிவு.

(5) **“எந்தை யெமக்கருளுமன்”** இங்கே மிகுதியும் அருளுவன் என்னும் பொருளைத் தருதலால், மிகுதி.

(6) **“மன்னாவுலகத்து மன்னியது புரிமோ”** இங்கே இவ் விடைச்சொல்லடியாகப் பிறந்த வினைகள் நிலைபெறாத வுலகத்திலே நிலைத்ததைச் செய் என்னும் பொருள்பட நிற்றலால் **நிலைபேறு.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ – ள்.:–** மன் – மன்னென்னுமிடைச் சொல், – **அசைநிலை** – அசைத்து நிற்றற்பொருளிலும், – **ஒழியிசை** – ஒழிந்த சொற்பொருளிலும், – **ஆக்கம்** – ஆக்கப்பொருளிலும், – **கழிவு** – கழிதற்பொருளிலும், – **மிகுதி** – மிகுதிப் பொருளிலும், – **நிலைபேறு ஆகும்** – நிலைபெறுதற்பொருளிலும் வரும்.

வ—று.:—

(1)"அதுமற் கொண்கன் றேரே" இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(2)"கூரியதோர்வாண்மன்" இங்கே இருப்பை அறத்துணித்தது என்னும் ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

(3)"பண்டுகாடுமன்" இங்கே இன்று வயலாயிற்று என்னும் ஆக்கப் பொருளைத் தருதலால் ஆக்கம்.

(4)"சிறியகட்பெறினே யெமக்கீயுமன்னே" இங்கே இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்குக் கொடுத்தல் கழிந்தது என்னும் பொருளைத் தருதலாற் கழிவு.

(5)"எந்தையெமக்கருளுமன்" இங்கே மிகுதியும் அருளுவன் என்னும் பொருளைத் தருதலால் மிகுதி.

(6)"மன்னாவுலகத்து மன்னியது புரிமோ" இங்கே இவ்விடைச் சொல்லடியாகப் பிறந்த வினைகள் நிலைபெறாத வுலகத்திலே நிலைத்ததைச் செய் என்னும் பொருள்பட நிற்றலால் நிலைபேறு.

## வை. மு. சடகோபராமாநுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:— **மன்** – மன் என்னும் இடைச்சொல், **அசைநிலை**—அசைத்து நிற்றற்பொருளிலும், **ஒழியிசை** – ஒழிந்தசொற் பொருளிலும், **ஆக்கம்** – ஆக்கப் பொருளிலும், **கழிவு** – கழிதற்பொருளிலும், **மிகுதி** – மிகுதிப்பொருளிலும், **நிலைபேறு** – நிலைபெறுதற்பொருளிலும், **ஆகும்** – வரும்; எ—று.

(1) '**அதுமன் கொண்கன் தேரே**' –இதில், வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால், **அசைநிலை**.

(2) '**கூறியதோர் வாள்மன்**' – இதில், இப்பொழுது ஒடிந்துவிட்டது என்னும் ஒழிந்த சொல்லை உணர்த்துதலால், **ஒழியிசை**.

(3) '**பண்டு காடுமன்**'– இதில் இன்று வயலாயிற்று என்னும் பொருளை உணர்த்துதலால், ஆக்கம்.

(4) '**சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே**' –இதில், இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்கு ஈதல் கழிந்தது எனப் பொருள்படுதலால், **கழிவு**.

(5) '**எந்தை எமக்கு அருளும் மன்**' –இதில், மிகுதியும் அருளுவா னென்னும் பொருளைத் தருதலால், **மிகுதி**.

(6) '**மன்னா உலகத்து மன்னியது புரிமோ**'–இதில், இவ்விடைச்சொல்லடியாகப் பிறந்த வினைகள், நிலைபெறாத

உலகத்தில் நிலைபெற்றதைச் செய் என்னும் பொருளைத் தருதலால், **நிலைபேறு.**

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:— மன்** — மன்னென்னுமிடைச்சொல், **அசைநிலை** — அசைத்து நிற்றற்பொருளிலும், **ஒழியிசை** — ஒழிந்த சொற்பொருளிலும், **ஆக்கம்** — ஆக்கப்பொருளிலும், **கழிவு** — கழிதற்பொருளிலும், **மிகுதி** — மிகுதிப்பொருளிலும், **நிலைபேறு ஆகும்** — நிலைபெறுதற்பொருளிலும் வரும். எ—று.

உ—ம்.

(1) "அதுமற் கொண்கன் றேரே" – இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டுநிற்றலால் அசைநிலை.

(2) "கூரியதோர் வாண் மன்" – இங்கே இரும்பை அறத்துணித்தது என்னும் ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

(3) "பண்டு காடுமன்" – இங்கே இன்று வயலாயிற்று என்னும் ஆக்கப்பொருளைத் தருதலால் ஆக்கம்.

(4) "சிறியகட்பெறினே யெமக்கீயு மன்னே" – இங்கே இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்குக் கொடுத்தல் கழிந்தது என்னும் பொருளைத் தருதலாற் கழிவு.

(5) "எந்தை யெமக்கருளுமன்" – இங்கே மிகுதியும் அருளுவன் என்னும் பொருளைத் தருதலால் மிகுதிய.

(6) "மன்னாவுலகத்து மன்னியது புரிமோ" – இங்கே இவ்விடைச்சொல்லடியாகப் பிறந்த வினைகள் நிலைபெறாத வுலகத்திலே நிலைத்ததைச் செய் என்னும் பொருள்பட நிற்றலால் நிலைபேறு.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ—ள்.:— மன்** — மன் என்னும் இடைச்சொல், **அசைநிலை** — அசைத்து நிற்றற் பொருளிலும், **ஒழியிசை** — ஒழிந்த சொற் பொருளிலும், **ஆக்கம்** — ஆக்கப்பொருளிலும், **கழிவு** — கழிதற் பொருளிலும், **மிகுதி** — மிகுதிப்பொருளிலும், **நிலைபேறு** — நிலை பெறுதற் பொருளிலும், **ஆகும்** — வரும் **எ—று.**

**பொ —ரை.:—** அசைநிலை முதலிய ஆறுபொருளையும் தரும் 'மன்' என்னும் இடைச்சொல்.

**உ — ம்.:—**

1. "அதுமற்கொண்கன் றேரே"

வேறு பொருளின்றிச் சார்த்தப் பட்டு நிற்றலால், அசைநிலை.

2. "கூரியதோர் வாள் மன்"

அது இரும்பை அறத்துணித்தது என்கிற சொல்லொழிய நின்றதனால், ஒழியிசை.

3. "நெடியன் மன்"

அவனே வலிகனு மானானெனப் பொருள் படுதலால், ஆக்கம்.

4. "சிறியகட்பெறினே யெமக்கீயுமன்னே"

இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்குக் கொடுத்தல் கழிந்ததெனப் பொருள்படுவதனால், கழிவு.

5. "எந்தை எமக்கருளுமன்"

மிகுதியும் அருளுமெனப் பொருள் படுதலால், மிகுதி.

6. "மன்னாவுலகத்து மன்னியது புரிமோ."

இவ்விடைச் சொல்லடியாகப் பிறந்தவினையுள் மன் என்பது நிலையினை யுணர்த்தலால், நிலைபேறு. (நிலைபெறாத வுலகத்தில் நிலைபெற்றதைச் செய் என்பது பொருள்.)

## கா. நமச்சிவாய முதலியார்

**மன்** – மன் என்னும் இடைச்சொல், **அசைநிலை** –அசைத்து நிற்றற் பொருளிலும், **ஒழியிசை** – ஒழிந்த சொற்பொருளிலும், **ஆக்கம்** – ஆக்கப் பொருளிலும், **கழிவு** – கழிதற் பொருளிலும், **மிகுதி** – மிகுதிப் பொருளிலும், **நிலைபேறு** – நிலைபெறுதற் பொருளிலும், **ஆகும்** – வரும்.

**உதாரணம்**

| | | |
|---|---|---|
| 1. அது**மன்** கொண்கன் தேரே | – | அசைநிலை |
| 2. 'கூரியதோர் வாள்**மன்**' | – | அஃது இரும்பை அறத் துணித்தது என்னும் சொற்கள் ஒழிய நின்றதனால் ஒழியிசை. |
| 3. 'நெடியன்**மன்**' | – | அவனே வலியனுமானான் எனப் பொருள் படுதலால் ஆக்கம் |
| 4. 'சிறியகட்பெறினே எமக்கீயு**மன்**' | – | இப்பொழுது அவன் இறந்ததனால், எமக்கு கொடுத்தல் கழிந்தது எனப்பொருள்படுவத னாற் கழிவு. |
| 5. 'எந்தை எமக்கருளு**மன்**' | – | மிகுதியும் அருளும் என பொருள்படுதலால் மிகுதி |
| | | இவ்விடைச் சொல்லடி யாகப்பிறந்த வினைகள், |

| | |
|---|---|
| 6. 'மன்னா உலகத்துமன்னி யது புரைமே' | நிலைபெறாத உலகத்தில் நிலைப்பதாகிய புகழ் பொருந்தும் எனப் பொருள் படுதலால் நிலைபேறு. |

## மோசகு பொன்னையா

மன் என்னும் இடைச்சொல், அசைத்துநிற்றற் பொருளிலும், ஒழிந்த சொற்பொருளிலும், ஆக்கப் பொருளிலும், கழிவுப் பொருளிலும், மிகுதிப் பொருளிலும், நிலைபெறுதற் பொருளிலும் வரும் எ–று.

எ–டு

1.மாலை யென்மனார் மயங்கி யோரே[1] அசைநிலை

2. கூரியதோர் வாண்மன்[2] இப்பொழுது இற்றது, கோடிற்று, அல்லது வாய்போயிற்று என இவ்வாறு ஒரு சொல் ஒழிவுபட வந்தமையின், –ஒழியிசை

3.பண்டு காடுமன் இப்பொழுது வயலாயிற்று, அல்லது ஊராயிற்று என ஆக்கப் பொருளில் வந்தமையின்,–ஆக்கம்

4.சிறியகட் பெறினு மெமக்கீயு மன்னே[3] ஐயோ! இறந்தானே எனக் கழிவிரக்கப் பொருளில் வருதலின், –கழிவு

5.எம்மிறை எமக்கருளுமன் இறைவன் மிகுதியாய் அருளும் என்றதனால்,–மிகுதி

6.மன்னா வுலகத்து மன்னியது புரிமோ[4] நிலைபேற்றை உணர்த்தினமையின்,–நிலைபேறு

தொல்காப்பியர்,

**கழிவே யாக்க மொழியிசைக் கிளவியென்**

**றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே,[5]**

எனவும், நேமிநாதமுடையார்,

**காண்டகுமன் னாக்கங் கழிவே யொழிசை[6]**

எனவும் கூறி, மன்னிடைச்சொல் கழிவு, ஆக்கம், ஒழியிசை என்னும் மூன்று பொருள்களிலேயே வரும் என்றனர். இவ்வாசிரியர் அஃது அசைநிலை, மிகுதி, நிலைபேறு என்னும் வேறு மூன்று பொருள்களிலும் வரும் என்றார்.

இளம்பூரணர் முதலிய உரையாசிரியர்கள் மேற்கண்ட தொல்காப்பிய நூற்பாவுரையில். 'அதுமற் கொண்கன் றோரே' என் எடுத்துக்காட்டி மன்னிடைச் சொல்லுக்கு அசைநிலைப் பொருளும் கொண்டனர். எனவே, இவ்வாசிரியர் அதனைத் தம் நூற்பாவுள் அடக்கினார் எனலாம்.

புறனானூற்றில்,

**குடிபுர விரக்கும் கூரி லாண்மைச்**
**சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே,**

எனவும். சிந்தாமணியில்,

**மன்னடு வாளும் வேலுங் கல்லொடு தீயுங் காற்றும்**
**மின்னுட னேந்தித் தெய்வ மாதரைச் சூழ்ந்த வன்றே,**[2]

எனவும் வரும் பகுதிகளுக்கு உரை எழுதியக்கால் பழைய உரைகாரரும், நாச்சினார்க்கினியரும் முறையே 'சிறந்தன்று மன்னே' என்பதற்குப் 'பரிக்கவொண்ணாதாம்படிக் கனத்தது மிகவும்' எனவும், 'மன்னுடனேந்தி' என்பதற்கு 'மிகுதியுடனே ஏந்தி' எனவும் உரைகண்டு, அவ்விரு இடங்களிலும் ஆக்கப் பொருள் அமைத்துள்ளமையை நோக்குங்கால், பண்டையோர் மிகுதிப் பொருளையும் ஆக்கத்துள்ளே அடக்கிக் கண்டனர் என்பது போதரும்.

மன் என்னும் இடைச்சொல் ஒன்று இருக்க, மன் என்னும் வினையடி ஒன்று உண்டு என்பது மறத்தற்பால தன்று. அவ்வடிச் சொல் ஆக்கம்பெற்று, மன்னன் மன்னுதல், மன்பதை எனவும்; மன்னும், மன்னிய, மன்னாத எனவும்; மன்எயில், மன்புனல், மன்குணம் எனவும் முறையே பெயர்ச் சொற்களையும், வினைச் சொற்களையும், வினைத் தொகை களையும் பிறப்பித்து நிற்றலை அறிவோம் K.N. சிவராச பிள்ளை இதைத் தெளிவுபட ஆய்ந்து கூறியுள்ளார்.; அவ்வாற்றான் மன்னிடைச் சொல்லுக்கு நிலை பேற்றுப் பொருள் இல்லை என்பது போதரும்.

(14)

## 432. வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.

**வினைமாற்று அசைநிலை பிறிது எனும் அற்றே.**

vinaimāṟṟu asainilai piṟitu eṉum maṟṟuē.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The particle 'marru'**

Marru signifies Change of action, expletive and another thing.

### ஒப்புமைப் பகுதி

**மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை**
**அப்பா லிரண்டென மொழிமனார் புலவர்**

**(தொல். சொல்.: 262)**

**மற்றென் கிளவி வினைமாற்று அசைநிலை**

**(இ.வி.: 266)**

**மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை**

**(மு.வீ.: 653)**

**..................... வேறு அசைநிலை மற்றாமே**

**(சுவாமி.: 54: 4)**

## மயிலை நாதர்

**எ–ன்,** மற்றென்னும் இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:–** இம்மூன்று பொருட்கண்ணும் வரும் மற்றென்னு மிடைச்சொல், எ–று.

**வ–று.:–**

**"மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது"** (நாலடி.19.)
இது வினைமாற்று.

**"மற்றடிகள் கண்டருளிச் செய்க மலரடிக்கீழ்"** (சீவக.1873.)
இஃது அசைநிலை.

**"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான்முந் துறும்"** (குறள்.380.) இது பிறிதென்பதன் மேல் வந்தது.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** மற்று என்னும் இடைச்சொல் இலக்கணம் **உணர் – ற்று.**

**இ–ள்.:–** இம்மூன்று பொருளையும் தரும் மற்று என்னும் இடைச்சொல், எ – று.

**வ–று.:–**

**"மற்றறிவாம் நல்வினை யாமிளையம் என்னாது"** என்பது விரைந்து அறிவாம் என்னும் வினையை ஒழித்து விரையாது அறிவாம் என்னும் வினையைத் தந்து நின்றமையின். வினைமாற்று.

"மற்றடிகள் கண்டருளிச் செய்ய மலரடிக்கீழ்" என்பது, **அசைநிலை.**

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்"

என்பது ஊழல்லது ஒன்று என்னும் பொருள்தந்தமையின், பிறிது.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** மற்றென்னும் இடைச்சொல் வருமிடம் கூறுகின்றது

**இ–ள்.:– வினைமாற்று**–வினைமாற்றுப் பொருண்மைக்கண்ணும், **அசை நிலை** – அசைநிலைப் பொருண்மைக்கண்ணும், **பிறிது** – பிறி தென்னும்

பொருண்மைக்கண்ணும், **எனு மற்றே** – என்று சொல்லப்படும் இம் மூன்று பொருண்மைக்கண்ணும் மற்று என்னும் இடைச்சொல் வரும், **எ–று.**

**உ–ம்.:–**

**"மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது"** (நாலடி.19)
என்பது **வினைமாற்று.**

**"மற்றடிகள் கண்டருளிச் செய்ய மலரடிக்கீழ்"**
(சீவக.1873)

என்பது அசைநிலை.

**"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினுந் தான்முந் துறும்"** (குறள்.380)
என்பது **பிறிதின்மேல்** வந்தது.

## விசாகப் பெருமாளையர்

இது, மற்றென்னு மிடைச்சொல் லிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.:– மற்று** – மற்றென்னுமிடைச்சொல், **வினைமாற்று** – வினைமாற்றுப் பொருளையும், **அசைநிலை** – அசைத்துநிற்றற் பொருளையும், **பிறிதெனும்** – பிறிது பொருளையுந் தரும், **எ–று.**

**வ–று.:–**

'மற்றறிவா நல்வினையாமிளைய மென்னாது', என்பது விரைந்தறிவா மென்னும் வினையை யொழித்து விரையாதறிவா மென்னும் வினையைத் தருதலால், வினைமாற்று. 'மற்றடிகள் கண்டருள் செய்யமலரடிக்கீழ்' என்பது, அசைநிலை. 'ஊழிற்பெருவலியாவுள மற்றொன்று சூழினுந்தான் முந்துறும்', என்பது ஊழல்லதொன்றென்னும் பொருளைத் தந்தமையாற், பிறிது.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

மற்றென்னு மிடைச்சொல் எத்தனை பொருள்பட வரும்?

வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.

(வினைமாற்று அசைநிலை பிறிது எனும் மற்றே.)

**இ–ள்.:–** மற்றென்னு மிடைச்சொல் வினைமாற்றுப் பொருளையும் அசைத்துநிற்றற் பொருளையும் பிறிது பொருளையுந்தரும். **எ–று.**

**வ–று.;–**

(1) "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது." இங்கே

விரைந்தறிவாமென்னும் னையையொழித்து விரையாதறி வாமென்னும் வினையைத் தருதலால். வினைமாற்று.

(2) "மற்றென்னை யாள்க." இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால். அசைநிலை.

(3) "ஊழிற் பெருவலி யாவள மற்றொன்று–சூழினுந் தான்முக்துறும்."இங்கேஊழல்ல தொன்றென்னும் பொருளைத் தருதலாற். பிறிது.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மற்றென்னு மிடைச்சொல் லிலக்கண முணர்த்திற்று.

**இ–ள்.:–** இந்த மூன்று பொருளையுந் தரும் , மற்று என்னு மிடைச் சொல், **எ–று.**

அன்றி யென்னும் வினையெச்சம், 'அறனன்றிச் செய்யான்' என்புழி அறனல்லாததைச் செய்யான் என எதிர்மறையிலும், 'அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையான வியற்கையாலு' மென்புழி, அகரத்திற்குத் தலைமை விகாரத்தா லுண்டானதுமன்றி நாதமாத்திரையான வியற்கையாலும் உண்டென உடன்பாட்டிலும் வருதல் போல வினைமாற்று, எதிர்மறையுடன் பாடிரண்டிலும் வருதலால், வினையொழிவு தோன்றமாற்றலும், ஒழிவு தோன்றாது மாற்றலுமென இருவகைப்படு மெனக் கொள்க.

**வ–று.:–**

'இனி மற்றொன்றுரை' என்பது முன் சொன்னதொழிய வேறொன்றுரை, எனப் பொருள்பட நிற்றலால், ஒழிவு தோன்றநின்ற வினைமாற்று; '*மற்றறிவாம் நல்வினை*' யென்பது, இப்பொழுது விரைந்தறிவோ மென்பதை மாற்றி, யினிமேல் விரையாதறிவோ மென நிற்றலாற் காலங்குறித்து ஒழிவு தோன்ற நின்ற வினைமாற்று, 'மற்றுங் கூடு மனைமடி துயிலே' என்பது இப்பொழுது கூடுகின்றது மன்றி யினிமேலுங் கூடுந் துயில் மனைமடியிடத்தென நிற்றலால், காலத்தோடு இடமுங் குறித்து ஒழிவு தோன்றாது நின்ற வினைமாற்று, 'அதுமற்றம்ம' என்பதில், மற்று அசைநிலை.

**"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினும் தான் முந் துறும்"**

என்பதில் மற்றொன்றென்பது ஊழல்லதொன்று என நிற்றலால் பிறிது என வரும். இனிப் பிறிதென இவர் கூறியது வினைமாற்றிலடங்கி நின்றது எவ்வாறெனின், மற்றொன்று சூழினும் முன் சூழ்ந்த தொழிய வேறொன்று சூழினும் எனப் பொருள்படுதலாலென்க, (சூழ்தல் – சூழ்ச்சி, உபாயம், ஆலோசனை என்பன பொருள்). மற்றோரு பாயந் தேடினுமென்பது மற்றொன்று சூழினுமென்பதற்குப் பொருள், இங்ஙனமாதலால்,

**"மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை**
**யப்பா லிரண்டென மொழிமனார் புலவர்'**

என ஆசிரியர் தொல்காப்பியனார் சூத்திரஞ் செய்தாரெனக் காண்க. எனும் மற்று (என்று சொல்லப்படும் மற்று) என முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **மற்று** – 'மற்று' என்னும் இடைச்சொல், **வினைமாற்று,** வினைமாற்றுப் பொருளையும், **அசைநிலை** – அசைத்துநிற்றற் பொருளையும் – **பிறிது எனும்** – வேறென்னும் பொருளையுந்தரும்.

**உதாரணம் :**

1. "மற்றறிவாம் நல்வினை யாமிளையமென்னாது" – இதில், நல்வினையை விரைந்தறிவாம் என்னும் வினையை மாற்றி இனிமேல் விரையாமல் அறிவாமென்னும் வினையைத் தருதலால், வினைமாற்று.

2. "மற்றென்னை ஆள்க" – இதில், வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால், அசைநிலை.

3. "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று – சூழினுந் தான்முந்துறும்" –இதில், மற்றொன்று என்பது – ஊழ்வினைக்கு மறுதலையாவதோர் உபாயமெனப் பொருள்தருதலால், பிறிது.

குறிப்பு :–

'அன்றி' என்னும் வினையெச்சம் 'அறனன்றிச் செய்யான்' என்னுமிடத்து 'அறன் அல்லாததைச் செய்யான்' என எதிர்மறையிலும், 'அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையான் இயற்கையானும்' என்னுமிடத்து 'அகரத்திற்குத் தலைமை விகாரத்தான் உண்டானதுமன்றி நாதமாத்திரையான இயற்கையானும் உண்டு" என உடன்பாட்டிலும் வருதல்போல, வினைமாற்று எதிர்மறை, உடன்பாடு இரண்டிலும் வருதலால் வினையொழிவு தோன்ற மாற்றலும், ஒழிவுதோன்றாது மாற்றலும் என இருவகைப் படுமென்க. 'பிறிது' என்பதை வினைமாற்றிலடக்குவர் ஆசிரியர் **தொல்காப்பியர்.**

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:–** **மற்று**–மற்றென்னு மிடைச்சொல், **வினைமாற்று**–வினைமாற்றுப் பொருளையும், **அசைநிலை** – அசைத்து நிற்றற் பொருளையும், **பிறிது எனும்** – பிறிது பொருளையுந் தரும், எ – று.

**வ–று.:–**

(1) **"மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது"** இங்கே

விரைந்தறிவாமென்னும் வினையை யொழித்து விரையா தறிவாமென்னும் வினையைத் தருதலால், **வினைமாற்று.**

(2) **"மற்றென்னை யாள்க"** இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால், **அசைநிலை.**

(3) **"ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று—சூழினுந் தான்முந் துறும்".** இங்கே ஊழல்லதொன்றென்னும் பொருளைத் தருதலாற், பிறிது.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள்.:— மற்று** — மற்றென்னுமிடைச்சொல், — **வினைமாற்று** — வினைமாற்றுப்பொருளையும், — **அசைநிலை** — அசைத்து நிற்றற் பொருளையும், — **பிறிது எனும்** — பிறிது பொருளையுந் தரும். எ — று.

வ—று.:—

(1)"*மற்றறிவாநல்வினை யாமிளையமென்னாது*" இங்கே விரைந்தறிவாமென்னும் வினையையொழித்து விரையாதறிவா மென்னும் வினையைத் தருதலால் வினைமாற்று.

(2)"மற்றென்னையாள்க." இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(3)"ஊழிற்பெருவலியாவுள மற்றொன்று — சூழினுந்தான் முந்துறும்" இங்கே ஊழல்லதொன்றென்னும் பொருளைத் தருதலாற்பிறிது.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ — ள்.:— மற்று** — மற்று என்னும் இடைச்சொல், **வினைமாற்று**— வினைமாற்றுப் பொருளையும், **அசைநிலை** — அசைத்து நிற்றற் பொருளையும், **பிறிது எனும்** — வேறென்னும் பொருளையும் தரும்; எ — று.

உ—ம்.:—

(1) **"மாற்றறிவாம் நல்வினை யாமிளைய மென்னாது"**—இதில், நல்வினையை விரைந்தறிவாம் என்னும் வினையை மாற்றி இனிமேல் விரையாமல் அறிவா மென்னும் வினையைத் தருதலால், **வினைமாற்று.**

(2) **"மற்றென்னை ஆள்க"**—இதில், வேறுபொருளின்றி நிற்றலால், **அசைநிலை.**

(3) **"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினும் தான் முந்துறும்"**

இதில், மற்றொன்று என்பது, ஊழ்வினைக்கு மறுதலை

யாவதோர் உபாயமெனப் பொருள் தருதலால், **பிறிது** என்பது.

இனி, மற்று என்பது, **பின்** என்னும் பொருளிலும் வரும்.

உ–ம்.:–

"மற்றிவளும் கோற்கண்ணளாகும் குனிந்து."

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– மற்று** – மற்றென்னுமிடைச்சொல், **வினைமாற்று** – வினைமாற்றுபபொருளையும், **அசைநிலை** – அசைத்து நிற்றற்பொருளையும், **பிறிது எனும்** – பிறிது பொருளையுந் தரும். **எ–று.**

உ–ம்.:–

(1) "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது" – இங்கே விரைந்தறிவாமென்னும் வினையை யொழித்து விரையா தறிவாமென்னும் வினையைத் தருதலால் வினைமாற்று.

(2) "மற்றென்னை யாள்க" – இங்கே வேறு பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(3) "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று – சூழினுந் தான்முந்துறும்" – இங்கே ஊழல்ல தொன்றென்னும் பொருளைத் தருதலாற் பிறிது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– மற்று**–மற்றென்னும் இடைச்சொல், **வினைமாற்று**– வினைமாற்றுப் பொருளையும், **அசைநிலை** – அசைத்து நிற்றற் பொருளையும், **பிறிது எனும்** – பிறிது எனும் – பிறிது பொருளையும் தரும். **எ–று**

பொ–ரை.:– வினைமாற்று முதலிய மூன்று பொருளையும் தரும் 'மற்று' என்னும் இடைச்சொல்.

உ–ம்.:–

1. "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது."

விரைந்தறிவா மென்னும் வினையை யொழித்து விரையா தறிவா மென்னும் வினையைத் தருதலால், வினைமாற்று.

2. "மற்றடிகள் கண்டருள் செய்ய மலரடிக்கீழ்."

பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால், அசைநிலை.

3. "ஊழிற் பெரவலியாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்."

ஊழல்லது ஒன்று என்னும் பொருளைத் தந்தமையால், பிறிது.

இனி, மற்று என்பது பின் என்னும் பொருளில் வரும்.

உ–ம்.:–

"மற்றிவளும் கோற்கண்ண ளாகுங் குனிந்து"

## கா. நமச்சிவாய முதலியார்

**மற்று** – மற்றென்னும் இடைச்சொல், **வினைமாற்று** – வினைமாற்றுப் பொருளையும், **அசைநிலை** – அசைத்து நிற்றற் பொருளையும், **பிறிது எனும்** – பிறிது என்னும் பொருளையுந் தரும்.

**உதாரணம்**

| | | |
|---|---|---|
| 1. '**மற்**றறிவாம் நல்வினை யாம் இளையம் என்னாது' | | விரைந்தறிவம் என்னும் வினையை யொழித்து விரையாதறிவாம் என்னும் வினையைத் தருதலால் வினைமாற்று. |
| 2. '**மற்**றடிகள் கண்டருள் செய்ய மலரடிக்கீழ்' | – | அசைநிலை |
| 3. 'ஊழிற்பெருவலி யாவுள மற்றொன்று – சூழினுந் தான்முந்துறும்' | | ஊழல்லது ஒன்று என்னும் பொருளைத் தருதலால் பிறிது. |

## மோசசு பொன்னையா

மற்றும் என்னும் இடைச்சொல் வினைமாற்றுப் பொருளிலும், அசைத்து Ã%F « bghUË Y«, ã¿bj ‹ D« bghUË Y« t U« எ—று.

இவற்றுள் வினைமாற்று, வினையொழிவு தோன்றமாற்றலும், வினை ஒழிவு தோன்றாது மாற்றலுமென இருவகைப்படுமென்க.

எ-டு.

1.(அ) மற்றறிவாம் நல்வினை இப்பொழுது விரைந்தறிவோம் என்பதை மாற்றி, இனிமேல் விரையாதறி வோம் என நிற்றலால், காலங் குறித்து வினைஒழிவு தோன்ற நின்ற வினைமாற்று.

(ஆ) மற்றுங் கூடு மனைமடி துயிலே– இப்பொழுது கூடுகின்றது மன்றி இனிமேலும் கூடுந்துயில் மனைமடியிடத் தென நிற்றலால் காலமும் இடமும் குறித்து வினைஒழிவு தோன்றாது நின்ற வினைமாற்று.

2மற்றடிகள் கண்டருளிச் செய்ய மலரடிக்கீழ் அசைநிலை

3ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான்முந் துறும்ஊழல்லாத வேறு ஒரு பொருளைத் தந்துநிற்றலின் பிறிது.

தொல்காப்பியர்,

**மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை**

**அப்பா லிரண்டென மொழிமனார் புலவர்,**

என இவ்விடைச் சொல்லுக்கு இரண்டே பொருள்கள்

உளவெனக் கூறுதலாலும், 'மற்றொன்று சூழினும்' என்பதற்கு முன் சூழ்ந்த தொழிய வேறொன்று சூழினும் எனப் பொருளுரைத்து, மற்று என்பதற்கு வினைமாற்றுப் பொருள் காணலாம் ஆதலானும், இவ்வாசிரியர் பிறிது என ஒரு பொருள் கொண்டமை பொருந்துமா றில்லை எனலாம்.

(14)

## 433. மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்

மற்றையது என்பது சுட்டியதற்கு இனம்

marraiyatu enpatu suttiyatarku inam

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**Special rule**

Marrai indicates something allied to some other thing before contemplated.

### ஒப்புமைப் பகுதி

மற்றை தென்னுங் கிளவி தானே
சுட்டுநிலை ஒழிய இனங்குறித் தன்றே

(தொல். சொல்.: 264)

மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்

(இ.வி.: 268)

மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்

(மு.வீ.: 652)

### மயிலை நாதர்

எ–ன், மற்றைய தென்னும் இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– மற்றையதென்னு மிடைச்சொல் சுட்டியதனையொழிய, அதற்கு இனமான பிறிதொன்றினைக் காட்டும், எ – று.

வ–று.:–

பல பொத்தகங் [1]கிடந்துழி, ஒருவன் ஏவுவான் ஏவலாளனை, 'பொத்தகங் கொடுவா' என்றால், அவன் ஒரு பொத்தகங் கொடு

---

பாட வேறுபாடு.:–

1. கிடந்துழி

**வந்தவிடத்துத் தான்கருதியது** அன்றெனின், அவன், 'மற்றையது கொணா' என்னும்; என்றால், கொணர்ந்ததன் இனமாயதனை அச்சொற் சுட்டிற்றாகலான், கொணர்ந்ததனை யொழித்து அதற்கினமான பொத்தகம் கொணருமென்பது.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** மேலதற்கோர் புறனடை **உணர்—ற்று.**

**இ—ள்.:—** மேற்கூறிய மற்று என்னும் இடைச்சொற் பொருள் மூன்றனுள், மற்றையது என்னும் பொருளாகிய வினைமாற்றும் பிறிதும், அங்ஙனம் கருதியதற்கு இனமாகிய வினைமாற்றும் இனமாகிய பிறிதுமாம் அன்றி வேறு வினைமாற்றும் வேறு பிறிதும் அல்லவாம்,**எ—று.**

மேற்காட்டிய உதாரணத்துள் நல்வினையை விரைந்து அறிவாம் எனக் கருதியதற்கு விரையாது அறிவாம் எனவும், ஊழொன்று எனக் கருதியதற்கு ஊழல்லது ஒன்று எனவும் இனம் வந்தவாறு காண்க.

வேறு பிறிதாவது என்னையெனின்:— இரண்டு மணி உள்வழி ஒன்று கண்டான் மற்றொன்று காணவேண்டும் என்றானாகில் மற்றொன்று என்பதற்கு இனமாகியதோர் மணி எனப் பொருள்கொள்ளாது ஆடை அணி எனப் பொருள்கோடல் என்க. வினைமாற்றும் இவ்வாறே காண்க.

மேலைச்சூத்திரத்துள் வினைமாற்று எனவும் பிறிது எனவும் பொதுப்படக் கூறினமையின் இச்சூத்திரத்தால் புறனடை கொடுத்துக் காத்தார் என்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி, மற்றையது என்பதனை ஓரிடைச்சொல்லாக வைத்து அச்சொல் அங்ஙனம் கருதிய பொருட்கு இனமாகிய பொருளைத்தரும் எனப் பொருள் கூறுவாரும் உளர். மற்றையது என்பது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரும் வினைக்குறிப்புமாம் ஆதலானும், விகுதி கூறினாரேனும் பகுதிப்பட்ட மற்றை என்னும் ஐகாரவீற்று இடைச்சொற்கு இப்பொருள் கூறினார் எனின், மன் மன்னை கொன் கொன்னை என நின்றாற்போல மற்று மற்றை என இறுதி விகாரமாய் நின்றதன்றி இதற்கு என வேறுபொருள் இன்மையானும், அதனோடு இதற்கு வேற்றுமை, இஃது இனத்தையே தருதல் எனப் பொருள் கொளின் மற்று என்பது இனத்தையும் இனமல்லதையும் தரும் எனப் பொருள்படும் ஆதலானும், எல்லாவற்றானும் இனமாயுள்ளதே வினைமாற்றும் பிறிதுமாய் வருமன்றி இனமல்லது ஒருவாற்றானும் வாராமையானும் அது பொருந்தாது என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** மற்றையதென்னும் இடைச்சொல் வருமிடம் கூறுகின்றது.

**இ–ள்.:–** **மற்றையதென்பது**–மற்றையதென்று சொல்லப்படும் இடைச்சொல், **சுட்டிய தற்கினம்** – சுட்டியதனை ஒழிய இதற்கு இனமான பிறிதொன்றனைக் காட்டும், **எ–று.**

**உ–ம்.:–**

பல பொத்தகங் கிடப்புழி ஏவலாளனைப் பொத்தகம் கொண்டுவா என்றால் அவன் ஒரு பொத்தகம் கொடுவந்தவிடத்தில் தான் கருதியது அன்றெனில் மற்றையது கொணரவேண்டும் என்றால் கொணர்ந்ததன் இனமதனைச் சுட்டிற்று ஆகலான் அதனையொழித்து அதற்கினமான பொத்தகம் கொணர வேண்டும் என்பதாம்.

## விசாகப்பெருமாளையர்

**இது,** முன்னதற்கோர் புறனடை யுணர்த்துகின்றது.

**இ–ள்.:– மற்றைய தென்றது** – மற்றையதென்னும், **பொருளாகிய** வினைமாற்றும் பிறிதும், **சுட்டியதற்கு** – குறிக்கப்பட்டதற்கு, **இனம்** –இனமாகிய வினைமாற்றும் பிறிதுமாம், **எ–று.**

(முன்னுதாரணங்களுள் நல்வினையை விரைந்தறிவாமெனக் குறிக்கப்பட்டதற்கு விரையாதறிவாமெனவும், ஊழொன் றெனக் குறிக்கப்பட்டதற்கு ஊழல்ல தொன்றெனவும், இனம் வந்தவாறு காண்க)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

மற்றையென்னு மிடைச்சொல் என்னபொருள்பட வரும்?

மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

(மற்றை அது என்பது சுட்டியதற்கு இனம்.)

**இ–ள்.:–** மற்றை என்னுமிடைச்சொல் அதுவென்பதனாற் சுட்டப்பட்ட பொருளொழிய அதற்கினமாகிய பொருளைக் குறித்துநிற்கும். **எ–று.**

**வ–று.:–**

ஆடைகொணர்ந்தவழி அவ்வாடை வேண்டாதான் மற்றை யாடை கொணாவென்னும்: அஃது அச்சுட்டிய ஆடை யொழித்து இனமாகிய பிறஆடை குறித்துநிற்றல் காண்க.

மற்றையான் மற்றையது மற்றையன முதலியன இவ்வடியான் வந்த சொற்கள்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மற்றை என்னும் ஐகாரவீற்று இடைச்சொல் பொருள்படுமாறு கூறுகின்றது.

**இ—ள்.:— மற்றையதென்பது** — பெயர்க்கு முதனிலையாய் வரும் ஐகார ஈற்று இடைச்சொல்லானது, **சுட்டியதற்கினம்**—முன்சுட்டப்பட்ட பொருளொழிய அதற்கு இனமாகிய பொருளைக் குறித்து நிற்கும், **எ—று.**

சுட்டுதல்—குறித்தல்,

**வ—று.:—**

இரண்டு மணி யுளவிடத்து ஒன்று கண்டவன், 'மற்றையதுங் காணவேண்டு' மெனின், முன்கண்ட தொழிய அதற்கு இனமாகிய மணியையே குறித்து நிற்பதல்லது வேறுபிற பொருள் குறித்து நில்லா தெனக்கரண்க. வேறுபிறபொருள் குறித்து நில்லாமையாவது, ஆடை கொணர்ந்தவழி யது வேண்டாதான் மற்றையது கொண்டுவா வென்றால் அதற்கினமாகிய ஆடையையே கொண்டுவா வென்னுங் கருத்தினனாதலன்றி வேறுபிற பொன்னையும் மணியையுங் கொண்டுவா வென்னுங் கருத்தினன் அல்லனாதல்.

இனி, இவ்விடைச்சொல் பெயர்க்கு முதனிலையாய் வருதலன்றி, மற்றையாடை, மற்றைப்பொருள் எனவும் வரும். மற்றையது, மற்றையஃது, மற்றையவன் 'மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்' 'களவல்ல மற்றைய தேற்றா தவர்', 'மற்றைய நோக்கா தடிதொறும் வான் பொருள், எனப் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் முதனிலையாய் வருதலே பெரும்பான்மையாதலால் மற்றையெனப் பிரித்தோதாது, மற்றையதென ஒன்றாகக் கூறினார். இனி, இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி, மேலைச்சூத்திரத்துள் வினைமாற்றெனவும் பிறிதெனவும் பொதுப்படக் கூறினதினாலே, இனவினை மாற்றும் பிறிதுமென இச்சூத்திரத்தாற் புறனடைகொடுத்துக் காத்தாரெனக் கூறுவாருமுளர். அது இந்நூலுடையார் கருத்தாயின், இனமென்னு மோர் சொல்லுக்காக ஒரு சூத்திரஞ் செய்து புறனடை கொடுப்பின்

**"சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்**
**செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்**
**திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்"**

எனக் கூறிய சூத்திர விலக்கணத் தருமையையும் இவ்வுரைகாரர் கல்வியின் பெருமையையும் இச்சூத்திரம் நனிதவ நன்கு விளக்கிறென்க, என்னெனின்,

**"இனவினைமாற்றும் பிறிது மற்றசைநிலை"**

எனச் சூத்திரஞ் சுருங்கச்செய்து, மற்று என்பதை இடைநிலை மொழியாக வைத்து, ஏனையீரிடத்தும் நடந்து பொருளை மற்று இனவினை மாற்று மினப்பிறிது மசைநிலையுமாமென நண்ண

வைத்துத் தாப்பிசைப் பொருள்கோளாக்கின் அமையு மாதலால், அது கருத்தன்றென்க. இதனுள் நின்ற உம்மை யெதிரதுதழுவி யெண்ணி நிற்றலால், இனமென்பதைப் பிறிதென்பதனோடுங் கூட்டுக. "மற்றைய தென்னுங் கிளவி தானே – சுட்டுநிலை யொழிய வினங்குறித் தன்றே" என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– மற்றையது என்பது** – 'மற்றையது' எனப் (பெயருக்கு முதனிலையாய்) வரும் 'மற்றை' என்னும் இடைச்சொல், **சுட்டியதற்கினம்** – முன் சுட்டினபொருளை ஒழித்து அதற்கு இனமான பொருளைக் குறிக்கும்.

**உ–ம் :–**

இரண்டு ஆடை உள்ளவிடத்து ஒன்றைக் கண்டு வேண்டாதவன் 'மற்றையது கொண்டுவா' என்றதனால், அதற்கு இனமாகிய ஆடையையே குறித்து நிற்றல் காண்க.

**குறிப்பு :–**

'மற்று' 'மற்றை' என்பன வெவ்வேறு தனிச்சொற்களாம்; ஒன்று மற்றொன்றின் விகாரமன்று; இனி, இச்சூத்திரத்தை முற்சூத்திரத்திற்குப் புறனடையாகக் கொண்டு, மற்றையது என்பது – மற்றையது என்னும் பொருளாகிய வினைமாற்றும் பிறிதும், சுட்டியதற்கு இனம் – கருதியதற்கு இனமாகிய மறுதலை வினையும் இனமாகிய பிறிதுமாம் எனப் பொருள் கூறுதலுமாம்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– மற்றையது என்பது** – மற்றையதென்னும் பொருளாகிய வினைமாற்றும் பிறிதும், **சுட்டியதற்கு இனம்** – கருதியதற்கு இனமாகிய மறுதலை வினையும் இனமாகிய பிறிதுமாம், எ–று.

முன்னுதாரணங்களுள், நல்வினையை விரைந்தறிவாம் எனக் கருதியதற்கு இனமாகிய வினைமாற்றாவது, விரையாதறிவா மென்பது ஊழொன்றெனக் கருதியதற்கு இனமாகிய பிறிதாவது ஊழல்லதொன் றென்பது.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– மற்றையது என்பது** – மற்றையதென்னும் பொருளாகிய வினைமாற்றும் பிறிதும், **சுட்டியதற்கு இனம்** – கருதியதற்கு இனமாகிய மறுதலை வினையும் இனமாகிய பிறிதுமாம். **எ – று.**

முன்னுதாரணங்களுள், நல்வினையை விரைந்தறிவாம் எனக் கருதியதற்கு இனமாகிய வினைமாற்றாவது, விரையாதறிவா

மென்பது; ஊழொன்றெனக் கருதியதற்கு இனமாகிய பிறிதாவது ஊழல்லதொன்றென்பது.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:— **மற்றையது என்பது** — மற்றையது என (ப் பெயர்க்கு முதனிலையாய்) வரும் மற்றை என்னும் இடைச்சொல், **சுட்டியதற்கு இனம்** — முன் சுட்டின பொருளை ஒழித்து அதற்கு இனமான பொருளைக் குறிக்கும்; எ—று.

உ—ம்.:—

இரண்டு ஆடை உள்ளவிடத்து ஒன்றைக் கண்டு வேண்டா தவன் 'மற்றையது கொண்டுவா' என்றால், அதற்கு இனமாகிய ஆடையையே குறித்து நிற்றல் காண்க.

ஒடு ஒடு என்பனபோல மற்று, மற்றை என்பனவும் வெவ்வேறு தனிச் சொற்களாம்; ஒன்று மற்றொன்றின் விகாரமன்று.

## பவானந்தம் பிள்ளை

இ—ள்.:— **'மற்றையது என்பது** — 'மற்றையது' எனப் பெயருக்கு முதனிலையாய் வரும் 'மற்றை' என்னும் இடைச்சொல், **சுட்டியதற்கு இனம்** — முன் சுட்டப்பட்ட பொருளொழிய அதற்கு இனயாகிய பொருளைக் குறித்து நிற்கும். எ—று.

இரண்டு ஆடை உள்ளவிடத்து ஒன்று கொணர்ந்தவழி அது வேண்டாதுவன் 'மற்றையது கொண்டு வா' என்றால் அதற்கினமாகிய ஆடையையே குறித்தல் காண்க.

'இவ்விடைச்சொல் பெயர்க்கு முதனிலையாய் வருதலன்றி மற்றையாடை மற்றைப்பொருள் எனவும் வரும். மற்றையது, மற்றைய, மற்றையான் எனப் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் முதனிலையாய் வருதலே பெரும்பான்மை யாதலால் மற்றையெனப் பிரித்தோதாது மற்றையது என ஒன்றாகக் கூறினார். இனி, இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி மேலைச் சூத்திரத்துள் வினைமாற் றெனவும் பிறிதெனவும் பொதுப்படக் கூறினதினாலே இனவினைமாற்றும பிறிதுமென இச்சூத்திரத்தாற் புறனடை கொடுத்துக் காத்தார் எனக் கூறுவாருமுளர். அது இந்நூலுடையார் கருத்தாயின், இனமென்னும் ஒரு சொல்லுக்காக ஒரு சூத்திரஞ்செய்து புறனடை கொடுப்பின், 'சில்வகையெழுத்தின்' (சூ.18) எனக் கூறிய சூத்திர இலக்கணத்தருமை கெடுமாதலால் அது கருத்தன்று' என்றார் இராமானுஜ கவிராயர்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

இ — ள்.:— **மற்றையது என்பது** — மற்றையது என்னும் பொருளாகிய

வினைமாற்றும் பிறிதும், **சுட்டியதற்கு**–குறிக்கப்பட்டதற்கு, **இனம்** – இனமாகிய வினைமாற்றும் பிறிதுமாம். **எ–று.**

(பொ–ரை.) மேற்கூறிய மற்றென்னு மிடைச் சொற் பொருள் மூன்றனுள் மற்றையதென்னும் பொருளாகிய வினைமாற்றும், இனமாகிய பிறிதும் ஆம். அன்றி வேறு வினைமாற்றும், வேறு பிறிதும் அல்லவாம்.

**உ–ம்.:–**

"மற்றறிவாம் நல்வினை."

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்"

இங்கு நல்வினையை விரைந்தறிவாமெனக் குறிக்கப்பட்டதற்கு விரையா தறிவாமெனவும், ஊழொன்றெனக் குறிக்கப்பட்ட தற்கு ஊழல்ல தொன்றெனவும் இனம் வந்தவாறு காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**மற்றையது என்பது** – மற்றையது என்னும் சொல், **சுட்டியதற்கு**– குறிக்கப்பட்டதற்கு, **இனம்** – இனமான பொருளை யுணர்த்தும்.

இரண்டு புத்தகங்கள் உள்ள விடத்து, ஒரு புத்தகத்தை ஒருவன் எடுத்துவரக்கண்டு, அதனை வேண்டாதவன், 'மற்றையது கொண்டுவா' என்றால், புத்தகங்களுள் வேறொன்றைக் குறிக்குமேயன்றி, வேறு பொருளைக் குறிக்காது

## மோசகு பொன்னையா

மற்றையென்னும் இடைச்சொல் சுட்டியதனை யொழி;த்துமூ அதற்கு இனமான பிரிதொன்றனைச் சுட்டும் எ–று.

மற்றை என்னும் இவ்விடைச்சொல் சுட்டப்படும் ஒன்றன்றி, அதற்கினமான வேறு ஒன்றேஒன்று உள்ளவிடத்தே வருமென்றும், மற்று என்னும் இடைச்சொல் வேறுள்ள பலவற்றுளொன்றைப் பொதுவாகக் குறிக்கும் எனவும் அறிக.

**ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினுந் தான்முந் துறும்.**

எனப் பலவற்றுள் ஒன்றை மற்று உணர்த்த, இவ்விடைச் சொல், இரண்டு மாடுகளுள் ஒன்று; இருவருள் ஒருவன் என

இவ்வாறு வழங்குதலையுங் காண்க. மற்றையது. மற்றையவன், மற்றையவள் என இவ்வாறு ஒருமையில் வழங்கும் மரபை உணர்த்த மற்றையது என முன்னிலையாய பெயரால் எடுத்துக் கூறிவைத்தார் என்க.

தொல்காப்பியரும்,

**மற்றைய தென்னுங் கிளவி தானே**
**சுட்டுநிலை யொழிய வினங்குறித் தன்றே,**

என அதனை 'மற்றையது' என முன்னிலையாய பெயராற் குறிப்பிட்டார். இடைச்சொற்கள் ஈறு திரிந்து நிற்றல் '**தம்மீறு திரிதலும் என்றதனால் அமைதியுறும்.** சேனாவரையரும் நச்சி னார்க்கினியரும் இதனை மற்றையென்னும் ஐகார வீற்றிடைச் சொல் என்றே குறிப்பிட்டனர். மயிலைநாதர் '**மற்றைய தென்னும் இடைச்சொல்**' என்றது பொருந்தாமை அறிக.

(15)

## 434. கொல்லே யைய மசைநிலைக் கூற்றே

**கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே**

kollē aiyam asainilaik kūṟṟē

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The particle 'kol'**

Doubt and expletive are the meanings of kol.

### ஒப்புமைப் பகுதி

**கொல்லே ஐயம்**

**(தொல். சொல்.: 268)**

**கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே**

**(இ.வி.: 269)**

**கொல்லே ஐயம்...**

**(மு.வீ.: 658)**

### மயிலை நாதர்

எ—ன், கொல்லென்னு மிடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.:— கொல்லென்னு மிடைச்சொல் ஒருபொருட்கண் ஐயப்பாடும் அசைநிலையுமான கூறுபாட்டதாம், எ—று.

வ—று.:—

'குற்றி கொல்லோ? மகன் கொல்லோ' என்பது ஐயம்.

[1]"பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்,

---

பாட வேறுபாடு.:—

1. பிரிவெள்ளி

**வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் [2]கேளனி"**
(கலி.11) என்பது அசைநிலை.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்**, கொல் என்னும் இடைச்சொல் இலக்கணம் **உணர்—ற்று.**

**இ—ள்.:–** கொல் என்பது இவ்விரண்டு பொருளையும் தரும் சொல்லாம், **எ—று.**

**வ—று.:–**

'**இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல்**' என்பது குற்றியோ மகனோ என்னும் பொருள் படவருதலின், **ஐயம்.**

**"பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநம் காதலர்**
**வருவர்கொல் வயங்கிழாய்"**

என்பது அசைநிலை.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** கொல்லென்னும் இடைச்சொல் வருமிடம் கூறுகின்றது.

**இ—ள்.:– கொல்லே** – கொல்லென்று சொல்லப்படும் இடைச்சொல், **ஐயம்** – ஒரு பொருளை ஐயப்பாடு செய்யும் பொருண்மைக் கண்ணும், **அசைநிலை** – அசைநிலைப் பொருண்மைக்கண்ணும், **கூற்றே** – ஆன இவ்விரு கூற்றின் கண்ணதாம், **எ—று.**

**உ—ம்.:–**

'குற்றிகொல்லோ? மகன்கொல்லோ?' என்பது **ஐயத்தின்** கண் வந்தது. 'பிரிவெண்ணிக்கொல்லோ' என்பது அசைநிலை.

## விசாகப் பெருமாளையர்

**இது,** கொல்லென்னுமிடைச்சொல் லிலக்கண முணர்த்துகின்றது,

**இ—ள்.:– கொல்** – கொல்லென்னு மிடைச்சொல்லானது, **ஐயம்** – ஐயப்பொருளிலும், **அசைநிலை** – அசைநிலைப்பொருளிலும் வருகிற, **கூற்று** – இடைச்சொல்லாம், **எ—று.**

**வ—று.:–**

'இவ்வுருக்குற்றி கொன்மகன்கொல்', என்பவை. ஐயம்– 'கற்றதனாலாய பயனென்கொல்', என்பது, அசைநிலை.

---

பாட **வேறுபாடு.:–**

**1. கேளினி**

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

கொல்லென்னு மிடைச்சொல்லின் செய்தி யாது?

கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.

(கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.)

**இ—ள்.:**— கொல்லென்பது ஐயப்பொருளையும் அசைநிலைப்பொருளையுந் தருமிடைச்சொல்லாம். **எ—று.**

**வ—று.:**—

(1) இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல். இங்பே குற்றியோ மகனோ என்னும் பொருளைத் தருதலால் ஐயம்.

(2) "கற்றதனா லாய பய னென்கொல்." இங்கே வேறுபொரு ளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

## முகவை இராமானுச கவிராயர்

இது, கொல்லென்னு மிடைச் சொல்லிலக்கண முணர்த்திற்று.

**இ—ன்.:** இவ்விரண்டு பொருளையுந் தருங் கொல்லென்னு மிடைச்சொல், **எ—று.** கூற்று—சொல்.

**வ—று.:**—

'இவ்வுருக் குற்றிகொல்லோ மகன்கொல்லோ' என்பது குற்றியோ மகனோ வென்னும் பொருள்பட நிற்றலின்—ஐயம், 'பிரி வெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர் வருவர் கொல்' என்பது—அசைநிலை, இவ்வசைநிலை **புதியனபுகுதல், மொழி யாததனையு முட்டின்றி முடித்தலென் பதினால்,** எல் என்னு மிடைச்சொல் 'எல்வளை' யெனப் பிரகாசத்தை யுணர்த்தலுங் கொள்க. 'கொல்லேயையும்', 'எல்லே யிலக்கம்' என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை** :— **கொல்** — 'கொல்' என்பது, **ஐயம்** —ஐயப் பொருளிலும், **அசைநிலை** — அசைநிலைப் பொருளிலும் வருகிற, **கூற்று** — (இடைச்) சொல்லாம்.

**உதாரணம் :**

1. "அவன் சாத்தன் கொல்? கொற்றன் கொல்? — இதில், சாத்தனோ? கொற்றனோ? என்னும் பொருளைத் தகுதலால், ஐயம்.

2. "கற்றதனா லாய பயனென்கொல்?" — இதில், வேறு பொரு ளில்லாமற் சார்த்தப்பட்டு நிற்றலால், அசைநிலை.

**குறிப்பு** :— இனி, ஒரோவிடத்து 'நீ கொல் செய்தாய்' என்பதில் நீயோ செய்தாய்? என வினாப்பொருளைத் தருதலுங் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– கொல்**–கொல்லென்பது, **ஐயம் அசைநிலைக் கூற்று** – ஐயப் பொருளையும் அசைநிலைப் பொருளையும் தருமிடைச்சொல்லாம், **எ–று.**

வ–று.:–

(1) **'இவ்வுருக் குற்றிகொன் மகன்கொல்'**. இங்கே குற்றியோ மகனோ என்னும் பொருளைத் தருதலால் ஐயம்.

(2) **"கற்றதனா லாய பயனென்கொல்"** இங்கே வேறு பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– கொல்** – கொல்லென்பது, – **ஐயம் அசைநிலைக் கூற்று** – ஐயப்பொருளையும் அசைநிலைப் பொருளையும் தருமிடைச் சொல்லாம்.

வ–று.:–

(1)இவ்வுருக் குற்றிகொன் மகன்கொல். இங்கே குற்றியோ மகனோ என்னும் பொருளைத் தருதலால் ஐயம்.

(2)"கற்றதனாலாயபயனென்கொல்" இங்கே வேறு பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– கொல்** – கொல் என்பது, **ஐயம்** – ஐயப்பொருளிலும், **அசை நிலை**–அசைநிலைப்பொருளிலும் வருகிற, **கூற்று** – (இடைச்) சொல்லாம்; **எ–று.**

உ–ம்.:–

(1) **'அவன் சாத்தன்கொல் கொற்றன் கொல்'**–இதில், சாத்தனோ கொற்றனோ என்னும் பொருளைத் தருதலால், **ஐயம்.**

(2) **"கற்றதனா லாய பயனென்கொல்"**–இதில், வேறு பொருளில்லாமல் நிற்றலால், அசைநிலை.

இனி, ஒரோவிடத்து **'நீகொல்செய்தாய்'** என்பதில், நீயோ செய்தாய்? என **வினாப்பொருளைத்** தருதலும் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– கொல்** – கொல்லென்பது, **ஐயம்** – ஐயப்பொருளையும், **அசைநிலை** – அசைநிலைப்பொருளையும், **கூற்று** – தருடைச்சொல்லாம். **எ–று.**

உ–ம்.:–

(1) இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல் – இங்கே குற்றியோ மகனோ என்னும் பொருளைத் தருதலால் ஐயம்.

(2) "கற்றதனா லாய பயனென்கொல்" – இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ – ள்.;– கொல்**–கொல் என்னும் இடைச் சொல்லானது, **ஐயம்**– ஐயம் பொருளிலும், **அசைநிலை**–அசைநிலைப் பொருளிலும் (வருகிற), **கூற்று** – இடைச் சொல்லாம். (எ–று)

(பொ – ரை.) கொல் என்பது ஐயம் முதலிய இரண்டு பொருளையும் தரும் சொல்லாம்.

**உ–ம்;–**

1. இவ்வுருக் குற்றிகொல் மகன் கொல்

குற்றியோமகனோ என்னும் பொருளைத் தருதலால், ஐயம்.

2. கற்றதனா லாய பயனென் கொல்.

வேறு பொருளின்றிச் சார்த்தப் பட்டு நிற்றலால், அசைநிலை.

## கா. நமச்சிவாய முதலியார்

**கொல்** – கொல் என்னும் இடைச்சொல்லானது, **ஐயம்** – ஐயப் பொருளிலும், **அசைநிலை** – அசைநிலைப் பொருளிலும் வருகின்ற, **கூற்று** – சொல்லாம்.

**உதாரணம்**

1. இவ்வுருக் குற்றி**கொல்** மகன் **கொல்** – ஐயம்.
2. கற்றதனா லாய பயனென்**கொல்** – அசைநிலை.

## மோசகு பொன்னையா

கொல் என்னும் இடைச்சொல் ஐயப் பொருளிலும் அசைநிலைப் பொருளிலும் வரும் சொல்லாம் எ–று.

எ–டு.:-

**நெடுந்தகை கழிந்தமை யறியா**
**தின்றும் வருங்கொல் பாணரது கடும்பே, –ஐயம்**
**அழிவ தெவன்கொலிப் பேதை யூர்க்கே6 –அசைநிலை**

இவ்வாசிரியர், அசைநிலையைப் புதியன புகுதலாகக் கூறினார். தொல்காப்பியர், '**கொல்லே யையும்**' என இதற்கு ஐயப்பொருள் ஒன்றே கூறினார்.

## 435. ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.

**ஒடுவும் தெய்யவும் இசைநிறை மொழியே.**

otuvum ṭeyyavum isainiṛai moḷiyē.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**'Otu' and 'teyya'**

'Otu' and 'teyya' are metrical expletives.

### ஒப்புமைப் பகுதி

**ஒடுவும் தெய்யவு ம்இசைநிறை மொழியே**

(இ.வி.: 272)

### மயிலை நாதர்

எ–ன், இவ்விரண்டிடைச் சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: இவ்விரண்டிடைச் சொல்லும் இசைநிறைத்தற்கண் வரும், எ – று.

வ – று.:–

1 "முதைப்புனங் கொன்ற ஆர்கலி உழவர் விதைக்குறு
வட்டி போதொடு பொதுள"

எனவும்,

2 "சொல்லேன் தெய்ய நின்னொடு பெயர்த்தே"

எனவும் வரும்.

### சங்கர நமச்சிவாயர்

எ–னின், ஒடு எனவும் தெய்ய எனவும் வரும் இடைச்சொல் இலக்கணம் உணர் – ற்று.

இ–ள்.: இவ்விரண்டும் இசைநிறைத்தற் பொருளைத் தரும் சொற்களாம், எ–று.

வ–று.:

1. "முதைப்புனங் கொன்ற ஆர்கலி உழவர் விதைக்குறு
வட்டி போதொடு பொதுள"

2. "சொல்லேன் தெய்வ நின்னொடு பெயர்த்தே"

எனவும் வரும்.

### கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், ஒடு தெய்ய என்னும் இரண்டு இடைச்சொல்லும் வருமிடம் கூறுகின்றது.

**இ–ள்.: ஒடுவுந் தெய்யவும்** – ஒடுவென்னும் இடைச் சொல்லும் தெய்யவென்னும் இடைச்சொல்லும், **இசைநிறை மொழியே** – இசை நிறைத்தற்கண் வரும் சொற்களாம், **எ–று.**

**உ–ம்.:**

**"முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்**

**விதைக்குறு வட்டி போதொடு போதுள"** (குறு.155),

**"சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்த்தே"**

என வரும்.

## விசாகப் பெருமாளையர்

**இது,** ஒடுதெய்ய என்கிற இடைச்சொற்களினிலக்கண முணர்த்துகின்றது,

**இ–ள்.:– ஒடுவுந்தெய்யவும்** – ஒடு தெய்ய என்கிற விரண்டும், **இசைநிறை** – இசைநிறைத்தற் பொருளைத் தருகிற, **மொழி**–சொற்களாம், **எ–று.**

**வ–று.:–**

'விதைக்குறுவட்டிற் போதொடுபொதுள' எனவும், 'சொல்லேன் றெய்யநின்னொடு பெயர்த்தே' எனவும் வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

இசைநிறைத்தற்பொருட்கண் வரும் இடைச்சொற்கள் யாவை?

ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.

(ஒடுவும் தெய்யவும் இசைநிறை மொழியே.)

**இ–ள்.:** ஒடு தெய்ய என்னுமிரண்டும் இசைநிறைத்தற்பொருளைத்தருஞ் சொற்களாம். **எ–று.**

**வ–று.:–**

"விதைகுறு வட்டிற் போதொடு பொதுள." எனவும், சொல்லேன்றெய்ய நின்னொடு பெயர்த்தே. எனவும் வரும்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** ஒடு, தெய்ய என்னுமிடைச் சொல்லிலக்கண முணர்த்திற்று.

**இ–ள்.:** இவ்விரண்டும் இசைநிறைத்த லென்னும் பொருளைத் தருஞ் சொற்களாம், **எ–று.**

**வ–று.:** 'விதைக்குறு வட்டில் போதொடு பொதுள' எனவும், 'சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்ந்தே' எனவும் வரும். இவை புதியன.

### கா. கோபாலாசாரியர்
### தி.கோ. ரங்காசாரியர்

உரை :– **ஒடுவும் தெய்யவும்** – 'ஒடு' 'தெய்ய' என்கிற இரண்டும், **இசைநிறை** – இசைநிறைப் பொருளைத்தருகிற, **மொழி** – இடைச்சொற்களாம்.

'விதைக்குறு வட்டில் போதொடு பொதுள'' எனவும், 'சொல்லேன் தெய்ய நின்னொடும் பெயர்த்தே'' எனவும் வரும்.

### ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **ஒடுவுந் தெய்யவும்** – ஒடு தெய்ய என்னு மிரண்டும், **இசைநிறைமொழி** – இசைநிறைத்தற்பொருளைத் தருஞ் சொற்களாம், எ–று.

வ–று.:–

**"விதைக்குறு வட்டிற் போதொடு பொதுள"** எனவும், **"சொல்லேன் றெய்ய நின்னொடுபெயர்த்தே"** எனவும் வரும்.

### வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– **ஒடுவும் தெய்யவும்** – ஒடு தெய்ய என்னுமிரண்டும், **இசைநிறைமொழி** – இசைநிறைத்தற்பொருளைத் தருஞ் சொற்களாம். எ–று.

வ–று.:–

''விதைத்குறுவட்டிற் போதொடுபொதுள.'' எ–ம். சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்த்தே. எ–ம் வரும்.

### வை.மு. சடகோபராமாநுசாசாரியார்
### சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– **ஒடுவும் தெய்யவும்** – ஒடு தெய்ய என்கிற இரண்டும், **இசைநிறை** – இசைநிறைப்பொருளைத் தருகிற, **மொழி** – இடைச் சொற்களாம்.

உ–ம்.:–

**"விதைக்குறு வட்டில் போதாடு பொதுள"** எனவும், **"சொல்லேன் தெய்ய நின்னொடும் பெயர்த்தே"** எனவும் வரும்.

### பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– **ஒடுவுந் தெய்யவும்** – ஒடு தெய்ய என்னு மிரண்டும், **இசை நிறைமொழி** – இசைநிறைத்தற்பொருளைத் தரும் இடைச்சொற்களாம். எ–று.

உ–ம்.:–

''விதைக்குறு வட்டிற் போதொடு பொதுள'' ''சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்த்தே''

## கா. நமச்சிவாய முதலியார்

**ஒடுவும் தெய்யவும்** – ஒடு தெய்ய என்னும் இரண்டும், **இசைநிறை** –இசை நிறைத்தற் பொருளைத் தருகின்ற, **மொழி** – இடைச்சொற்களாம்.

**உதாரணம்**

'விதைக்குறு வட்டி போதொடு பொதுள'
'சொல்லேன் தெய்ய நின்னொடு பெயர்த்தே'

## மோசசு பொன்னையா

ஒடு, தெய்ய என்னும் இரண்டு இடைச்சொற்களும் இசைநிறைப் பொருளில் வருவனவாம் எ–று.

எ–டு.:-

1. *முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்*
   *விதைக்குறு வட்டி போதொடு பொதுள1 –ஒடு*

2. *புதுநல னிழந்த புலம்புமாருடையள்*
   *உதுக்காண் டெய்ய வுள்ளல் வேண்டும்2 –தெய்ய*

இவை தொல்காப்பியராற் கூறப்படவில்லை.

(17)

## 436. அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே.

**அந்தில் ஆங்கு அசைநிலை இடப்பொருள் அவ்வே.**

antil āṅku asainilai itapporuḻ avvē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**antil and anku**

Antil and anku are sometimes expletives, and sometimes words denoting 'place'

## ஒப்புமைப் பகுதி

**அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்று**
**ஆயிரண்டாகும் இயற்கைத் தென்ப**

**(தொல். சொல்.: 267)**

**அந்தி லாங்க அசைநிலை அவற்றுள்**
**அந்தில் இடப்பொருட் டாகலும் உரித்தே**

**(இ.வி.: 273)**

**அந்திலாங் கசைநிலை இடப்பொரு ளவ்வே**

**(மு.வீ.: 657)**

## மயிலை நாதர்

**எ—ன், இவ்விரண்டிடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.**

**இ—ள்.:—** இவ்விரண்டிடைச்சொல்லும் அசைநிலையாயும் இடப்பொருள வாயும் வரும், **எ — று.**

**வ — று.:—**

**"அந்திற் கச்சினன் கழலினன்"** (அகநா.76) என்பது அசைநிலை ;

**"வருமோ சேயிழை யந்திற் கொழுநற் காணிய"** (குறுந்.293) என்பது அவ்விடத்தென இடப்பொருட்டாய் வந்தவாறு.

**"ஆங்கத், திறனல்ல யாங்கழற யாரை நகுமிம், மகனல்லான் பெற்ற மகன்"** (கலி.86) என்பது அசைநிலை;

**"ஆங்காய் காயினு மாகக் காண்டக"** (முருகு.250, –பி–ம்.) என்பது இடம்.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** அந்தில் எனவும் ஆங்கு எனவும் வரும் இடைச்சொல் இலக்கணம் **உணர் — ற்று.**

**இ—ள்.:** இவ்விரண்டு இடைச்சொல்லும் அசைநிலைப் பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும், **எ — று.**

**வ—று.:—**

"அந்திற் கழலினன் கச்சினன்"

என்பது, **அசைநிலை.**

"வருமே, சேயிழை அந்திற் கொழுநற் காணிய"

என்பது அவ்விடத்து என்னும் பொருள் தருதலின், இடம்.

**"ஆங்கத் திறனல்ல யாம் கழற"**

என்பது அசைநிலை. இதனுள் ஆங்கு என்னும் அசைநிலை ஆங்க என இறுதி விகாரமாய் நின்றது.

"ஆங்காங் காயினும் ஆக" என்பது, **இடம்**

## கூழங்கைத் தம்பிரான்

**கு—ம்,** அந்தில் ஆங்கு என்னும் இவ்விரண்டு இடைச்சொல்லும் வருமிடம் கூறுகின்றது.

**இ—ள்.:— அந்திலாங்கு—**அந்தில் ஆங்கு என்னும் இவ்விரண்டு இடைச்சொல்லும், **அசைநிலை** – அசைநிலைப் பொருண்மைக் கண்ணும், **இடப்பொருளவ்வே** – இடப்பொருண்மைக்கண்ணும் வரும், **எ—று.**

உ—ம்.:—

**"அந்திற், கழலினன் கச்சினன்"** (அகம்.76) என்பது **அசைநிலை. "வருமோ சேயிழை யந்திற், கொழுநற் காணி"** (குறு.293) என்பது அவ்விடத்தென வந்து **இடப்பொருட்டு "ஆங்கத், திறனல்ல யங்கழற யாரை நகுமிம், மகனல்லான் பெற்றமகன்"**(கலி.86) என்பது **அசைநிலை. "ஆங்காங் காயினுங் காண்டக"** என்பது **இடம்.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** அந்தில் ஆங்கு என்கிற இடைச் சொற்களி னிலக்கண முணர்த்து கின்றது,

**இ—ள்.:— அந்தில்** — அந்திலென்பதும், **ஆங்கு** — ஆங்கென்பதும், **அசைநிலை** — அசைநிலைப் பொருளையும், **இடப்பொருள்**—இடப்பொருளையுந் தருவனவாம், **எ—று.**

**வ—று.:—**

*'அந்திற் கழலினன் கச்சினன்' என்பது, அசைநிலை. 'சேயிழை* யந்திற் கொழுநற்காணிய', என்பது அவ்விடத் தென்னும் பொருளைத் தருதலால், இடம். 'ஆங்கத்திறனல்ல யாங்கழற', என்பது அசைநிலை. 'ஆங்காங்காயினுமாக' என்பது, இடம்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அசைநிலை இடப்பொருள் இரண்டற்குமுரிய இடைச்சொற்ள் யாவை?

அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே.

(அந்தில் ஆங்க அசைநிலை இடப்பொருளவ்வே.)

**இ—ள்.:—** அந்தில் ஆங்க என்னும் இவ்விரண்டிடைச் சொல்லும் அசை நிலைப் பொருளவாயும் இடைப் பொருளவாயும் வரும். **எ—று.**

ஆங்கவென்னு மிடைச்சொல் அகரவீறு குறைந்து நின்றது. இரட்டுற மொழிதலால் ஆங்கென்னுஞ் சொல் ஆங்கவென்னுஞ்சொல்லையும் ஆங்க என்னுஞ் சொல்லையுங் குறித்து நின்றது எனினும் பொருந்தும்.

**வ—று.:—**

(1) "அந்திற் கழவினன் கச்சினன்." இங்கே வேறு பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

"வருமே—சேயிழைது யந்திற் கொழுநற் காணிய." இங்கே அவ்விடத்துவரும் என்னும் பொருளைத் தருதலால் இடம்.

(2) "ஆங்கக் குயிலு மயிலுங்காட்டு." இங்கே வேறு பொருளின்றி சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

"ஆங்காங்காயினுமாகா." இங்கே அவ்வவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால் இடம்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, அந்தில் ஆங்கு என்னுமிடைச் சொல் லிலக்கண முணர்த்திற்று.

இ–ள்.: இவ்விரண்டிடைச் சொல்லும் அசைநிலையாகியும் இடப்பொருளவாகியும் வரும், எ – று.

வ–று.:–

'அந்திற் கழலினன் கச்சினன்' என்பது அசைநிலை. 'வருமே சேயிழை யந்திற் கொழுநற் காணிய' என்பது அவ்விடத் தென்னும் பொருள்படநிற்றலால் – இடம், 'ஆங்கத் திறனல்ல யாங்கழற' என்பது அசைநிலை. இது ஆங்கு என்பது ஆங்க என ஈறுதிரிந்து நின்றது. 'ஆங்காங் காயினு மாக' என்பது இடம்.

**"அந்தி லாஅங் கசைநிலைக் கிளவியென்**
**றாயிரண் டாகு மியற்கைத் தென்ப"**

என அந்தில் என்பது ஆங்கு என்னும் இடப்பொருளும் அசை நிலையுமாமென்றதை, இவர் அந்திலும் ஆங்கும் இடப் பொருளுமசை நிலையுமா மெனச் சூத்திரஞ் செய்தார். அது, ஆசிரியர் கருத்தன்றென்பதை யவர் சூத்திரத்தாலும் ஆங்கு என்பது, இடச் சுட்டுப் பெயர்ச்சொல்லாதலாலும், ஆங்கு அசைநிலை யெனக் கூறி ஆங்க எனவுதாரணங் காட்டியதி னாலும் பொருந்தாதென்க. இனி, ஆங்க என்னும் அகர வீற்றிடைச்சொல் அசைநிலையெனக் கொளின், அமையும். என்னெனின், 'ஆங்கவுரையசை' எனக் கூறியதினாலும், 'ஆங்கக் குயிலு மயிலுங் காட்டி' எனவும் 'ஆங்கத் திறனல்ல யாங்கழற' எனவும் பயின்று வருதலானு மென்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– அந்தில் ஆங்கு – இவ்விரண்டு சொல்லும், **அசைநிலை இடப்பொருள** – அசைநிலைப் பொருளனவாயும் இடப்பொருளனவாயும் வரும்.

**உதாரணம் :**

1. "அந்திற் கழலினன் கச்சினன்" – இதில், வேறு பொருள் இல்லாததனால், அசைநிலை.

2. "வருமே சேயிழை யந்திற் கொழுநற் காணிய" – இதில், அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால், இடம்.

1. "ஆங்கத் திறனல்ல யாங்கழற" – இதில், வேறுபொருளில் லாததனால், அசைநிலை.

2. "ஆங்காங் காயினு மாக" – இதில், அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால், இடம்.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:— அந்தில் ஆங்கு** — அந்தில் ஆங்கு என்னும் இவ்விரண்டிடைச் சொல்லும், **அசைநிலை இடப்பொருள்** — அசைநிலைப் பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும், எ — று.

**வ—று.:—**

(1) **"அந்திற் கழலினன் கச்சினன்"** இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

**"வருமே—சேயிழை யந்திற் கொழுநற்காணிய"** இங்கே அவ்விடத்து வரும் என்னும் பொருளைத் தருதலால் இடம்.

(2) **"ஆங்கத் திறனல்ல யாங் கழற"** இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை. இதனுள், ஆங்கென்னுமசைநிலை ஆங்கவென இறுதி விகாரமாய் நின்றது.

**"ஆங்காங்காயினுமாக"** இங்கே அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால் இடம்.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்.:— **அந்தில் ஆங்கு** — அந்தில் ஆங்கு என்னும் இவ் விரண்டிடைச் சொல்லும், — **அசைநிலை இடப்பொருள** — அசைநிலைப் பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும். எ — று.

**வ—று.:—**

(1)"அந்திற்கழலினன் கச்சினன்" இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

"வருமே — சேயிழை யந்திற் கொழுநற் காணிய" இங்கே அவ்விடத்து வரும் என்னும் பொருளைத் தருதலால் இடம்.

(2)"ஆங்கத் திறனல்ல யாங் கழற" இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை. இதனுள் ஆங் கென்னுமசைநிலை ஆங்கவென இறுதிவிகாரமாய் நின்றது.

"ஆங்காங்காயினுமாக" இங்கே அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால் இடம்

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.: **அந்தில் ஆங்கு** — இவ்விரண்டு சொல்லும், **அசைநிலை இடப்பொருள** — அசைநிலைப்பொருளனவாயும் இடப்பொருளனவாயும் வரும்; எ—று.

**உ–ம்.:–**

(1) **“அந்தில்கழலினன் கச்சினன்”**– இதில், வேறுபொருள் இல்லாததனால், **அசைநிலை;** “(2) **“வருமே சேயிழை அந்தில் கொழுநற்காணிய”**–இதில், அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால், இடம்.

(1) **“ஆங்கத்திறனல்ல யாம்கழற”**–இதில், வேறுபொருள் இல்லாததனால், **அசைநிலை;**

(2) **“ஆங்காங் காயினுமாக”**–இதில், அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால், **இடம்.**

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– அந்தில் ஆங்கு** – அந்தில் ஆங்கு என்னும் இவ்விரண்டிடைச்சொல்லும், **அசைநிலை இடப்பொருள்** – அசைநிலைப் பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும். எ–று.

உ–ம்.:–

(1) “அந்திற் கழனினன் கச்சினன்” – இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

“வருமே – சேயிழை யந்திற் கொழுநற் காணி” – இங்கே அவ்விடத்து வரும் என்னும் பொருளைத் தருதலால் இடம்.

(2) “ஆங்கத் திறனல்ல யாங் கழற” – இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை. இதனுள், ஆங்கென்னுமசைநிலை ஆங்கவென இறுதிவிகாரமாய் நின்றது.

“ஆங்காங்காயினு மாக” இங்கே அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால் இடம்.

‘பொருளவே’ என்பது ‘பொருளவ்வே’ என விரித்தல் விகாரமாயிற்று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ – ள்.:– அந்தில்** – அந்தில் என்பதும், **ஆங்கு** – ஆங்கு என்பதும், **அசைநிலை இடப்பொருள்** – அசைநிலைப் பொருளையும் இடப்பொருளையும் தருவனவாம்.எ–று

**பொ – ரை.;–** அந்தில் ஆங்கு என்னும் இரண்டிடைச் சொல்லும் அசைநிலைப்பொருளவாயும், இடப்பொருளாவாயும் வரும்.

**உ–ம்.:–**

1. “அந்திற் கழலினன் கச்சினன்”

ஆங்கத் திறனல்ல யாங்கழ௩"

வேறு பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால், அசைநிலை.

2. "சேயிழை யந்திற் கொழுநற் காணிய ஆங்காங் காயினு மாக

அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால், இடம்.

## கா. நமசிவாய முதலியார்

**அந்தில்** – அந்தில் என்பதும், **ஆங்க** – ஆங்க என்பதும், **அசைநிலை** – அசைநிலைப் பொருளையும், **இடப் பொருள்** – இடப்பொருளையும் தருவனவாம்.

**உதாரணம்**

1. 'அந்திற் கச்சினன் கழலினன்' – அசைநிலை
   'ஆங்கத் திறனல்ல யாங்கழற'
2. ' வருமே சேயிழை அந்திற், கொழுநற்காணிய' – இடம்.
   'ஆங்காங் காயினு மாக'

## மோசசு பொன்னையா

அந்தில், ஆங்கு என்னும் இரண்டு இடைச் சொற்களும் அசைநிலை, இடம் ஆகிய பொருட்களில் வரும் எ–று.

இடப்பொருள், அவ்விடத்தில்–என வருவதாம்.

எ-டு.

அந்தில்

1. அந்திற் கழலினன் கச்சினன்3 அசைநிலை
2. வருமே சேயிழை யந்திற் கொழுநர் காணிய
   இடம்

ஆங்கு

1. ஆங்கத் திறனல்ல யாங்கழற அசைநிலை
2. ஆங்காங் காயினு மாக இடம்

தொல்காப்பியர்,

**அந்தி லாங்க வசைநிலைக் கிளவியென்**

**றாயிரண் டாகு மியற்கைத் தென்ப,**

என ஒதி 'அந்தில் என்பது ஆங்கு என்னும் இடப்பொருளும் அசைநிலையுமாம் என்றதை, இவர் அந்திலும் ஆங்கும் இடப்பொருளும் அசைநிலையுமாம் எனச் சூத்திரஞ் செய்தார்' தொல்காப்பியர், 'ஆங்க வுரையசை' எனக் கூறுவதால் 'ஆங்க' என்பதே இடைச்சொல்லாவதன்றி ஆங்கு என்பது இடைச்சொல்லாகாது என்பதும், 'ஆங்காங் காயினு மாக' என மேற்காட்டப்பட்ட எடுத்துக்காட்டில் ஆங்கு என்பது இடப்பொருள் தரும் முதனிலை நீண்ட சுட்டுப்பெயரே என்பதும் புலனாம்.

ஆங்க என்னும் இடைச்சொல் உரையசைப் பொருளில் வரும் என்றார் தொல்காப்பியர். சேனாவரையர், கட்டுரைக்கண் அசைநிலையாய் வரும்'5 என்றார். நச்சினார்க்கினியர், "**சிறிது பொருள் உணர்த்துவனவற்றை 'உரையசை' என்றும், பொருளுணர்த்தாது சொற்களை அசைத்து நிற்பனவற்றை அசைநிலை என்றுங் கூறுதல் ஆசிரியர் கருத்து ஆதலை இரண்டு அதிகாரத்தும் கண்டு கொள்க**"6 என்றுரைத்தார். இவ்வாசிரியர் அடுத்துவரும் நூற்பாவில், உரையசையின் பொருள் கேண்மின் என்பது7 என்பார். இவற்றோடு குற்றியலிகரம் பற்றிய ஆராய்ச்சித் தெளிவுரையையும்8 கூர்ந்து நோக்கித் தெளியின், தொல்காப்பியர் குறிப்பிட்ட ஆங்க என்னும் அசைநிலைக் கிளவி இக்காலத்தில் 'ஏன்ங்க', 'என்னாங்க' என வழங்குகின்றமை புலனாம்.

(18)

## 437. அம்ம வுரையசை கேண்மினென் றாகும்.

**அம்ம உரைஅசை கேண்மின் என்று ஆகும்.**

amma uraiyasai kēṇmiṉ eṉṟu ākum.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The Particle 'amma'**

'Amma' is either an expletive or has the force of you listen.

### மயிலை நாதர்

எ–ன், அம்மவென்னுமிடைச் சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– அம்மவென்னுமிடைச்சொல், உரையசையாயும் கேண்மினென்னு முன்னிலை ஏவற்பொருட்கண்ணதாயும் வரும், எ–று.

வ–று.:–

"**செயனின்ற பண்ணினுட் செவிச்சுவைக் கொள்ளாமை, நயனின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும், பயனின்று மன்றம்ம காமம்**" (கலி.142) என்பது உரையசை. "**அம்ம வாழிதோழி**" (நற்–158; குறுந்.104; ஐங்குறு–31–40) என்பது கேளாயென்னும் பொருட்கண் வந்தது.

### சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** அம்ம என்னும் இடைச்சொல் இலக்கணம் **உணர்–**ற்று.

**இ—ள்.:—** அம்ம என்பது உரையசைப் பொருளதாயும், ஒன்று சொல்வன் கேண்மின் என்னும் ஏவற்பொருளதாயும் வரும், **எ—று.**

**வ —று. :—**

> **"அதுமற் றம்ம"** என்பது, **உரையசை.** இது செய்யுட்கண் வரினும் அச்செய்யுளின் பொருட்டன்றித் தான் அடைந்த br hšÈ‹ bghUŒL t Uj È‹ ci uai rahÆÅW **"அம்ம வாழி தோழி"** என்பது ஒன்று சொல்வன் கேள் என்னும் **ஏவற்பொருள்** தந்தது.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** அம்மவென்னும் இடைச்சொல் வருமிடம் கூறுகின்றது.

**இ—ள்.:— அம்ம** — அம்மவென்று சொல்லப்படும் இடைச்சொல், **உரையசை** — உரையசைக்கண்ணது ஆயினும், **கேண்மினென்றாகும்** — கேண்மின் என்று முன்னிலையேவற் பொருட்கண்ணதாயும் வரும், **எ—று.**

**உ—ம்.:—**

> **"பயனின்று மன்றம்ம காமம்"** (கலி.142) என்பது அசைநிலை. **"அம்ம வாழி தோழி"** (நற்.158, குறு.104; ஐங் 31 – 40) எனக் **கேளென்னும்** பொருட்கண் வந்தது.

## விசாகப் பெருமாளையர்

**இது,** அம்மவென்னு மிடைச்சொல்லிலக்கண முணர்த்து கின்றது,

**இ—ள்.:— அம்ம** — அம்மவென்பது, **உரையசை** — உரையசைப் பொருளைத்தருவதும், **கேண்மினென்று** — ஒன்று சொல்லுவேன் கேண்மினென்கிற வேவற்பொருளைத் தருவதும், **ஆகும்**—ஆகும், **எ—று.**

**வ—று.:—**

> 'அது மற்றம்ம'வென்பது உரையசை. **'அம்மவாழி தோழி'**யென்பது கேளென்கிற ஏவற்பொருளைத் தந்தது,

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அம்மவென்னு மிடைச்சொல் என்னபொருளில் வரும்?

அம்ம வுரையசை கேண்மினென் றாகும்.

(அம்ம உரையசை கேண்மின் என்று ஆகும்.)

**இ—ள்.:—** அம்மவென்பது உரையசைப்பொருளைத் தருவதும் ஒன்றுசொல்வேன் கேண்மினென்னும் எவற்பொருண்மையைத் தருவதுமாம். **எ—று.**

வ–று.:–

(1) "அதுமற்றம்ம." இங்கே கட்டுரைக்கண் வருதலால் உரையசை. கட்டுரை–புனைந்துரை.

(2) "அம்ம வாழி தோழி." இங்கே ஒன்றுசொல்வேன் கேள் என்னும் ஏவற்பொருளில் வந்தது.

## முகவை இராமானுச கவிராயர்

இது, அம்மவென்னு மிடைச்சொல்லிலக்கண முணர்த்திற்று.

இ–ள்.:– அம்ம என்னுமிடைச்சொல் உரையசைப் பொருளதாகியும் ஒன்றுசொல்வேன் கேளுமென்னும் ஏவற் பொருளதாயும் வரும், எ–று.

வ–று.:–

'அதுமற்றம்ம'–என்பது, உரையசை பேச்சிடத்து வருமசை – உரையசை, அம்மவாழிதோழி – என்பது – ஒன்றுசொல் வேன் கேள் என்னு மேவற் பொருளைத் தந்து நின்றது. (சூ) 'அம்ம கேட்பிற்கும்' என்ற ஆசிரியர், அசைநிலையையு மிலேசினாற் றழுவினாரெனக் காண்க. அம்ம ஆகுமென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– அம்ம** – 'அம்ம' என்னும் இடைச்சொல், **உரையசை** – உரையசைப் பொருளதாகியும், **கேண்மின் என்று** – (ஒன்று சொல்லுவேன்) கேளும் என்ற ஏவற்பொருளதாகியும், **ஆகும்** – வரும்.

குறிப்பு :– உரையசை – பேச்சிடத்துவரும் அசை.

**உதாரணம் :**

1. 'அதுமற்றம்ம' – இதில், வேறுபொருளில்லாமற் கட்டுரையில் வருதலால், உரையசை. (கட்டுரை – பேச்சு).
2. 'அம்மவாழி தோழி' – இதில், ஒன்று சொல்வேன் கேள் என்னும் ஏவற்பொருளதாய் வந்தது.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **அம்ம** – அம்மவென்பது, **உரையசை** – உரையசைப் பொருளைத் தருவதும், **கேண்மின் என்று ஆகும்** – ஒன்று சொல்லுவேன் கேண்மினென்னும் ஏவற்பொருளைத் தருவதுமாம், எ– று.

வ–று.:–

(1) **"அதுமற்றம்ம"** இங்கே கட்டுரைக்கண் வருதலால் உரையசை.

(2) **"அம்ம வாழி தோழி"** இங்கே ஒன்றுசொல்லுவேன் கேள் என்னும் ஏவற்பொருளில் வந்தது.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்.:— அம்ம — அம்மவென்பது, — **உரையசை** — உரையசைப்பொருளைத் தருவதும், — **கேண்மின் என்று ஆகும்** — ஒன்று சொல்லுவேன் கேண்மினென்னும் ஏவற்பொருளைத் தருவதுமாம். எ — று.

வ—று.:—

(1)"அதுமற்றம்ம" இங்கே கட்டுரைக்கண் வருதலால் உரையசை.

(2)"அம்மவாழிதோழி" இங்கே ஒன்றுசொல்வேன் கேள் என்றும் ஏவற்பொருளில் வந்தது.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:— **அம்ம** — அம்ம என்னும் இடைச்சொல், **உரையசை** — உரையசைப் பொருளதாகியும், **கேண்மின் என்று** — (ஒன்றுசொல்வேன்) கேளும் என்ற ஏவற்பொருளதாகியும், **ஆகும்** — வரும்; எ — று.

உரையசையை '**வாக்யாலங்காரம்**' என்பர் வடநூலார்.

உ—ம்.:—

(1) '**அதுமற்றம்ம**'— இதில், வேறுபொருளில்லாமல் கட்டுரையில் வருதலால், **உரையசை**. (கட்டுரை — பேச்சு.)

(2) '**அம்ம வாழிதோழி**' — இதில், ஒன்று சொல்வேன் கேள் என்னும் **ஏவற்பொருளதாய்** வந்தது.

## பவானந்தம் பிள்ளை

இ—ள்.:— **அம்ம** — அம்வென்னும் இடைச்சொல், **உரையசை** — உரையசைப் பொருளைத் தருவதும், **கேண்மின் என்று ஆகும்** — ஒன்றுசொல்லுவேன் கேண்மினென்னும் ஏவற்பொருளைத் தருவதுமாம். எ—று.

உ—ம். :—

(1). "அதுமற்றம்ம" — இங்கே கட்டுரைக்கண் வருதலால் உரையசை.

(2) "அம்ம வாழி தோழி" இங்கே ஒன்றுசொல்வேன் கேள் என்னும் ஏவற்பொருளில் வந்தது.

## கா. நமச்சிவாய முதலியார்

**அம்ம** — அம்ம என்பது, **உரையசை** — உரையசைப் பொருளைத் தருதலும், **கேண்மின் என்று** — (ஒன்றுசொல்லுவேன்) கேண்மின் என்னும் ஏவற்பொருளைத் தருவதும், **ஆகும்** — ஆகும்.

**உதாரணம்**

1. அதுமற்றம்ம – உரையசை.
2. அம்ம வாழி தோழி – கேள் என்னும் ஏவற்பொருளைத் தந்தது

## மோசசு பொன்னையா

அம்ம என்னும் இடைச்சொல், ஒன்று சொல்வேன் கேளும் என்னும் உரையசைப் பொருளில் வரும் எ–று.

எ-டு.:-

அம்ம வாழி தோழி1
அம்ம என்னும் இடைச்சொல் 'உரையசைப் பொருளதாயும், ஒன்று சொல்வன் கேண்மின் என்னும் ஏவற் பொருளதாயும் வரும் என உரைவகுத்தார் சங்கரநமச்சிவாயர், உரையசையின் விளக்கமே 'கேண்மினென்றாகும்' என்பது– மின் என்னும் முன்னிலையசைச் சொல்லையும் கூட்டி முடித்துக் கூறுவதாற் பெறப்படும், தொல்காப்பியர், 'அம்ம கேட்பிக்கும்'2 என்றே கூறினார்.

(19)

## 438. மாவென் கிளவி வியங்கோ ளசைச் சொல்.

**மா என் கிளவி வியங்கோள் அசைச் சொல்.**

mā eṉ kiḻavi viyaṅkōḷ asais sol.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The optative Particle**

The word ma is an expletive attached to the Optative mood.

## ஒப்புமைப் பகுதி

**மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்**
**(தொல். சொல்.: 273)**

**மாவென் கிளவி வியங்கோ ளசைச் சொல்**
**(இ.வி.: 275)**

**மாவென் கிளவி வியங்கோ ளசைச் சொல்**
**(மு.வீ.: 662)**

## மயிலை நாதர்

எ— ன், மாவென்பது இப்பொருட்கண் வருமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.:— மாவென்னுமிடைச்சொல் வியங்கோட்கண் அசைச் சொல்லாய் வரும், எ— று.

வ—று.:—

[1]**"மாயக் கடவுட் குயர்கமா வலனே", "உப்பின்று புற்கை யுண்கமா கொற்கை யானே"** (தொல். இடை.25, இள. சே. ந. மேற்.) என வியங்கோட்கண் அசைச்சொல்லாய் வந்தவாறு.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** மா என்னும் இடைச்சொல் இலக்கணம் **உணர்— ற்று.**

**இ—ள்.:** மா என்னும்சொல் வியங்கோளின்கண் வரும் அசைச்சொல்லாம், எ—று.

வ —று.:—

"மாயக் கடவுட் குயர்கமா வலனே"

"உப்பின்று, புற்கை உண்கமா கொற்கையோனே" என வரும்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** மாவென்னும் இடைச்சொல் வருமிடம் கூறுகின்றது.

**இ—ள்.:— மாவென் கிளவி** — மாவென்று சொல்லப்படும் இடைச்சொல், **வியங்கோ ளசைச் சொல்** — வியங்கோட்கண் அசைச்சொல்லாய் வரும், எ—று.

உ—ம்.:—

... ... **"உப்பின்று, புற்கை யுண்கமா கொற்கை யோனே"** என வியங்கோட்கண் அசையாய் வந்தது.

## விசாகப்பெருமாளையர்

**இ—ள்.:— மாவென்கிளவி** — மாவென்னுஞ் சொல், **வியங்கோள்**— வியங்கோளிடத்து வருகிற, **அசைச்செல்** — அசைச்சொல்லாகும், **எ—று.**

வ—று.:—

'உப்பின்று புற்கை யுண்கமா கொற்கை யோனே.'

---

பாட **வேறுபாடு**.:—

1. காலக்கடவுட்கு

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

மாவென்னுமிடைச்சொல் என்னபொருண்மையில் வரும்?

மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

(மா என் கிளவி வியங்கோள் அசைச்சொல்.)

**இ–ள்.:–** மாவென்னுமிடைச்சொல் வியங்கோளைச் சார்ந்து வரும் அசைச்சொல்லாம். **எ–று.**

**வ–று.:–**

"உப்பின்று–புற்கை யுண்கமா கொற்கையோனே". இங்கே மாவென்னும் அசைச்சொல் உண்கவென்னும் வியங்கோள் வினையை யடுத்துவந்தது.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மா என்னுமிடைச்சொல் லிலக்கண முணர்த்திற்று.

**இ–ள்.:–** மாவென்னுமிடைச்சொல் வியங்கோள் வினையை யடுத்து வரும் அசைச்சொல்லாம், **எ– று.**

**வ–று.:–**

'மாயக் கடவுட் குயர்கமா வலனே' எனவும், 'புற்கை யுண்கமா கொற்கை யோனே' எனவும் வரும். இவற்றுள் உயர்க, உண்க என்னும் வியங்கோள் வினைகளை யடுத்து மாவென்னும் அசைச்சொல் வந்தவாறு காண்க. இச்சூத்திரம் **ஆசிரிய வசனம்.**

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– மா என்கிளவி** – 'மா' என்னுஞ்சொல், **வியங்கோள்** – வியங்கோளிடத்து வருகிற, **அசைச்சொல்** – அசைச்சொல்லாகும்.

**உ–ம் :–** "புற்கையுண்கமா கொற்கையோனே" –இதில், உண்க என்னும் வியங்கோள் அடுத்து அசையாய் வந்தது காண்க.

குறிப்பு :–

இனி **உரையிற்கோடலால்** – இவ்விடைச்சொல், 'ஓர்கமாதோழி', 'ஒக்கல்வாழ்க்கை தட்குமாகாலே' என வேறுவினையை அடுத்தும், தேவமாதத்தன் விசயமாதேவி உலோகமாபாலான் பாலமாகுமரன் எனப் பெயர்களின் இடையிலும் இசைநிறைப் பொருளதாய் வருதலுங் கொள்க.

இச்சூத்திரம் இவ்வாசிரியர் தொல்காப்பியத்தினின்று மெடுத்துக் கொண்டே மேற்கோள்

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:— மா என் கிளவி** — மாவென்னுஞ்சொல், **வியங்கோள் அசைச்சொல்** — வியங்கோளிடத்து வரும் அசைச்சொல்லாம், எ — று.

வ—று.:—

**"உப்பின்று — புற்கை யுண்கமா கொற்கை யோனே"** இங்கே மாவென்னும் அசைச்சொல் உண்கவென்னும் வியங்கோள் வினையை யடுத்து வந்தது.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள்.:— மா என் கிளவி** — மாவென்னுஞ்சொல், — **வியங்கோள் அசைச்சொல்** — வியங்கோளிடத்து வரும் அசைச்சொல்லாம். எ—று.

வ—று.:—

"உப்பின்று — புற்கை யுண்கமா கொற்கை யோனே" இங்கே மாவென்னும் அசைச்சொல் உண்கவென்னும் வியங்கோள் வினையையடுத்து வந்தது. (உப்பின்றிப் புற்கையையுண் என்பது பொருள்.)

## வை. மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ — ள்.:— மா என் கிளவி** — மா என்னுஞ் சொல், **வியங்கோள்**— வியங்கோளிடத்து வருகிற, **அசைச்சொல்** — அசைச்சொல்லாகும்; எ—று.

உ—ம்.:—

'புற்கை யுண்கமா கொற்கையோனே'— இதில், உண்க என்னும் வியங்கோளை அடுத்து அசையாய் வந்தது காண்க.

இனி, **உரையிற்கோடலால்** இவ்விடைச்சொல் **'ஓர்கமா தோழி', 'ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே'** என வேறுவினையை அடுத்தும்; **தேவமாதத்தன், விசயமாதேவி, உலோகமாபாலன், பாலமா குமரன்** எனப் பெயர்களின் இடையிலும் இசைநிறைப் பொருளதாய் வருதலும் கொள்க.

இது, **தொல்காப்பியச்** சூத்திரம்.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:— மா என் கிளவி** — மாவென்னும் இடைச்சொல், விளங்கோள் **அசைச்சொல்** — வியங்கோள் வினையை அடுத்து வரும் அசைச்சொல்லாம். எ—று.

உ—ம்.:—

"உப்பின்று — புற்கை யுண்கமா கொற்கை யோனே" — இங்கே மாவென்னும் அசைச்சொல் உண்கவென்னும் வியங்கோள் வினையையடுத்து வந்தது.

**கா. நமச்சிவாய முதலியார்**

**மா என் கிளவி** – மா என்னும் சொல், **வியங்கோள்**– வியங்கோளிடத்து வருகின்ற, **அசைச் சொல்** – அசைச்சொல்லாகும்.

**உதாரணம்**

'உப்பின்று,
புற்கை உண்கமா கொற்கை யோனே'

**மோசசு பொன்னையா**

மாவென்னும் இடைச்சொல் அசைநிலைப் பொருளில் வியங்கோள் வினையை ஒட்டி வரும் எ-று.

இது தொல்காப்பிய நூற்ப.

எ-டு.:-

மாயக் கடவுள் குயர்கமா வலனே.

**(21)**

**439. மியாயிக மோமதி யத்தை யித்தை
வாழிய மாள வீ யாழமுன் னிலையசை.**

**மியா இக மோ மதி அத்தை இத்தை
வாழிய மாள ஈ யாழ முன்னிலை அசை.**

miyā ika mō maṭi aṭṭai iṭṭai
vāḷiya māḷa ī yāḷa munnilai asai.

**இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )**

**Vocative particles**

The following (ten) particles are used (in poetry) after Verbs of the 2nd person: Miya, iku mo mati, attai, valiya, mala,and yala.

**ஒப்புமைப் பகுதி**

**மியாஇக மோமதி இகும்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்**

**(தொல். சொல்.: 274)**

**மியாயிக மோமதி யத்தை யித்தை
வாழிய மாளவீ யாழமுன் னிலையசை**

**(இ.வி.: 276)**

**இகுமியா யிகமதி மோசின் முன்னிலை
அசைச்சொல் லென்மனா ரறிந்திசி னாரே**

**(மு.வீ.: 663)**

**இத்தை அத்தை யாழ்இக மதிமான் ஆர்**
**மோமியா வாழிய முன்னிலை அசை பத்தே**

**(தொ. வி.: 137: 6–7)**

**மாளமியா மதிஇக மோ அத்தை இத்தை யாழ**
**வாழிய ஈயும்......**

**(சுவாமி.: 56:1)**

## மயிலை நாதர்

**எ–ன்**, மியா முதலிய இடைச்சொற்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

**இ – ள்**.:– மியாவும் இகவும் மோவும் மதியும் அத்தையும் இத்தையும் வாழியவும் மாளவும் ஈயும் யாழவுமென்னும் இப்பத்திடைச்சொல்லும் முன்னிலைக்கண் அசைநிலையாய் வரும், **எ–று**.

**வ–று**.:–

**"சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று, மலையகலான் வாடி வரும்"** (யா.வி.) எனவும், **"தண்டுறை** [1] ***யூரயாங் காண்டிகவெனவே"*** எனவும், **"காமஞ் செப்பாது கண்டது மொழிமோ"** (குறுந்.2) எனவும், **"சென்மதி பெரும"** எனவும், மெல்லியற் குறுமக ளுள்ளிச் செல்வலத்தை (புறநா. 196) எனவும், **"வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை"** (கலி.40) எனவும், **"காணியவா வாழிய மலைச்சாரல்"** (இ.வி.சூ.276, உரை) எனவும், **"சிறிது தவர்ந்தீக மாளநின்** [2]**பரிசில ருய்ம்மார்"** (இ.வி.சூ.276, உரை) எனவும், **"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ"** (அகநா.46) எனவும், **"நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின், கைபுனை வல்வின் ஞாணுளர் தீயே"** (கலி.7) எனவும் முறையே காண்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்**, மியா முதலிய இடைச்சொற்களின் இலக்கணம் **உணர் – ற்று**.

**இ–ள்**.: இங்ஙனம் கூறிய பத்து இடைச்சொற்களும் முன்னிலைக்கண் வரும் அசைநிலைகளாம், **எ–று**.

**வ–று**.:–

**"சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று, மலைய கலான் வாடி வரும்"** எனவும், **"தண்டுறையூர காணிக**

---

பாட **வேறுபாடு**.:–

1. **ஊரன் காண்டிக**
2. **பரிசில ருயிர்மார்**

**எனவே"** எனவும், **"காமம் செப்பாது கண்டது மொழிமோ"** எனவும் [2]**"சென்மதி பெரும"** எனவும், [3]**"மெல்லியற் குறுமகள் உள்ளிச்செல் வலத்தை"** எனவும், [4]**"வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை"** எனவும், **"காணிய வா வாழியமலைச்சாரல்"** எனவும், [5]**"சிறிது, தவிர்ந்தீக மாளநின் பரிசிர ருய்ம்மார்"** எனவும், [6]**"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே"** எனவும், [7]**"நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந்தியாழ"** எனவும் முறையே காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், முன்னிலையிடத்து வரும் இடைச்சொல் கூறுகின்றது.

**இ—ள்.:–** ***மியா*** – *"கேண்மியாவே"*, **இக** – *"காணிகமெனா"*, **மோ–** "காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" (குறு.2) **மதி** – செல்மதி பாங்கி", **அத்தை** – "குறுங்களிச் சொல்லத்தை", **இத்தை** – "அளிபோன்று பாடித்தை", **வாழிய** – "காணிய வாழிய மலைச்சாரல்", **மாள** – "சிறுமை தவிர்ந்தீக மாள", **ஈ** – "சென்றீ பெருமநிற் றகைக்குநர்யாரே" (அகம்.46), **யாழ** – "நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந்தியாழ" (கலி–7), **முன்னிலையசை** – இப்பத்திடைச் சொல்லும் முன்னிலை அசைச்சொல்லாய் வரும், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** *மியா முதலாகிய சில இடைச்சொற்களி னிலக்கண முணர்த்துகின்றது.*

**இ—ள்.: மியா**– யிக மோமதி யத்தை யித்தை வாழிய மாள வீ, **யாழ** – மியா இகமோ மதி அத்தை இத்தை வாழியமாள ஈ யாழ என்கிற பத்திடைச்சொற்களும், **முன்னிலை** – முன்னிலையிடத்து வருகிற, **அசை**–அசைச்சொற்களாம், **எ—று.**

வ—று.: சென்மியா, தண்டுறையூர்காணிக, கண்டதுமொழிமோ, சென்மதிபெரும, குறுமகளுள்ளிச்செல்வத்தை, நீயொன்றுபாடித்தை, வாழி வாழிய, தவிர்ந்தீகமாள, சென்றீபெரும, செலவயர்தியாழ என்பதாம்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

முன்னிலையசை இடைச்சொற்கள் யாவை?

மியாயிக மோமதி யத்தை யித்தை

வாழிய மாளவீ யாழமுன் னிலையசை.

(மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈ யாழ முன்னிலை அசை.)

**இ—ள்.:**– மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈ யாழ என்னும் பத்திடைச்சொற்களும் முன்னிலையிடத்துவரும் அசைச்சொற்களாம். **எ—று.**

**வ—று.:–**

*மியா–கேண்மியா, சென்மியா.*

இக – "தண்டுறையூர காணிக வென்வே"

மோ – "காமஞ் செப்பாது கண்டது மொழிமோ"

மதி – "சென்மதி பெரும்"

அத்தை – "சொல்லிய ரத்தைநின் வெகுளி"

இத்தை – "வேய் நரல் விடரக நீயொன்று பாடித்தை"

வாழிய – "காணியவாவாழியமலைச்சாரல்"

மாள – "சிறிது–தவிர்ந்தீக மாளநின் பரிசில ருய்ம்மார்"

ஈ – "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே"

யாழ – "நீயே செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழ"

## முகவை இராமானுச கவிராயர்

இது, முன்னிலை யசைச்சொல் இவை யென்கின்றது.

இ–ள்.:– மியா, இக, மோ, மதி, அத்தை, இத்தை, வாழிய, மாள, ஈ, யாழ என்னு மிப்பத்திடைச்சொற்களும் முன்னிலையிடத்து வரும் அசைச்சொற்களாம், எ–று.

வ–று.:–

'சிலையன் செழுந்தழையன் சென்மியா' என மியாவும், 'தண்டுறை யூர காணிக' என இகவும், 'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ' என மோவும், 'சென்மதி பெரும' என மதியும, 'சொலிய ரத்தைநின் வெகுளி' என அத்தையும், 'நீயொன்று பாடித்தை' என இத்தையும், 'காணிய வா வாழிய மலைச்சாரல்' என வாழியவும், 'சிறிது தவிர்ந்தீக மாளநின் பரிசில ருயமமார்' என மாளவும், 'செனறீ பெருமநிற் றகைக்குநர் யாரே' செனறீ என்பதில செல முன்னிலை வினைச் சொல, ஈ முனனிலையசை அது றகர வொறறை யூர்ந்து நிறக, முனனிற லகர வொறறு னகரவொற்றாயத் திர்ந்து நின்றது ஆதலால் இதுவும், 'நீயே. செய்வினை மருங்கிற் செலவயர்ந்தியாழ' செலவயர்ந்தாய் என்னும பொருள்பட நின்ற அயர்நதி என்பது முன்னிலை வினை யாதலால் அடுத்துநின்ற யாழவும், முன்னிலையசைச் சொற்களாய் நின்றவாறு முறையே காண்க.

இனித் திருமுருகாற்றுப்படையுள், 'விழுமிய பெறலருமபரிசி, னல்குமதி பலவுடன் மலைகிழ வோனே' என மதி யென்னும் அசைசசொல் படர்க்கையிடத்து வருதலைப் புறனடையாற் கொள்க. 'மியாயிக' என்ற இடத்து, 'மாயிருஞால' மென்றாற் போல யகரமெய் தோன்றி நின்றது 'மியாயிக மோமதி யிகுஞ்சின

னென்னு – மாவயி னாறு முன்னிலை சொல்' என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க. மியா முதலியவை அசைச்சொல் என முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை** :– **மியா*****யாழ – இப்பத்து இடைச்சொற்களும், **முன்னிலை** – முன்னிலையிடத்து வருகிற, **அசை** – அசைச்சொற்களாம்.

**உதாரணம் :**

| | |
|---|---|
| மியா – சொல்மியா, | இத்தை – பாடித்தை. |
| இக – காணிக | வாழிய – காணியவாவாழிய |
| மோ – மொழிமோ | மாள – தவிர்ந்தீகமாள |
| மதி – செல்மதி | ஈ – சென்றீ பெரும |
| அத்தை – சொல்லியரத்தை. | யாழ – நீயே–செலவயர்ந்தியாழ |

**குறிப்பு :–**

மா + இரு = மாயிரு என்றாற்போல, மியா + இக = மியாயிக எனப் புணர்ந்தது, "இடையுரி வடசொலின்" என்னுஞ் சூத்திரவிதியால்.

இனி, திருமுருகாற்றுப்படையில் "விழுமிய – பெறலரும் பரிசி னல் குமதிபல வுடன் – ***மலைகிழ வோனே" எனப் படர்க்கையில் வந்தது புறனடையால் என்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– மியா யாழ** – மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈ யாழ என்னும் பத்திடைச்சொற்களும் **முன்னிலை அசை** – முன்னிலையைடத்து வரும் அசைச்சொற்களாம், எ–று.

வ–று.:–

| | | |
|---|---|---|
| மியா | – | "சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று மலையகலான் வாடி வரும்" |
| இக | – | "தண்டுறையூ காணிக வெனவே" |
| மோ | – | "காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" |
| மதி | – | "சென்மதி பெரும" |
| அத்தை | – | "செல்லிய ரத்தைநின் வெகுளி" |
| இத்தை | – | "வேய் நரல் விடரக நீயொன்று பாடித்தை" |
| வாழிய | – | "கலாணிய வாவா ழியமலைச் சாரல்" |
| மாள | – | "சிறிது – தவிர்ந்தீக மாளநின் பரிசிலரும்மார்" |

ஈ – "சென்றி பெருமநிற் றகைக்நர் யாரே"

யாழ – "நீயே – செய்வினை மருங்கிற் செலவயர்ந்தி யாழ"

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– மியா – யாழ** – மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈ யாழ, என்னும் பத்திடைச் சொற்களும், – முன்னிலை அசை – முன்னிலையிடத்து வரும் அசைச் சொற்களாம். **எ – று.**

**வ–று.:–**

மியா ---- "சிலையன் செழுந்தழையன் சென்மியா
வென்று மலையகலான் வாடி வரும்."

இக ----- "தண்டுறையூர காணிக வெனவே."

மோ ----- "காமஞ் செப்பாது கண்டது மொழிமோ"

மதி ----- "சென்மதிபெரும"

அத்தை -- "சொல்லிய ரத்தைநின் வெகுளி"

இத்தை -- "வேய் நரல் விடரக நீயொன்று பாடித்தை"

வாழிய --- "காணிய வாவா ழியமலைச் சாரல்"

மாள --- "சிறிது – தவிர்ந்திக மாளநின் பரிசில ருய்ம்மார்"

ஈ ------- "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே"

யாழ ----- "நீயே–செய்வினை மருங்கிற் செலவயர்ந்தியாழ."

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– மியா...யாழ** – இப்பத்து இடைச்சொற்களும். **முன்னிலை** – முன்னிலையிடத்து வருகிற. **அசை** – அசைச்சொற்களாம்; **எ–று.**

**உ–ம்.:–**

மியா – **'சொல்மியா'**

இக – **காணிக,**

மோ – **மொழிமோ,**

மதி – **'செல்மதி'**

அத்தை – **சொல்லியரத்தை,**

இத்தை **'நீயொன்று பாடித்தை',**

வாழிய– **'காணிய வாழிய',**

மாள – **'தவிர்ந்தீகமாள'**

ஈ – **'சென்றீ பெரும'**

யாழ – 'நீயே செலவயர்ந்தியாழ'.

மா + இரு-மாயிரு என்றாற்போல, மியா + இக=மியாயிக எனப் புணர்ந்தது. **"இடையுரி வடசொலின்"** என்னும் சூத்திரவிதியால்

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– மியா.....யாழ** – மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈ யாழ என்னும் இப் பத்திடைச் சொற்களும், **முன்னிலை அசை** – முன்னிலை யிடத்து வரும் அசைச்சொற்களாம். எ–று.

**உ–ம்.:–**

மியா –– "சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று மலையகலான் வாடி வரும்."

இக –– "தண்டுறையூர காணிக வெனவே."

மோ –– "காமஞ் செப்பாது கண்டு மொழிமோ."

மதி –– "சென்மதி பெரும."

அத்தை –– "சொல்லிய ரத்தைநின் வெகுளி"

இத்தை –– "வேய் நரல் விடரக நீ யொன்று பாடித்தை."

வாழிய –– "காணிய வாவா ழியமலைச் சாரல்."

மாள –– "சிறிது – தவிர்ந்தீக மாளநின்பரிசிலருய்ம்மார்."

ஈ –– "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே."

யாழ ––"நீயே – செய்வினை மருங்கிற் செலவயர்ந்தியாழ."

'மா + இரு = மாயிரு' என்றாற்போல 'மியா + இரு = மியாயிக' எனப் புணர்ந்தது 'இடையுரி வடசொலின்' என்னும் 239–ஆம் சூத்திரவிதியால்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– மியா யாழ** – மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈ யாழ என்கிற பத்து இடைச்சொற்களும், **முன்னிலை** – முன்னிலையிடத்து வருகிற, **அசை** – அசைச் சொற்களாம். எ – று.

**பொ–ரை.:–** மியா முதலிய பத்து இடைச் சொற்களும் முன்னிலைக்கண்வருகிற அசைச்சொற்களாம்.

| | |
|---|---|
| மியா | சென்மியா. |
| இக | தண்டுறையூர காணிக. |
| மோ | கண்டது மொழிமோ. |
| மதி | சென்மதி பெரும. |
| அத்தை | சொல்லிய ரத்தைநின் வெகுளி. |
| இத்தை | நீயொன்று பாடித்தை. |
| வாழிய | வாழி வாழிய. |
| மாள | தவிர்ந்தீக மாள. |
| ஈ | சென்றீ பெரும. |
| யாழ | செலவயர்ந் தியாழ. |

(மா+இரு=மாயிரு என்றாற் போல, மியா+இக=மியாயிக எனப்புணர்ந்தது; "இடையுரி வட சொலின்" என்னும் சூத்திரவிதியால்.

## கா. நமச்சிவாய முதலியார்

**யா.... யாழ** – மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈயாழ என்னும் பத்து இடைச்சொற்களும், **முன்னிலை** – முன்னிலை யிடத்து வருகின்ற, **அசை** – அசைச்சொற்களாம்.

**உதாரணம்**

1. மியா – சிலையன் செழுந்தழையன் சென்**மியா**.
2. இக – தண்டுரையூர யாங் **காணிக**.
3. மோ – கண்டது மொழி**மோ**.
4. மதி – சென்**மதி** பெரும.
5. அத்தை– செலிய **ரத்தை** நின்வெகுளி.
6. இத்தை – நீயொன்று பாடி**த்தை**.
7. வாழிய – காணியவா **வாழிய** மலைச்சாரல்.
8. மாள – சிறிதுதவிர்ந், தீக **மாள**நின் பரிசில ரும்மார்.
9. ஈ – சென்றிபெரும நிற்றகைக்குநர் **யாரோ**.
10. யாழ – செய்வினை மருங்கிற் செலவயர்ந் **தியாழ**.

## மோசகூ பொன்னையா

மியா, இக, மோ, மதி, அத்தை, வாழிய, மாள, ஈ, யாழ என்னும் பத்து இடைச்சொற்களும் முன்னிலை அசைச் சொற்களாம் எ–று.

**எ-டு.:-**

சென்மியா, காணிக, மொழிமோ, சென்மதி

செல்வலத்தை, பாடித்தை, காணியவா வாழிய

தவிர்ந்தீகமாள, சென்றீபெரும, செலவயர்ந்தியாழ

தொல்காப்பியர்

**மியாயிக மோமதி யிகுஞ்சின் னென்னு**

**மாவயி னாறு முன்னிலை யசைச்சொல்,**

என முன்னிலையசைச் சொற்களென ஆறையே குறிப்பிட்டார். மியாயிக எனப் பின்னுயிராற்றலால், யகர வுடம்படுமெய் பெற்று, 'இசஐவழி'2 என்னும் விதப்பையும் எஞ்சி நின்றது.

**(21)**

**440. யாகா பிறபிறக் கரோபோ மாதிகும்**
**சின்குரை யோரும் போலு மிருந்திட்**
**டன்றாந் [1]தாந்தான் கின்றுநின் றசைமொழி.**

யா கா பிற பிறக்கு அரோ போ மா திகும்
சின் குரை ஒரும் போலும் இருந்திட்டு
அன்று ஆம் தாந்தான் கின்று நின்று அசைமொழி.

yā kā piṟa piṟakku arō pō māṭu ikum
siṉ kurai ōrum pōlum iruṇṭu ittu
aṉṟu ām ṭām ṭāṉ kiṉṟu niṉṟu asaimoḻi.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு )

### Expletive Particle

The following twenty particles maybe used as expletives (in all places and in all words): ya, ka, pira, pirakku, aro, po, matuikum, cin, kurai, orum, polum, iruntu, ittu, anru, am, tam, tan, kinru, and ninru.

## ஒப்புமைப் பகுதி

யாகா
பிறபிறக் கரோபோ மாதெனவரூஉம்
ஆயேழ் சொல்லு மசைநிலைக் கிளவி

(தொல். சொல்.: 279)

ஆக ஆகல் என்பது என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை

(தொல். சொல்.: 280)

யாகா பிறபிறக் கரோபோ மாதிகுஞ்
சின்குரை யோரும் போலு மிருந்திட்
டன்றாந் தாந்தா னென்னா லென்ப
வன்ன பிறவு மசைநிலை மொழியே

(இ.வி.: 277)

அத்து அந்தில் அன்று அம்ம ஆங்க அரோ ஆம் ஆல்
இட்டு இகும் குரை கா இருந்து இன்று ஒரும்

---

பாட வேறுபாடு:-

1. தந்தான்

**சின் தம் தான் நின்று தில் பிற பிறக்கு**
**மன்மா மன்னோ மாது யா மாதோ**
**போலும் போம் எனப்பொது அசை முப்பதே**

**(தொ.வி.: 137: 1–5)**

................ பிற பிறக்கு அரோப் போ
**கோள் இருந்திட்டு அன்றாந் தந்தான் என்ஆல் என்ப**
**குரை ஓர் போல் யா கா மாது இகும் சின் முதலியவே**
**ஆளும் அசைநிலைகள் இசைநிலையும் பேர் வினையும்**
**அளபுஇரக்கந் திரிபடுக்கும் குறிப்புமாய்ப் பணியே**

**(சுவாமி.: 56: 2–4)**

## மயிலை நாதர்

**எ–ன்,** யா முதலிய அசைநிலை யிடைச்சொற்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:–** இவ்விருபதிடைச் சொல்லும் அசைநிலை மொழிகளாம் **எ–று.**

**வ–று.:–**

"வாழ்கநின் கழலடி மைந்த வென்னவே, தோழியா சுவாகதம் கீங்கென" (சீவக 1021) எனவும், "அறநிழ லெனக்கொண் டயாய்குடை யக்குடைப், புறநிழற் கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா" (கலி.99) எனவும், "மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ, ராயனையல்லை பிறவோ வமரருள், ஞாயிற்றுப் புத்தேண் மகன்" (கலி.108) எனவும்,

"பிறத்தல் பிணிப்படன் மூத்த லிறத்தல், திறப்பட்ட நான்கினுந் தீர்விதற் கென்னென இறத்தலு மாங்கொ லெனக்குமென் றெண்ணிப், பிறக்கதனுட்செல்லான் பெருந்தவப் பட்டான்" எனவும், "தூதவர் விடாராய்த் துறப்பார்கொ னோதக, இருங்குயி s hY knuh" (f È.33) vd î «, "vÇÆd ‹ d [1]செந்தலை யன்றில், பிரியின் வாழா தென்போ [2]மன்ற" எனவும், "விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவெங் கண்ணே" (நற் 178) எனவும், "கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே"(ஐங்குறு.121–8) எனவும், "சாந்த ஞெகிழி காட்டி, ஈங்கா கியவா லென்றுசின்"(நற்.55) எனவும், "அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே" (புறநா.5) எனவும், "அஞ்சுவதோரு மறனே யொருவனை, வஞ்சிப்ப தோரு மவா" (குறள்.366) எனவும், "வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்" எனவும், "ஓராற்றா லென்கண்ணிமை பொருந்த வந்நிலையே.

---

பாட **வேறுபாடு.:–**

1. செழுந்தலை
2. தெய்ய

கூரார்வேன் மாறனென் கைப்பற்ற – வோரா, நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன், கனவு மிழந்தோழிந்த வாறு" (முத்), "அஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியார், னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன், வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்" (கலி.101), "தேவாதி தேவ னவன்சேவடி சேர்து மன்றே"(சீவக.1) எனவும், "பணியுமா மென்றும் பெருமை சிறுமை, அணியுமாந் தன்னை வியந்து" (குறள்.978) எனவும், "தகைமிகு [1]குழைந்தருந்தாந் தாவில் சீர்த் தம்மடிக்கண், முகைமிகு மலர்க்கண்ணி" எனவும், "சாந்துய ரெவ்வமுழந்துறு தண்புனல், நீந்தியோர் மாண்பினை தோன்றலி னிதான்" எனவும், "யான்பிற னளியன் வாழ்வா னாசைப்பட் டிருக்கின் றேனே" (சீவக.1487) எனவும், "அழலடைந்த மன்றத் [2]தலந்தயரா நின்றார், நிழலடைந்தே நின்னையென் றேத்திக் – கழலடைய" (பு.வெ. 3 : 7), ஊரினின்று வந்தார் எனவும், முறையே வந்தவாறு காண்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், யா முதலிய இடைச்சொற்களின் இலக்கணம் உணர் – ற்று.

இ–ள்.:– இவ்விருபது இடைச்சொல்லும் முன்னைய போலாது எல்லாவிடத்தினும் எல்லாச்சொல்லினும் வரும் அசைச் சொல்லாம், எ – று.

விதவாமையின் எல்லாவிடத்தினும் எல்லாச்சொல்லினும் வரும் என்பது பெற்றாம்.

வ – று.:–

"வாழ்கநின் கழலடி மைந்த என்னவே
தோழியா சுவாகதம் போத வீங்கிதென்"

எனவும்,

"அறநிழ லெனக்கொண்டாய் நின்குடை அக்குடைப்
புறநிழற் கீழ்ப்பட்டாளோ இவளிவட் காண்டிகா"

எனவும்,

"மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோர் ஆயனை யல்ல பிறவோ"

எனவும், "பிறக்கதனுட் செல்லான் பெருந்தவப் பட்டான்" எனவும், "நோதக இருங்குயில் ஆலுமரோ" எனவும், "எரியின் அன்ன செந்தலை அன்றில் பிரியின் வாழாது என்போ தெய்ய"

---

பாட வேறுபாடு.:–

1.குழைதந்தார் தாவில்சீர்த் தம்மடிக்கண்

2. அரந்தையராய்

எனவும் "விளிந்தன்று மாதோ தெளிந்ததெம் கண்ணே" எனவும், "கண்டிகு மல்லமோ கொண்க" எனவும், "ஈங்கா யினவால் என்றிசின்" எனவும் " அது பெறலருங் குரைத்தே" எனவும், "அஞ்சுவ தோரும் அறனே" எனவும், "வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்" எனவும்,

**"ஓராற்றா லென்கண் ணிமைபொருந்த அந்நிலையே**
**கூரார்வேல் மாறனென் கைப்பற்ற – ஓரா**
**நனவென் றெழுந்திருந்தேன் நல்வினையொன் றில்லேன்**
**கனவும் இழிந்தொழிந்த வாறு"**

எனவும், "நெஞ்சம் பிளந்திட்டு" எனவும், "தேவாதி தேவனவன் சேவடி சேர்தும் அன்றே"எனவும்,

**"பணியுமாம் என்றும் பெருமை சிறுமை அணியுமாம்**
**தன்னை வியந்து"**

எனவும், 'நீர்தாம்' எனவும், 'நீதான்' எனவும், "யான் பிறன் அளியன் வாழ்வான் ஆசைப்பட் டிருக்கின்றேன்" (ஆசைப்பட்டேன் என்பது பொருளாதலின் '**கின்று**' என்பது நிகழ்கால இடைநிலையன்று) எனவும்,

[15]"அழலடைந்த மன்றத் தரந்தயராய் நின்றார்
நிழலடைந்தே நின்னையென் றேத்தி"

எனவும் முறையே காண்க. பிறவும் அன்ன.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** அசைநிலைக்கண் வரும் இடைச்சொல் இத்தனையெனக் கூறுகின்றது.

**இ–ள்.:–** யா – "தோழியா சுவாகதம் போத வீங்கென' (சீவக.1021), **கா** – "இவளிவட் காண்டிகா" (கலி.99), **பிற** – "ஆயனையல்லை பிறவோ" (கலி.108), **பிறக்கு** – "எண்ணிப் பிறக்கனுட் செல்லான் பெருந்தவப் பட்டான்", **அரோ** – "கூர்வாமரோ", **போம்** – "வாழா தென்போ மென்ற", **மாது** – "விளிந்தன்று மாதவர்" (நற்.178), **இகும்** – "கண்டிகு மல்லமோ" (ஐங். 121–28), **சின்** – "உணர்ந்திசினோரே", **குரை** – "அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே" (புறம்.5), **ஒரும்** – "அஞ்சுவ தோரு மறனே யொருவனை, வஞ்சிப்பதோரு மவா" (குறள்.366), **போலும்** – "வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்", **இருந்து** – "நனவென் றெழுந்திருந்தேன்" (முத்தொள்.), **இட்டு** – "நெஞ்சம் பிளந்திட்டு" (கலி.101). **அன்று** – "தேவாதி தேவ னவன்சேவடி சேர்து மன்றே" (சீவக.1), **ஆம்** – "பணியுமா மென்றும் பெருமை சிறுமை, யணியுமாந் தன்னைவியந்து" (குறள்.978), **தாம்** – "... தாவில்சீர்த் தாமடிகள்", **தான்** – "மாண்பினை தோன்றலி னீதான்", **கின்று** – "ஆசைப்பட் டிருக்கின்று வந்தேன்". **நின்று** – "அயரா நின்றார், நிழலடைந்தே நின்னை" (பு.வெ.42), ஊரினின்று வந்தார், **அசைமொழி** – இவ்விருபது இடைச்சொல்லும் அசைநிலை மொழிகளாம், எ–று.

## விசாகப் பெருமாளையர்

இது, யா முதலிய விடைச்சொற்களி னிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.:– யா நின்று** – யா கா பிற பிறக்கு அரோபோமாது இகும் சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் தாம் தான் கின்று நின்று என்கிற இருபதிடைச்சொற்களும், **அசைமொழி** – எல்லாவிடங்களிலும் வருகிற அசைச்சொற்களாம், எ–று.

**வ–று.:–**

யா பன்னிருவர் மாணாக்க ரகத்தியனார்க்கு, இவளிவட் காண்டிகா, ஆயனையல்லபிற, நசைபிறக்கொழிய, குயிலாலுமரோ, வாழாதென்போ, விளிந்தன்றுமாதோ, காண்டிகுமல்லமோ, என்றிசின், பலகுரைத்துன்பம் அஞ்சுவதோருமறனே, வருந்தினைபோலும், எழுந்திருந்தேன், பிளந்திட்டான், போதுமன்றே, பணியுமாமென்றும், நீர்தாம், நீதான், ஆசைப்பட்டிருக்கின்றேன் ; துணையாய் நின்றான் எனவரும்.

## ஆ- முத்துத்தம்பிப் பிள்ளை

அசைச்சொல்லாய் எல்லாவிடங்களிலும் வரும் இடைச்சொற்கள் யாவை?

யாகா பிறபிறக் கரோபோ மாதிகுஞ்

சின்குரை யோரும் போலு மிருந்திட்

டன்றாந் தாந்தான் கின்றுநின் றசைமொழி.

(யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும் சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் தாம் தான் கின்று நின்று அசைமொழி.)

**இ–ள்.:–** யா யா பிற பிறக்கு அரோ போ மாது இகும் சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் தாம் தான் கின்று நின்று என்னும இருபதிடைச்சொற்களும் எல்லாவிடங்களிலும் வரும் அசைச்சொற்களாம். எ–று.

**வ–று.:–**

யா – ா பன்னிருவர் மாணாக்க ரகத்தியனார்க்கு.

கா – "புரநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா"

பிற – "ஆனையல்லைபிற"

பிறக்கு – "பிறக்கிதனுட், செல்லான் பெருந்தவம் பட்டான்"

அரோ – "நோதக விருங்குயி லாலு மரோ"

போ – "பிரியின் வாழா தென்போ"

மாது – "விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே"

இகும் – "காண்டிகு மல்லமோ கொண்க."

சின் – "தீக்கா கியவா லென்றிசின்"

குரை – "அது பெறலங் குரைத்தே"

ஒரும் – "அஞ்சுவ தோரு மறனே"

போலும் – "வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்"

இருந்து – "நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன்றில்லேன்"

இட்டு – "நெஞ்சம் பிளந்திட்டு"

அன்று – "பிர மாபுர மேவிய பெம்மானிவ னன்றே"

ஆம் – "பணியுமா மென்றும் பெருமை சிறுமை அணியுமாந் தன்னை வியந்து"

தாம் – " நீர்தாம்.

தான் – " நீதான்.

கின்று – "வார்வா னாசைப்பட் டிருக்கின்றேன்."

நின்று – "அழலடைந்த மன்றத் தரந்தையராய் நின்றார் நீழலடைந்தே நின்னையென் றேத்த"

கயல்போலுங்கண் என்புழிவரும் போலுமென்பது ஒப்புமையுணர்த்துஞ்சொல். வருந்தினைபோலும் என்புழிவரும் போலும் என்பது ஒப்புமையுணர்த்துவதன்றுட அஃதுரையசை.

மேற்சொல்லப்பட்டனவன்றிச் சொல்லப்படாதன பலவுள. அவற்றை இடைச்சொற்குக் கூறிய விலக்கணங்கொண்டா ராய்ந்துணர்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, எல்லாவிடத்தும் வரும் அசைச்சொற்களிவை யெனத் தொகுத்து உணர்த்துகின்றது.

**இ–ள்.:– யா–கா–பிற–பிறக்கு–அரோ – போ– மாது – இகும் – சினை – குரை – ஒரும்– போரும் – இருந்து, இட்டு – அன்று – ஆம் – தாம் – தான் – கின்று – நின்று** – என்னும இருபது இடைச்சொல்லும் முன்னைவை போலாகாது எல்லாவிடத்தனுமெல்லாச் சொல்லினும் வரும் அசைச்சொற்களாம், **எ–று.**

பொதுப்படக்கூறலால் – எல்லாவிடத்தும் எல்லாச் சொல்லினும் வருமென்பது பெற்றாம்.

**வ–று.:–**

யா பன்னிருவர் மாணாக்கர் அகத்தியனார்க்கு, என – யா–வும், புறனிழற்பட்டாளோவிவட்காண்டிகா – என–கா–வும், ஆயனையல்லைபிற – என–பிற–வும், பிறக்கிதனுட் செல்லான் பெருந்தவம்பட்டான் – என – பிறக்கு–ம், இருங்குயிலாலுமரோ – என – அரோவை–வும், எரியினன்ன செந்தலையன்றில் பரியின் வாழாதென்போ – எனப் போ––வும், விளிந்தன்று மாதோ – என – மாது–ம், காண்டிகுமல்லமோகொண்க – கண்டோமல்லமோ – எனக்கூட்டி – இகும் – என்பதும், ஈங்காயினவா லென்றிசின் – என்றி – என்றாய், என்னும் முன்னிலைவினை – சின் – ம், அது பெறலருங்குரைத்தே – அது பெறலருமைத்து –எனக்கொண்டு

– ஒரும், வருந்தினை போம் – எனப்போரும், எழுந்திருந்தேன் – எழுந்தேனெனக் கொண்டு – இருந்து–ம், நெஞ்சம்பிளந்திட்டு – என – இட்டு–ம், சேர்துமன்றே – என – அன்று –ம், பணியுமாமென்றும் பெருமை – என – ஆம்–ம், நீர்தாம் – எனத் – தாம் – ம், நீதான் – எனத் – தான் – ம், ஆசைப் பட்டிருக்கின்றேன் – ஆசைப்பட்டேன் எனக்கொண்டு – கின்று – ம், இதனுள் – இருவும் அசைநிலை, அழலடைந்த மன்றந் தாரந்தையராய் நின்றார் – அரந்தையராகினார் எனக்கொண்டு – நின்று–ம், அசைநிலையென முறையேகாண். பிறவுமன்ன. (சூ) யாகா – பிறபிறங்ரோபோமாதெனவரு – உ – மா – யேழ் சொல்லுமசை நிலைக்கிளவி – என ஆசிரியர் தொல்காப்பியனாரும் எல்லாவிடத்தும் எல்லாச் சொல்லினும் வருமசைச் சொல் என்பது தோன்றப் பொதுப்படக் கூறலுங்காக். யா அசைநிலைகா– அசைநிலை எனத் தனித்தனி கூட்டியாவது – யாவுங்காவுமென வெண்ணி அசை நிலையெனப் பயனிலை கொடுத்தாவது முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **யா***நின்று** – இவ்விருபது இடைச்சொற்களும், **அசைமொழி** – (எல்லா விடங்களிலும் வருகிற) அசைச்சொற்களாம்.

**உதாரணம் :**

| | | | |
|---|---|---|---|
| யா | – யா பன்னிருவர் மாணாக்கர் | ஒரும் | – அஞ்சுவதோருமறனே. |
| கா | – இவள் காண்டிகா | போலும் | – மகிழ்ந்தனைபோலும் |
| பிற | – ஆயனை யல்லை பிற. | இருந்து | – எழுந்திருந்தேன் |
| பிறக்கு | – பிறக்கிதனுட் செல்லான் | இட்டு | – பிளந்திட்டான் |
| அரோ | – குயிலாலுமரோ | அன்று | – சேர்துமன்றே. |
| போ | – வாழாதென்போ | ஆம் | – பணியுமாமென்றும் |
| மாது | – விளித்தன்றுமாதோ | தாம் | – நீர்தாம் |
| இகும் | – காண்டிகுமல்லமோ | தான் | – நீதான் |
| சின் | – என்றிசின் | கின்று | – ஆசைப்பட்டிருக்கின்றேன் |
| குரை | – பலகுரைத்துன்பம் | நின்று | – துணையாய்நின்றான். |

குறிப்பு :– 'ஆசைப்பட்டிருக்கின்றேன்' என்பது – ஆசைப்பட்டே னென்றும், துணையாய் நின்றான் என்பது – துணையானான் என்றும் பொருள்படுமிடத்து கின்று, நின்று – அசைநிலைகள்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– யா .... நின்று** – யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும் சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் தாம் தான் கின்று நின்று என்னும்

இருபதிடைச்சொற்களும், அசை மொழி–எல்லாவிடங்களிலும் வரும் அசைச்சொற்களாம், எ – று.

வ – று.:

யா –– "யா பன்னிருவர் மாணாக்க ரகத்தியனார்க்கு."

கா–– "புறநிழற் பட்டாளோ விவளிவட்காண்டிகா."

பிற–– "ஆயனை யல்ல பிற."

பிறக்கு– "பிறக்கிதனுட் செல்லான் பெருந்தவம் பட்டான்."

அரோ–– "நோதக விருங்குயி லாலுமரோ."

போ–– "பிறியின் வாழா தென்போ."

மாது–– "விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே."

இகும்–– "காண்டிகு மல்லமோ கொண்க."

சின்–– "தீங்கா கியவா லென்றிசின்,"

குரை–– "அது பெறலருங் குரைத்தே."

ஒரும்–– "அஞ்சுவ தோரு மறனே."

போலும்– "வடுவென்ற கண்ணாய் வருந்தினைபோலும்."

இருந்து– "நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன்."

இட்டு–– "நெஞ்சம் பிளந்திட்டு."

அன்று– "பிரமாபுர மேவிய பெம்மா னிவ னன்றே."

ஆம்–– "பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து."

தாம் –– "நீர் தாம்."

தான்–– "நீ தான்."

கின்று – "வாழ்வா னாசைப்பட் டிருக்கின்றேன்"

நின்று– "அழலடைந்த மன்றத் தரந்தையராய் நின்றார் நிழலடைந்தே நின்னையென் றேத்த."

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.;– யா–நின்று – யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும்சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் தாம் தான் கின்று நின்று என்னும் இருபதிடைச் சொற்களும், – அசைமொழி – எல்லாவிடங்களிலும் வரும் அசைச்சொற்களாம். எ – று.

வ–று.:–

யா–––––யா பன்னிருவர் மாணாக்க ரகத்தியனார்க்கு

கா––––––"புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா."

பிற------"ஆயனை யல்லபிற"

பிறக்கு--"பிறக்கிதனுட் செல்லான் பெருந்தவம் பட்டான்"

அரோ----"நோதக விருங்குயிலாலு மரோ."

போ-----"பிரியின் வாழா தென்போ."

மாது---"விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே"

இகும்---"காண்டிகு மல்லமோ கொண்க"

சின்-----"தீங்கா கியவா லென்றிசின்"

குரை---"அது பெறலருங் குரைத்தே"

ஒரும்---"அஞ்சுவதோருமறனே"

போலும்–"வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்"

இருந்து–"நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன்"

இட்டு--"நெஞ்சம் பிளந்திட்டு"

அன்று–"பிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே"

ஆம்----"பணியுமா மென்றும் பெருமை சிறுமை அணியுமாந் தன்னை வியந்து"

தாம்---நீர்தாம்

தான்--நீதான்

கின்று–"வாழ்வானாசைப்பட்டிருக்கின்றேன்"

நின்று–"அழலடைந்த மன்றத் தரந்தையராய் நின்றார் நிழலடைந்தே நின்னையென் றேத்த."

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– யா...... நின்று – இவ்விருபது இடைச்சொற்களும், **அசைமொழி** – (எல்லாவிடங்களிலும் வருகிற) அசைச்சொற்களாம்; எ–று.

உ–ம்.:–

யா – **'யா பன்னிருவர் மாணாக்கர்'**. அரோ– **'குயிலாலு மரோ'**.

கா – **'இவள் காண்டி கா'**. போ– **'வாழாதென் போ'**.

பிற – **'ஆயனை யல்ல பிற'**. மாது – **விளிந்தன்று மாதோ.**

பிறக்கு– **'பிறக்கதனுட்செல்லான்'** இகும்– **'காண்டிகுமல்லமோ'**.

சின் – **'என்றிசின்'.** அன்று – **'சேர்ந்து மன்றே'.**

குரை – **'பலகுரைத் துன்பம்'.** ஆம் – **'பணியுமாவென்றும்'.**

ஒரும் – **'அஞ்சுவ தோரு மறனே'.** தாம் – **'நீர்தாம்'.**

போலும் – **'மகிழ்ந்தனை போலும்'.** தான் – **'நீதான்'.**

இருந்து – **'எழுந்திருந்தேன்'.** கின்று– **'ஆசைப்பட்டிருக்கின்றேன்'.**

இட்டு – **'பிளந்திட்டான்'.** நின்று– **'துணையாய் நின்றான்'**

ஆசைப்பட்டிருக்கின்றேன் என்பது, ஆசைப்பட்டேனென்றும், துணையாய் நின்றான் என்பது துணையானானென்றும் பொருள்படுமிடத்து, கின்று, நின்று – அசைநிலைகள்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். யா.....நின்று யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும் சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் தாம் தான்.

– இது தொல்காப்பியம் இடையியல் 25–வது சூத்திரம்.

கின்று நின்று என்னும் இருபதிடைச்சொற்களும், அசைமொழி – எல்லாவிடங்களிலும் வரும் அசைச்சொற்களாம். எ–று.

(உ–ம்.) யா –– யா பன்னிருவர் மாணாக்க ரகத்தியனார்க்கு.

கா –– "புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா."

பிற –– "ஆயனை யல்லபிற."

பிறக்கு –– "பிறக்கிதனுட் செல்லான் பெருந்தவம் பட்டான்."

அரோ –– "நோதக விருங்குயி லாலுமரோ."

போ –– "பிரியின் வாழா தென்போ."

மாது –– "விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே."

இகும் –– "காண்டிகு மல்லமோ கொண்க."

சின் –– "தீங்கா கியவா லென்றிசின்."

குரை –– "அது பெறவலருங் குரைத்தே."

ஒரும் –– "அஞ்சுவ தோரு மறனே."

போலும் –– "வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்."

இருந்து –– "நனவென் றெழுந்திருந்தே னல்வினை யொன்றில்லேன்."

இட்டு –– "நெஞ்சம் பிளந்திட்டு."

அன்று — "பிரமாபுர மேவிய பெம்மா னிவ னன்றே."

ஆம் — "பணியுமா மென்றும் பெருமை சிறுமை – அணியுமாந் தன்னை வியந்து."

தாம் — நீர்தாம்.

தான் — நீதான்.

கின்று — "வாழ்வா னாசைப்பட் டிருக்கின்றேன்." (இதில் 'இரு' என்பதும் அசை நிலை.)

நின்று — "அழலடைந்த மன்றத் தரந்தையராய் நின்றார் – நிழலடைந்தே நின்னையென் றேத்த."

ஈண்டு, 'அசைப்பட்டிருக்கின்றேன்' என்பது 'ஆசைப்பட்டேன்' எனவும், 'அரந்தையராய் நின்றார்' என்பது 'அரந்தையரானார்' எனவும் பொருள்படும் (22)

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ – ள்.) யா . . . . . . . . . . . . . . . . . . . . நின்று – யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும் சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் காம் தான் கின்று நின்று என்கிற இருபது இடைச் சொற்களும், அசை மொழி – எல்லா இடங்களிலும் வருகிற அசைச் சொற்களாம். (எ–று)

(பொ–ரை.) யா கா முதலிய இருபது இடைச் சொற்களு முன்னையபோலாது எல்லா இடத்திலும், எல்லாச் சொல்லிலும் வருகிற அசைச் சொற்களாம்.

(உ – ம்.)

1. யா — யா பன்னிருவர் மாணாக்க ரகத்தியனார்க்கு.
2. கா — இவளிவட்காண்டி கா.
3. பிற — ஆயனையல்ல பிற.
4. பிறக்கு — நரச பிறக்கொழிய.
5. அரேப — குயிலாலு மரோ.
6. போ — வாழாதெக் போ.
7. மாது — விளிந்தன்று மாதோ.
8. இகும் — காண்டிகுமல்லமோ.
9. சின் — என்றிசின்.
10. குரை — பலகுரைத்துன்பம்.
11. ஒரும் — அஞ்சுவதோருமறனே.

12. போலும் வருந்தினை போலும்.

13. இருந்துஎழுந்திருந்தேன்.

14. இட்டு பிளந்திட்டான்.

15. அன்று பணியுமாமென்றும்.

16. ஆம் பணியுமாமென்றும்.

17. தாம் நீர்தாம்.

18. தான் நீ தான்.

19. கின்று ஆசைப்பட்டிருக் கின்றேன்

20. நின்று துணையாய் நின்றான்.

(ஆசைப்பட்டிருக்கின்றேன் என்பது – ஆசைப்பட்டடேனென்றும், துணையாய் நின்றான் என்பது – துணையானா னென்றும் பொருள்படுமிடத்து, கின்று, நின்று அசைநிலைகள்.)

## கா. நமச்சிவாய முதலியார்

**யா.... நின்று** – யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும் சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் தாம் தான் கின்று நின்று என்னும் இருபது இடைச்சொற்களும், **அசைமொழி** – (எல்லா இடங்களிலும் வரும்) அசைச் சொற்களாம்.

**உதாரணம்**

1. யா – யா பன்னிருவர் மாணாக்கர்அகத்தியனார்க்கு
2. கா – புறநிழற் கீழ்ப்பட்டாளோ இவளிவட் காண்டிகா.
3. பிற – ஆயனை யல்லை **பிற**.
4. பிறக்கு – நசை**பிறக்கொ**ழிய.
5. அரோ – இருங்குயலாலு**மரோ**.
6. போ – பிரியின்வாழாதென்**போ**.
7. மாது – விளிந்தன்று **மா**தவர்த்தெளிந்த எங் கண்ணே.
8. இகும் – காண்டிகு மல்லமோ கொண்க.
9. சின் – ஈங்காகியவாலென்**றிசின்**. என்றி – என்றாப் என்னும் முன்னிலைவி**னை**.
10. குரை – அதுபெறலருங்**குரை**த்தே.
11. ஒரும் – அஞ்சுவ **தோரும்** அறனே.
12. போலும் – வடுவென்ற கண்ணாய் வருந்தினை **போலும்**.
13. இருந்து – எழுந்**திருந்**தேன். (எழுந்தேன்)
14. இட்டு – நெஞ்சம் பிளந்**திட்டு**.

15. அன்று – சேவடிசேர்தும் **அன்றே.**
16. ஆம் – பணியு**மாம்** என்றும்.
17. தாம் – **நீர்தாம்.**
18. தான் – **நீதான்**
19. கின்று – வாழ்வான் ஆசைப்பட்டிருக்**கின்றேன்**. (ஆசைப் பட்டிருந்தேன்)
20. நின்று – துணையாய் **நின்றாய்** (துணையானாய்)

## மோசசு பொன்னையா

யா, கா, பிற, பிறக்கு அரோ, போ, மாது, இகும், சின், குரை, ஒரும், போலும், இருந்து, இட்டு, அன்று, ஆம், தாம், தான், கின்று, நின்று என்னும் இருபது இடைச் சொற்களும் மூவிடங்களிலும் வரும் அசைச் சொற்களாம் **எ-று.**

எ–டு.;–

1. தோழியா சுவாகதம் போது கீங்கென–யா
2. இவளிவட் காண்டிகா–கா
3. ஆயனை யல்லபிற–பிற
4. இறத்தலு மாங்கொ லெனக்குமென் றெண்ணிப்
   பிறக்கதனுட் செல்லான் பெருந்தவப் பட்டான்
   பிறக்கு
5. நோதக விருங்குயி லாலு மரோ–அரோ
6. பிரியின் வாழா தென்போ–மாது
7. விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் நெஞ்சே–போ
8. காண்டிகு மல்லமோ கொண்க–இகும்
9. ஈங்காகியவா லென்றிசின்–சின்
10. அது பெறலருங் குரைத்தே–குரை
11. அஞ்சுவ தோரும் அறனே–ஒரும்
12. வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்–போலும்
13. நனவென் றெழுந்திருந்தேன்–இருந்து
14. நெஞ்சம் பிளந்திட்டு–இட்டு
15. தேவாதி தேவன் சேவடி சேறுமன்றே–அன்று
16. பணியுமாம் என்றும் பெருமை–ஆம்
17. நீர்தாம்–தாம்
18. நீதான்; அவளுந்தான்–தான்
19. வாழ்வா னாசைப்பட் டிருக்கின்றேன்–கின்று
20. அழலடைந்த மன்றத் தரந்தையராய் நின்றார்–நின்று

தொல்காப்பியர்,

யாகா

**பிறபிறக் கரோபோ மாதென வரூஉம்**

**ஆயேழ் சொல்லு மசைநிலைக் கிளவி**

என ஏழே ஓதினாராக இவர் புதியன புகுதலாக ஏனையவற்றையும் உடன் கொண்டு கூறினார் என அறிக.

தொல்காப்பியர் எடுத்துக் கூறிய கொன், எற்று, மன்ற, தஞ்சம், எல், ஆர் என்னும் தத்தம் பொருளவாய இடைச்சொற்களை இவ்வாசிரியர் கூறாது விடுத்தார். இவற்றுள் எல்லென்பது உரிச்சொல் நீர்மைத்து என்பது சேனாவரையர் கருத்து. அவர் அம்ம, ஆங்க, போலும் (ஒப்பில் போலி) என்ற மூன்றையும் உரையசைப் பொருளாம் கேட்பிக்கும் பொருள் எனக் கூறவும், இவ்வாசிரியர் ஒப்பில் போலியாம் போலும் என்பதை மூவிடத்தும் வரும் அசை நிலை என்றார். அவர், முன்னிலை அசைநிலைகளென்ற இகும், சின் என்னும் இரண்டையும்; இசைநிறையாகவும், அசைநிலையாகவும் வரும் என்ற குறை என்பதையும்; ஒரும், இருந்து, இட்டு, ஆம், தாம், தான், கின்று, நின்று என்பனவற்றையும் மூவிட அசைநிலைகளோடு இவ்வாசிரியர் கூட்டியுரைத்தார். அவர் ஆகல்ஆகல், என்பதுஎன்பது, ஔஔ என்பன பிரிவில் அசைநிலைகளாக வரும் என்றதை, இவ்வாசிரியர் விடுத்தார். வழக்கு நோக்கித் தெய்ய என்ற ஒன்றைக் கூட்டி முடித்தார். இவை ஆய்வுக்குரியவை.

(22)

நன்னூல் உரைவளம்

இடைச்சொல்லியல் முற்றிற்று.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை-ஒப்பனையியல் | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்றுகாதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| Essays and Tributes on Tirukkural (1886-1986) | 100.00 |
| இந்தியச் சூழலில் மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் பார்வை | 60.00 |
| நீறணி பவளக் குன்றம் | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| கலீலியோ முதல் கலாம் வரை | 35.00 |
| குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம் | 60.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்சமூலம்- ஒரு சமூகவியல் பார்வை | 30.00 |
| சங்கத் தமிழ் பகுதி 1 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 2 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 3 | 115.00 |
| சங்கத் தமிழ் பகுதி 4 | 130.00 |
| சங்கத் தமிழ் பகுதி 5 | 110.00 |
| ம.பொ.சி.யின் வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள் | 60.00 |
| தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும் | 160.00 |
| இந்தி நாடகப்பனுவல் (ஆடிமாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு | 40.00 |
| Freudism in the Novels of James Joyce and T.Jankiraman: A comparative study | 125.00 |
| இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல் | 290.00 |
| தென்கிழக்கு ஆசியா நாடுகளில் தமிழ்ப்பண்பாடு | 310.00 |
| பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப்புத்துரையும் | 170.00 |
| தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் | 185.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மொழிபெயர்ப்பு:ஒரு கவின்கலை | 75.00 |
| மூவர்தமிழ் மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா-மொபசான் சிறுகதைகள்-ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| சங்க அகப்பாடல்கள் தோழி கூற்று | 170.00 |

---

**704 நன்னூல் உரைவளம் – 16 (இடைச்சொல்லியல்) 90.00**